# என்னுரை

ஈழத்தைவிட்டு புலம் பெயர்ந்த எமது முதற் பரம்பரையின் வாழ்வு அனுபவம் எப்படி இருந்தது என்பதைப் பொறுத்து அவர்கள் சமுதாய எல்லைகள் வகுக்கப்பட்டன. அவர்கள் நாடு விட்டு வேற்று நாட்டிற்கு வந்தபோதும் தாங்கள் சிறுபிராயத்தில் கற்ற சமுதாய எல்லைகளைத் தொடர்ந்தும் கடைப்பிடித்தனர். கடைப் பிடிக்க போராடுகின்றனர். அந்த எல்லைகளே உலகில் உன்னதமானது என்பதை வலுவாக நம்புகின்றனர். அதைத் தங்கள் உயிராக நினைக்கின்றனர். தங்களது அதே சமுதாய எல்லைகளை தங்கள் பிள்ளைகள் மேலும் கண்மூடித்தனமாய் திணிக்கின்றனர். தங்களால் எது சரியான எல்லை என்று கணிக்கப்படுகிறதோ அதற்குள் அவர்களும் நிற்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறார்கள். எதிர்பார்ப்பு வேறு நடைமுறை வேறு. விட்டுக்கொடுப்பில்லாத எதிர்பார்ப்பு உறவின் முறிவுகளை வரவேற்கும்.

இங்கு பிறந்து வளரும் பிள்ளைகளின் வாழ்வு அனுபவம் அப்பா அம்மாவின் உக்கிப் போன எல்லைகளைத் தகர்க்கும். ஐரோப்பிய கலாச்சாரமே அவர்கள் எல்லைகளாகும். சில புறநடையாக இருக்கலாம். எதுவும் எழுதப்படாத அவர்கள் மூளையில் இந்தக் கலாச்சாரம் இலகுவாகப் பதிகிறது. அந்தச் சமுதாய எல்லைக்குள் அவர்கள் அதிகம் வாழ்ந்து வருவதால் அதை அவர்கள் தங்கள் சமுதாய எல்லைகளாக வரிக்கின்றனர். அங்குதான் பிரச்சனை உண்டாகிறது. அப்பா அம்மாவின் உக்கிய கற்பனை எல்லைகள் இங்குள்ள நிஜ எல்லைகளை மாற்ற முயல்கிறது.

இதுதான் என் சமுதாயம், இப்படி நான் சுதந்திரமாய் வாழலாம் என்பது விளங்கிய பின்பு, குழந்தைப் பிள்ளையிடம் மிட்டாயை கொடுத்துவிட்டுப் பறிப்பது போல் இது இல்லை உன் சமுதாயம், இது இல்லை உன் சுதந்திரம் என்பது அவர்களைக் குழப்புகிறது. எது எங்கள் கலாச்சாரம்? எது எங்கள் சமுதாய அடையாளம்? என்கின்ற அடையாளக் குழப்பமான இரண்டு தோணிப் பயணம் ஆரம்பமாகிறது. இந்தக் குழப்பமான அடையாளத் தளும்பல் நிலை அவர்களின் எதிர்கால வாழ்வுக்கு ஆபத்தானது.

எங்கள் கலாச்சாரத்தைத் திணிப்பதற்குக் காட்டும் அக்கறையை அவர்களோடு சேர்ந்து, அவர்களின் வளர்ச்சிக்கு ஊக்கம் ஊட்டுவதில், அவர்களின் பால்யப் பிராயத்தில் செலவிடத் தவறிவிடுகிறோம். இன்றும் அளவுக்கு அதிகமான செலவுகளை உற்பத்தி செய்து அதற்குச் சம்பாதிக்க அலைவதிலேயே புலம்பெயர்ந்தவர்களின் காலம் போகிறது. தனிமையில் அல்லது நிறுவனங்களில் காலத்தை போக்கும் பிள்ளைகள், தொலைக்காட்சி, நண்பர்கள், ஆசிரியர் என்பதாக அவர்களின் சமுதாயத்தில் ஒன்றி அந்த எல்லைகளை வரித்துக் கொள்கிறார்கள். சங்கீதமோ தமிழ் வகுப்புகளோ அவர்கள் சிந்திக்கும் மொழியையும், சிந்திக்கும் விதத்தையும், இந்தச் சமுதாயத்தைப் பார்க்கும் முறையையும் மாற்றிவிட முடியாது.

பிள்ளைகள் பெரியவர்கள் ஆனவுடன் அவர்கள் தாய் தகப்பனின் கட்டுப்பாட்டை மீறி தமது எல்லைகளுக்குள் உள்ள சுதந்திரத்தை எடுக்கிறார்கள். பெற்றோரால் அதைத் தாங்கிக் கொள்ள முடிவதில்லை. வருங்காலச் சந்ததி தொடர்ந்தும் தமிழர்களாய் இருக்க வேண்டும் என்பது எமது விருப்பம். விருப்பம் வேறு திணிப்பு வேறு. எதையும் நாங்கள் திணிக்க முடியாது. அது தர்மமும் அல்ல. அதுவும் இங்கு எதையும் யார் மீதும் திணிக்க முடியாது. அது சட்ட விரோதம்கூட. அப்படித் திணித்தால் அவர்கள் பதின்நான்கு வயது தாண்டியதும் தங்கள் சுதந்திரத்தை தாங்கள் எடுத்துக் கொள்வார்கள். அப்படி எடுக்கும் போது எங்கள் உக்கிய சமுதாய எல்லைகள் குறுகிய ஒரு வட்டமாக அவர்களால் தூக்கி எறியப்படும். அது பெரும் பாதிப்பாகப் பலருக்கு அமைந்த விடும்.

புலத்தில் உள்ளவர்கள் தங்கள் வருங்காலச் சந்ததிகளைப் புரிந்து தங்களைத் தயார் செய்து கொண்டால் வருங்காலச் சமுதாயத்தோடான உறவைப் பேணிக் கொள்ளலாம். மாற்றம் காலத்தின் கட்டாயம். அதற்கு மாறாக வளைந்து கொடுக்காவிட்டால் அவர்கள் வேறு ஒரு பிரபஞ்சத்தை நோக்கிப் பயணிக்கலாம். நாங்கள் என்ன செய்யப் போகின்றோம்? இது ஒரு விவாதத்தின் தொடக்கமாக இருக்கட்டும்.

என் இலக்கியப் பயணத்திற்கு உலகம் எங்கும் இருந்து ஆதரவு தரும் வாசகர்கள் ஆகிய உங்களுக்கும் எனது மனமார்ந்த நன்றிகள்.

அன்புடன்

இ.தியாகலிங்கம்


**http://www.karainagaran.com**
**ratnamt67@gmail.com**
**http://www.facebook.com/karai.nakaran**




‘அந்த அவிசாரி செத்துப் போனாள்’ எனக் கறுவிய சண்முகம் சோபாவில் ஓங்கி அறைய, இருண்டு கிடந்த வரவேற்பு அறையில் தூசி, புகையாக மேலெழுந்து ஜன்னல் இடுக்கில் கசிந்த ஒளிக்கீற்றில், எலியும் பூனையுமாக விளையாடியது. துடைப்பத்தைத் தொலைத்த அந்த வீட்டில் தூசியின் படிவு பற்றி யாருக்கும் கவலை இல்லை. கவலையே வாழ்க்கையாகிப் போய்விட்ட அதிர்ச்சியில் திகைத்துப் போய் இருக்கும் தம்பதிகள், அன்றாட வாழ்வை மறந்து, தங்களைச் சுற்றி வளைத்து இருக்கும் ஏகாந்தத்தில் அந்தரித்தனர். யதார்த்த உலகில் பணத்திற்கு அலையும் மனிதர்கள். சகமனிதன் பிணம் வீட்டிற்குள் அழுகுவதைக்கூடக் கவனிக்க முடியாத அவர்கள் ஓட்டம். அவமானம் என்று திரையிட்டால் மனநோயாளியாக மாற வேண்டிய யதார்த்தம். அதையும் தாண்டி வருபவன் சொல்லடியாற் துடிக்க வேண்டும் என்கின்ற நியதி. சண்முகத்திற்குப் பலத்த சொல்லடி கிடைத்தன. அவன் துவண்டான். திமிறினான். மனித இனத்தின் மீது வெறுப்போடு, துவசம் செய்யும் விருப்போடு, பரசுராமனாய் அலைந்தான். இந்த நாட்டிலும்கூட சட்டங்கள் மனதைக் கோட்டை விட்டதாக அவன் மருண்டான். சண்முகம் அடிக்கடி துர்ரத்தே வெறிப்பான். அப்பொழுது எதுவும் இல்லாத அந்தரத்தில் எதையோ தேடுவதாக அவன் விழிகள் நிலைக்கும். திடீரென கோபாவேசம் கொள்ளுவான். கமலத்தைப் பேசுவான். பின்பு தொடர்ந்தும் முகட்டை வெறிப்பான். கண்கள் கலங்குவான்.

சண்முகத்தின் சவரம் செய்யப்படாத முகத்தில் பூஞ்சணம் பரவியதாகக் கிளம்பி இருந்த வெள்ளை ரோமங்கள். இளமை தணிய முதுமை வந்து விட்டதை நித்தமும் சொல்லும் அதன் கோலங்கள். நான்கு திசையும் நோக்கும் வாரப்படாத கேசம். பிசினாகப் பூழை படிந்த கண்களில் இடுக்குகளில் என்றும் கனலும் கோபம். காய்ந்த கறுப்பான உதடுகளின் அடிவாரத்தில் வெள்ளையாகப் படிந்த சளி. மூக்கில் இருந்து எட்டிப் பார்க்கும் சில ரோமங்கள். அக்கறை அற்று அணிந்திருந்த ஒரு மேற்சட்டை. அதற்குமேல் நீல நிறத்தில் தும்பு பறந்த சுவேற்ரர். அதையும் மீறி பாலைவன வெடிப்புக்களாகப் பொருக்கு தெரியும் அவன் கைகள். ஏன் வாழ வேண்டும் என்பது புரியாது வாழ்வதான அவன் தோற்றம்.

மற்றைய சோபாவில் கமலம் யோசனையில் ஆழமாய் தாண்டு இருந்தாள். அவள் உதடுகளிலும் பாலைவன வெடிப்புகள். தலை வாராது அள்ளி முடிந்த அலங்கோலம். முகமெல்லாம் எண்ணெய் காணாத பொருக்கு. அழுத்திப் பிடித்தால் வெடித்து விடுமோ என்கின்ற மெல்லிதான தோல். குங்குமம் மறந்த பாழ்பட்ட நெற்றி. கண்களில் கடையில் உப்பு படிந்த வறண்ட கடலின் அடையாளம். என்றும் தலையை தாங்கும் அவள் கைகள். இந்த உலகில் இல்லாத இருப்பு. இழவு விழுந்த வீடாக மனதிற்குள் அழும் மனிதர்களின் சுவாசத்தால் கொதிக்கும் குணம் மாறிய

காற்றின் அடர்த்தி. இந்தக் கணத்தில் வாழ மறந்த அந்த மனிதர்களின் வாழ்வு கடந்த காலத்தில் அமர்க்களப்பட்டது. இன்று அதன் சுவட்டின் சுவடுகூடத் தெரியாத சோகத்தின் வக்கிர ஆக்கிரமிப்பு.

வசதியான தனிவீடு. வீட்டைச் சுற்றிய பரந்த வளவு. வளவை வரையறுக்கும் மதில்கள். சந்தடி இல்லாத சிறிய ஒழுங்கைகளின் சலனமற்ற வளைவுகள். ஒப்சாலில் உள்ள தனி வீடுகளில் இதுவும் ஒன்று. ஒப்சால் நகரை அண்டிய பகுதிகளில் உயர்ந்த மாடிக் கட்டடங்கள் இருந்தன. அதன் மையப் பகுதி வசதிகளின் மையம். வசதிகளின் மையங்கள் சிலவேளை வம்புகளின் மையங்களாவதும் உண்டு. சில இடங்களில் வசதிகளின் மையங்களில் பணக்காரர்கள் குடியிருப்பது இல்லை. ஏழைகளின் குடியிருப்பிற்கு வரையறையாக இருப்பது விலை மட்டுமே. இந்த வீடுகளில் இரண்டு அறைகள் அல்லது மூன்று அறைகள் இருக்கும். அதில் இரண்டு பிள்ளைகளோடு வாழ்வதே போராட்டமாகும். மன்னிக்க வேண்டும். இது நோர்வேயின் பொருளாதாரத்தில் இருந்து புறப்பட்ட கணிப்பு.

ஒப்சாலின் மறுகரை காட்டுப் பகுதியோடு கை குலுக்குகிறது. பிள்ளைகளோடு குடும்பமாக வசிப்பதற்குக் கட்டப்பட்ட தொடர் வீடுகள் அந்தப் பக்கம் அதிகம். நடுத்தர வசதி கொண்ட இளம் குடும்பங்கள் எழுபதுகளில் அங்கு வீடுகள் வாங்கினர். அவர்கள் பிள்ளைகள் இறக்கை முளைத்ததும் இணைகளோடு பறந்து போயினர். அதன் பின்பும் வெறும் கூட்டை அடைகாக்கும் பறவைகள் போல அவர்கள் வாழ்க்கை.

இரண்டிற்கும் மத்தியில் அமைதியான இடத்தில் வசதி படைத்தவர்களின் பெரிய வீடுகள். அந்த வீடுகளில் சண்முகத்தின் வீடும் ஒன்று. சண்முகத்தின் வீட்டைச் சுற்றிப் பசுமை. அதில் ஆப்பிள் மரங்கள் பல. நிலத்தில் விழுந்து இயற்கையின் தகனத்தை எதிர்பார்த்துக் கிடக்கும் சருகுகள். இயற்கையின் போக்கில் கட்டையும், நெட்டையுமான வளர்த்தியில் வெட்டப்படாத புற்கள். அதிலே சில கோடைக்காலத்து அழகு வண்ணாத்திப் பூச்சிகளின் மேய்ச்சல். வெளிறிய காகம் இரண்டின் வெறிக்கும் பார்வை. அவை துருவத்திலும் தமது இருப்பைப் பிரகடனப்படுத்தக் கரைகின்ற அவசரம்.

சண்முகத்தின் வீட்டின் வலப் பக்கமாகக் கார் விடுவதற்கான கொட்டகை. வாசலில் இருந்து தெருவரையும் விரிந்துகிடந்த சீமேந்துப் பாதை. வீட்டில் ஐந்து அறைகள். இரண்டு குளியல் அறைகள். இரண்டு கோல்கள். ஒரே ஒரு பிள்ளை. அந்தப் பிள்ளையும் இன்று அங்கு இல்லை என்கின்ற வெறுமை, பரிதவிப்பு, விரக்தி, கோபம்... உணர்ச்சி என்னும் கறுப்புச் சுழிக்குள் விழுந்து கரையேற முடியாத மனிதர்களின் ஓயாத போராட்டம், ஏக்கம். வீட்டில் இருந்து இரண்டு நிமிடங்கள் நடந்தால் சுரங்கரதம், பாடசாலை, நூல்நிலையம், கடைகள், என எல்லா வசதிகளும் ஒருங்கே அமைந்த இடம். இரண்டு கார்கள் வீட்டில் நின்றன. ஒன்று கமலம் பாவித்தது. மற்றையது சண்முகம் பாவித்தது. இசையும் பணமும் நிறைந்து கிடந்த இறந்த காலம். அது இறந்த காலமாகி அவர்கள் தலையில் இடியாக இறங்கிய சோக வாழ்வு. அதன் தொடர்ச்சி அவர்களே இனம்காண முடியாது மாறிப்போன பேரதிர்ச்சி.

இந்த வீட்டில் இப்போது எங்கும் தூசின் ஆட்சி. தொலைக்காட்சியில் அது படையாக காட்சிகளுக்குத் திரை போடுவதான கோலம். இருட்டை விரும்பும் மனிதர்களாக நன்கு திரையிடப்பட்ட ஜன்னல் கண்ணாடிகள். அதில் தடித்த திரையின் விசுவாசமான ஒளியின் உறிஞ்சல்.

வயலின் பெட்டியும், சுருதிப் பெட்டியும் கோலின் ஒரு மூலையில் அனாதரவாய் தூசி படிந்து கிடக்கும் கோலம். அதை இனி இங்கு தொடுவார் யாரும் இல்லை என்பது எழுதப்படாத பிரகடனம். கலை கலைக்காக என்று கமலம் தொடங்கிய பயணம். கலையில் காசும் புரளும் என்பது அவள் கற்றுக்கொண்ட இடையில் வந்த அனுபவம். பயணங்கள் சில வேளைகளில் பாதை மாறிப் போய்விடுகின்றன. கொள்கைகள் சிலவேளை விட்டுக்கொடுப்பிற்குத் தலை சாய்க்கின்றன.

சமையல் அறையில் இருந்து வரும் அழுகிய உணவின் நாற்றம். அது பற்றி எந்தக் கவலையும் இல்லாத அந்த மனிதர்கள். இருக்கும் இடத்தில் இல்லாத வெறுப்பில் தொலைந்த வாழ்க்கை. உள்ளங்கள் நினைவுகளோடு எங்கோ தொலைந்துவிடப் பிண்டங்களை சுமக்கும் சோபாக்களின் பெருமூச்சு... வாசம், நாற்றம், சுத்தம், அசுத்தம், கோலம், அலங்கோலம் என்கின்ற நிலைகள் கடந்ததான பற்றறுத்த வெறுப்பு நிலை?

‘அவள் செத்தொழிஞ்சாள் எண்டு நான் மனசில காடாத்திப் போட்டன். இனி அவள் எனக்கு மகளும் இல்லை, நான் அவளுக்கு அப்பனும் இல்லை. உனக்கும் இனி அவளின்ர ஞாபகம் இருக்கக் கூடாது. ஓம்... சொல்லிப் போட்டன். எனக்கும் உனக்கும் பிள்ளையள் எண்டு இனி யாரும் கிடையாது. எங்களுக்குக் கொள்ளியில்லை. வாய்க்கரிசிகூடக் கிடையாது. ஓ அதுதான் நாங்கள் செய்த குடுப்பினை.’

சண்முகம் கண் கலங்கினான். தன்னைக் கட்டுப்படுத்த முடியாது விம்மி விம்மி அழுதான். பிள்ளையே இல்லை என்கின்ற உண்மை பழுக்கக் காய்ச்சிய வேலாக அவன் இதயத்தில் பாய்ந்தது. அவன் முகம் வேதனையில் ஆயிரம் கோணங்களாகக் கோணியது. கண்ணீர்த் துளிகள் நட்சத்திரத் துகள்களாய் உதிர்ந்து உருண்டன. கவலை குமுறலோடு கோபமாகப் பொங்கியது. மீண்டும் கோபாவேசத்தோடு பேசத்தொடங்கினான்.

‘என்னை மீறி ஏதும் கொண்டாட நினைச்சா என்ர பிணத்தைத் தாண்டித்தான் கொண்டாட முடியும். ஓம் சொல்லிப் போட்டன். அவிசாரி இங்க வந்தாலோ, இல்லாட்டி நீ போனாலோ நீயும் அவிசாரிதான். அதுக்குப் பிறகு உனக்கும் எனக்கும் உறவு முறிஞ்சு போயிடும். நான் மானஸ்தன். ஒரு சொல்லு ஒரு வார்த்தைதான். ஓம்... ஞாபகம் வைச்சிரு.’

அவன் கண்கள் கோபத்தில் லாசர் கண்களாக ஒளி வீசக் கமலத்தைப் பார்த்த வண்ணம், கையில் வைத்திருந்த கண்ணாடிக் குவளையில் நீர் தளும்ப சண்முகம் அதைக் கோபத்தோடு கூறினான். அவர் பிடித்திருந்த இறுக்கத்தில் கண்ணாடிக் குவளை நொறுங்கிக் கையைக் கிழித்து விடுமோ எனக் கமலத்திற்குப் பயமாகியது. அவரையோ, தன்னையோ சமாதானப்படுத்த உலகில் வார்த்தைகள் இல்லை என்கின்ற தவிப்பில் நாவெளாது அவள் துடித்தாள். கண்கள் பனித்தன. தேம்பல் கொதி ஆவியாக எழுந்தது.

‘கமலம் இனியும் அந்த அவிசாரியின்ர போட்டோ இந்த வீட்டில இருக்கக் கூடாது. அவளை ஞாபகப்படுத்துற எந்தச் சாமானும் என்ர கண்ணில படக்கூடாது. நீ என்ன செய்தாலும் சரி, நான் அதை இனிப் பார்க்கக் கூடாது. எனக்கு ஒரு மகள் இருந்தாள் எண்ட ஞாபகமே வரக் கூடாது. அப்பிடி ஏதும் நடந்தா நான் கொலைகாரனாகிடுவன். ஓ ஞாபகம் வைச்சிரு...’
கமலம் அமைதி ஒழித்தாள்.

‘சத்து அமைதியா இருங்க அப்பா. எனக்கு மாத்திரம் கோபமும், கவலையும் இல்லையே? நான் இவள் இப்பிடியெல்லாம் செய்வாள் எண்டு முதலில யோசிக்கேல்ல. முத்தின பிறகு என்னால கட்டுட்படுத்த முடியேல்ல? உங்களுக்குச் சாடைமாடையா எத்தின தரம் சொல்லி இருப்பன். நீங்களும் கண்டு கொள்ளேல்ல. நான் என்ன செய்வன்? நான் என்ன பாவம் செய்தன் எண்டு எனக்கு தெரியேல்ல?’

கமலம் தனது முகத்தைக் கைகளால் பொத்திய வண்ணம் குலுங்கிக் குலுங்கி அழுதாள். சண்முகம் அவளை வெறித்துப் பார்த்தான். எல்லாம் இவளால் வந்தது என்பதே அவன் எண்ணம். புகழுக்காய் மகளைத் தொலைத்தவள் என மனதில் எண்ணினான். அது கமலத்தின் மீது அவனுக்கு வெறுப்பை உண்டு பண்ணியது.
சோகம் நிசப்தமாக அலை மோதியது. அது பின்பு சொற் கண்டு இடம் விட்டு ஓடியது.
‘என்ர பெயர், புகழ் எல்லாம் போச்சுது. ஐயோ நான் எங்க போய் இதைச் சொல்லுவன்.’
கமலம் அமைதியை விரட்டித் தலையில் அடித்து மீண்டும் அழுதாள்.
‘உன்ர பெயர்? அதையே சொல்லு. அதாலதான் இந்தக் குடும்பமே அழிஞ்சு போச்சுது. என்ர பிஸ்னஸ், என்ர மானம், மதிப்பு எல்லாம் கப்பலேறிப் போச்சுது. உன்ர புகழ் இல்லாமல் வாழ்ந்து இருக்கலாம். இப்ப மானம் இல்லாமல் வாழேலுமே? உன்ர எடுப்பால தான் அப்பிடியாப் போச்சுது. இந்தக் கிலிசகேடு எல்லாம் உன்ர வளப்பால வந்தது. நீ ஒழுங்கா அவளை வளத்து இருக்கோணும். ஊரில இருக்கிற ஞான சூனியங்களை எல்லாம் கூட்டிக்கொண்டு போய்ப் பள்ளிக்கூடத்தில இருந்து சா பா சொல்லிக் குடுத்தாய். வீட்டில தனிய இருந்த பெட்டை நாசமாப் போச்சுது. உன்ர புகழுக்காக என்ர பெட்டை நாசமாப் போச்சுது. உனக்கு இது இப்ப எண்டாலும் விளங்குதே?’

சண்முகத்தைக் கமலம் இப்போது முறைத்துப் பார்த்தாள். அவளுக்குத் தன்மேல் மட்டுமே பழி போடுவது பிடிக்கவில்லை. ஆத்திரம் பொறுக்க முடியாது குமுறினாள்.

'என்ர வளர்ப்பு எண்டு சொல்லி என்னில மட்டும் பழியைப் போடுங்கோ. ரீச்சற்ற புருசன், ரீச்சற்ற புருசன் எண்டேக்க பல்லை மாத்திரம் இழிச்சுக்கொண்டு திரிஞ்சியள். அப்ப ஏன் உங்களுக்கு இந்த ஞானம் வரேல்ல? உங்களுக்கு மட்டும் அவள்ள அக்கறை இருந்ததே? காசு காசு எண்டு அலைஞ்சியள். அந்தக் காசைக் குடுத்து மானத்தை வாங்கேலுமே? வாங்கேலாது எல்லே? மருந்தையாவது வாங்கியாங்கோ. நான் குடிச்சுப்போட்டு செத்துப் போறன். என்னாலதானே எல்லாம் எண்டுறியள். நான் செத்துப் போனா உங்களுக்கு நிம்மதிதானே? மானம் போனபிறகு என்னாலும் மரக்கட்டையா எத்தினை நாளைக்கு வாழேலும்? என்னையே பழி சொல்லுற உங்களோடும் இனி அண்டலிக்கேலாது.'

'விசர்க் கதை கதைச்சுக் கொண்டு இருக்காதையும். நான் அப்பவே உந்தச் சங்கீத பூஞ்சானத்தை எல்லா விட்டிட்டு வீட்டில இருந்து அவளைப் பார் எண்டு படிச்சுப் படிச்சுச் சொன்னனான். சங்கீதத்தை விடமுடியுமே? அதுவும் ஒரு கதையோ? சங்கீதத்தையும் பார்த்து அவளையும் பார்க்கலாம் எண்டா. இப்ப நீ பார்த்த வள்ளல பார்த்து ஊரே சிரிக்குது. மனிசர காண்றதே எனக்குச் சத்திராதியாப் போச்சுது.'

'ஐயோ நான் இப்ப என்ன செய்ய? என்னையேன் இப்பிடிச் சித்திரவதை செய்யறியள்?'

'உன்ன நான் எங்கை சித்திரவதை செய்யிறன்? நடந்ததைச் சொல்லுறன். அதுக்கேன் இப்ப கூப்பாடு போடுறா? நீ கூப்பாடு போட்டாலும் எங்களைத் திரும்பிப் பார்க்க இங்க ஒரு நாயும் கிடையாது.'

'நடந்ததைக் குத்திக் காட்டி என்ன செய்யப் போறியள்? பட்ட சீர்கேட்டை இனி மாத்த முடியுமே?'

'முடியாது. அது கட்டையில ஏறும் வரையும் மாறாது. ஆனா, என்னைக் கொலைகாரன் ஆக்கக் கூடாது. ஓம்... சொல்லிப் போட்டன்.'

'உங்களை யார் கொலைகாரன் ஆக்கினது?' கமலம் சண்முகத்தைக் கோபமாகப் பார்த்தாள்.
சண்முகம் மீண்டும் கண் கலங்கினான். அவன் கைகள் அவன் வயப்படாது நடுங்கின. அவன் கையில் இருந்த கண்ணாடிக் குவளையில் இருந்து தளும்பிய நீரில் சில துளிகள் தலை குத்தி நிலத்தில் வீழ்ந்தன. வீட்டு நிலம் மரத்தால் ஆனது. முன்பு அதில் நீர் பட்டால் யாராவது பாய்ந்து துடைத்திருப்பார்கள். மரத்தாலான நிலத்திற்கு நீர் ஒத்துக் கொள்ளாது என்பதில் அவ்வளவு கவனம். வீட்டின் பழுதுகள் அதன் விலையில் பங்கம் உண்டு பண்ணிவிடும் என்கின்ற அவதானம். இன்று அந்த அக்கறை தொலைந்து போன சங்கதி. துக்கத்தில், இழப்பில் உலக மாயை துலங்கிய தெளிவா?

கமலத்திற்கு மீண்டும் நடுக்கம் எடுத்தது. கண்ணாடிக் குவளை நொறுங்கி விடுமோ என்கின்ற கலக்கமாக இருந்தது.

'தயவு செய்து கொஞ்சம் அமைதியா இருங்க அப்பா. நாங்கள் கவலைப்பட்டு இனி எதுவும் ஆகப் போறேல்ல.'

'தெரியும். ஆனா, இனி நடக்கப் போறதை நான்தான் முடிவு செய்ய வேணும். என்ர விருப்பப்படிதான் இனி இந்த வீட்டில அணுவும் அசையோணும். அதை மீறினா நான் ஈன இரக்கமில்லாமல் கொலை செய்தாலும் செய்வன். ஓ... திரும்பவும் சொல்லுறன்.'

'இங்க இனி யார் இருக்கினம்? உங்களோட கூட இருக்கிறது நான்தான். என்னைக் கொலை செய்ய வேணும் எண்டாச் செய்யுங்கோ. அப்பிடியாவது புண்ணியமாகட்டும். எனக்கு இந்த நரகத்தில இருந்தாவது விடுதலை கிடைக்கும். ஒரு இராகம் இல்லை. ஒரு சுருதி இல்லை. ஒரு பிள்ளை திருப்பிப் பாடுற குரல் இங்க இல்லை. வயலினும், சுருதி பெட்டியும் தூசு பிடிக்குது. அந்தப் பக்கம் பார்க்கவே எனக்கு பிடிக்கேல்லை. நான் விரும்பியதை, இரசனையோட செய்ய முடியாமல் வாழ்க்கை நரகமாகிப் போயிட்டுது. செத்தா என்ன? இருந்தா என்ன? சாக்கூட எங்கடை கையில இல்லை எண்டது இப்பதான் தெரியுது.'

'நீ எல்லாத்தையும் கோட்டை விட்டிட்டு இப்ப காகம் திட்டி மாடு சாகிற கணக்கா ஊரைத் திட்டிக்கொண்டு இரு.'

'நடந்தது நடந்து போச்சுது. நடக்கப் போறதை பார்ப்பம். எங்களுக்கு அவளை விட்டா யார் இருக்கினம்? கொஞ்சம் அதைப் பற்றியும் யோசிக்க வேணும் இல்லையே அப்பா?'

‘என்ன நடந்தது நடந்து போச்சுதோ? எங்களுக்கு அவளை விட்டா யார் இருக்கினமோ? அதுக்காக அவிசாரியை வீட்டுக்க அடுக்கப் போரியே? இஞ்ச பார்… நான் அவளைத் தலை முழுகிறன். ஓ… தலை முழுகிறன்.’ கூறிய வண்ணம் தனது கண்ணாடிக் குவளையில் வைத்திருந்த நீரைக் குளிரென்றும் பாராது சண்முகம் தலையில் ஊற்றினான்.

கமலம் அதைப் பார்த்து அதிர்ந்து போனாள். நீர் வழிந்து சோபாவில் பாதி நிலத்தில் பாதியாக ஓடியது. மரத்தாலான நிலம் ஊதிப் போய்விடுமே என்கின்ற பதை பதைப்பு கமலத்திடம் சற்றும் இல்லை. சண்முகத்தின் தலை முழுக்குத் தந்த அதிர்ச்சியில் அவள் அப்படியே உறைந்து போனாள். நீர் வழிந்து நிலத்தில் பள்ளம் நோக்கிப் பாதை தேடி ஓடியது. கவலைகள் மாத்திரம் அலை அலையாகக் கமலத்தை வேகமாக வந்து தாக்கின. நீர் தொடர்ந்து சுருதிப் பெட்டி நோக்கி ஓடியது. ஒரு கணம் பதறிய கமலம் மறு கணம் கண்ணீர் விட்ட வண்ணம் அசையாது இருந்தாள். குண்டு மணியாக உருண்ட கண்ணீர் துளிகள் அவளது மார்பை நனைத்தன.

‘அவளைத் தலை முழுகீட்டன் ஓ… உன்னையும் தலை முழுக வைச்சிடாத.’

‘ஐயோ! இது என்ன கூத்து நீங்கள் ஆடுறியள்? புலி வருகுது புலி வருகுது எண்டு ஒரு நாளைக்குப் புலியே வந்திடும். நாங்கள் பட்ட கஸ்ரம் எல்லாம் உங்களுக்கு மறந்து போச்சுதே? கண்ணாடிப் பெட்டியில அவளை வைச்சிருக்க ஒவ்வரு நாளும் ஆஸ்பத்திரிக்கு நடந்து வந்தியளே? அதேல்லாம் ஞாபகம் இல்லையே அப்பா? அவள் உயிர் பிழைச்சாக் காணும் எண்டு எத்தின கடவுளை வேண்டி இருப்பம். அதுக்காக நீங்கள் பிள்ளையார் கோவில்ல இருந்து காவடி எல்லாம் எடுத்தியள் எல்லே? அவளுக்குக் காசு சேர்க்கோணும் எண்டுதானே அவள் பிறந்த பிறகு வெறியோட உழைக்கத் தொடங்கினியள். இப்ப எல்லாத்தையும் தூக்கி ஏறியிற மாதிரித் தலையில தண்ணி ஊத்த எப்பிடி மனம் வந்ததப்பா? தயவு செய்து இப்பிடி செய்யாதேங்க. ஏன்னால தாங்க முடியேல்ல.’

‘எல்லாம் அவளுக்காகப் பாத்துப் பாத்துச் செய்தன். எனக்குக் கடவுள் கொடுத்த வரம் அவள் எண்டு நினைச்சன். இப்பிடி கழிசுகட்டை வேலை செய்த பிறகு அவள் பிறந்ததே பாவம் எண்டு நினைக்கிறன். அந்தப் பாவத்தைப் போக்க தலையில தண்ணி ஊத்துறது மட்டும் இல்லை எது வேணும் எண்டாலும் செய்வன். ஓ… அவள் செத்தாள். அவள் எங்களுக்குப் பிள்ளை இல்லை. உன்ர மனசில கல்வெட்டு மாதிரி அது நினைவு இருக்கோணும். நான் மறக்க மாட்டன். என்ர கட்டையில உயிருள்ள வரைக்கும் அவள் செய்ததை நான் மறக்க மாட்டன் ஓ…’ கோபமாகக் கூறிய சண்முகம் உடைகளைக் களைந்த வண்ணம் குளியல் அறையை நோக்கிச் சென்றான். அவனது அரை நிர்வாண முண்டம் குளியலறைக்குள் மறைந்த பொழுது கமலம் குலுங்கிக் குலுங்கி அழுதாள். சண்முகத்தை மாற்ற முடியாது என்பது அவளுக்குப் புரிந்தது. பட்ட அடி அவளுக்கு வலித்தாலும் பெற்ற பாசம் அதையும் மீறி அவளை இரக்கம் கொள்ள வைத்தது.

## 2

வித்துவான் சங்கரப்பிள்ளை என்றால் ஊரில் அவரின் முகம் தெரியாதவர்கள் யாரும் இல்லை. வித்துவான் ஆகித்தான் வாழ்க்கை நடத்த வேண்டும் என்பது அவருக்குக் கட்டாயம் இல்லாவிட்டாலும் வித்தைக்காக வித்துவான் ஆனவர் அவர். இயற்கையின், செயற்கையின் ஒவ்வொரு அசைவிலும் இராகங்களையும், தாளங்களையும் அவர் அறிந்து லயிப்பார். ஒவ்வொரு இராகமும் அவர் மூளையில் பிசகாது பதிந்து இருக்கும். சுருதிகள் சொல்லும் வித்தைகள் அனைத்தும் அவருக்குக் கை படிந்த ஞானமாகும். அவர் இசையின் சுளிவும் நெளிவும் கண்டு கலா இரசனையோடு அதை இரசிப்பார்… மயங்குவார். அதில் மூழ்கித் திளைப்பார். மாட்டு வண்டிலின் அசைவில்கூட அவர் பற்பல இராகத்தைக் கண்டுபிடிப்பார். அவர் சங்கீத ஞானம் கமலத்திற்கு தாளாத மலைப்பாகும். அந்த மலைப்புத் தீராத சமுத்திரம் போல. இசை என்பது அவர் உயிர்நாடி. அது அவர் விடும் மூச்சுக்காற்றில்கூட கலந்து இருக்கும். அந்த மூச்சுக்காற்றை சுவாசித்துத் தான் ஞானம் பெற்றுவிடவேண்டும் என அவள் எண்ணுவாள்.

இசையில் திளைப்பதே அவர் தியானம். வேள்வி. உயிரும் உடலும் அதற்கு ஒருங்கே ஆகுதியாகும் யாகம். கமலத்தின் அப்பா’புலிக்குப் பிறந்தது பூனையாகுமா?’ என்று அடிக்கடி சொல்லிக் கொள்வார். அதுவும் கமலத்தைக் காணும் பொழுதெல்லாம் புளகாங்கிதத்தோடு அதைச் சொல்லிக் கொள்ளுவார். கமலம் அவர் மூச்சுக் காற்றைச் சுவாசித்துக் கொள்வாள். புலிக்குப் பிறந்தது பூனையாகவில்லை. கமலம் அரிவரி தொடங்கிய நாளது. அரிசியில் அ, ஆ என்று எழுதிக் காட்டிய பின்பு கமலத்தை பாடுமாறு வற்புறுத்தினர். அவள் திருவாய் மலர்ந்த போது

இடியோசை கேட்ட நாகமாக எல்லோரும் இசையில் மூழ்கிப் போயினர். கமலம் ஞான சம்பந்தரின் பெண் உருவமாய் மாறியிருந்தாள். இசை அவளிடம் இருந்து தேனருவியாகப் பாய்ந்தது. அவள் காம்போதி இராகத்தில் அல்லது பழைய பண் தக்கராகத்தில் திருஞான சம்பந்தரின் திருக்கடைக்காப்பாகிய,

பூதமும் பல்கணமும் புடைசூழப்
பூமியும் விண்ணும் உடன்பொருந்தச்
சீதமும் வெம்மையும் ஆகிச்
சீரொடு நின்றஎம் செல்வர்
ஓதமும் கானலும் சூழ்தரு வேலை
உள்ளம் கலந்து இசையால் எழுந்த
வேதமும் வேள்வியும் ஓவா
வேட்கள நன் நகராரே.

எனப் பண் பரவத் தன்னை மறந்து பாடினாள். அவள் பாடி முடியும்வரை சிலையான மனிதர்கள். வித்துவான் சங்கரப்பிள்ளை தன் வித்தகச் செருக்கு அழிந்து, இசையின் தாய் நீ என நிலத்தில் விழுந்து, மகளை வணங்கி எழ, கமலம் அப்பாவை ஓடிப்போய் அணைத்து முத்தமிட்டாள். அது இன்றும் அவளுக்குப் பசுமையாக ஞாபகம் இருக்கிறது. அரிவரி தொடக்க வந்தவர்கள் எல்லாரும் கமலத்தின் கன்னத்தைக் கிள்ளி, நீ ஒரு குட்டி ஞானசம்பந்தர் என்ற போது அவள் மௌனமாகச் சிரித்தாள். என் சிரிப்பிலும் நீ கேட்க முடியாத இராகம் இருக்கிறது என்பதாக அது சொல்லாமல் சொல்லிற்று. அன்று தொடங்கியது கமலத்தின் இசைப்பயணம். அது நாடுகள் கடந்தும் தொடர்ந்தது.

இசை. எதிலும், எங்கும், எப்போதும் இசை என்பது அவளை ஆக்கிரமித்தது. அவள் மூளையின் ஒவ்வொரு கலன்களும் இராகங்களைத், தாளங்களைச், சுருதிகளைச் சேமித்து வைக்கத் துடித்தன. வாய் எப்பொழுதும் மூளையின் சேமிப்பிற்குக் குரல் கொடுத்து, இசையென்னும் ஞானத்தேனைப் பிறர் பருகிட வழிசெய்தது. கமலத்தின் அப்பா அத்தி பூத்தாற் போல மச்சம், மாமிசம் சாப்பிடுவார். கமலத்தின் அப்பாவிற்காக அவளது அம்மாவும் மச்சம், மாமிசம் அதிகம் சாப்பிடுவதில்லை. அப்பா அம்மாவைப் போல கமலத்திற்கும் மச்சம், மாமிசத்தில் அதிக விருப்பு இருக்கவில்லை. கமலத்தின் அப்பா அரைகுறைத் தாவர உண்ணியாக இருந்ததிற்கு இறை பக்தியைவிட சங்கீத பக்தியே முதற் காரணமாகியது. அவரது கச்சேரிகள் ஊர் கோவில்களில்தான் நடக்கும். முதலில் கமலத்தின் அப்பாவிடம் கார் இருக்கவில்லை. வீட்டில் இரண்டு பெரிய எருதுகளும் மூன்று பசுமாடுகளும் நின்றன. கமலத்தின் ஆசைக்காக ஒரு ஆட்டுக்குட்டியும், இரண்டு முயலும் வாங்கிக் கொடுத்தார்கள். வீட்டில் பால் தாராளம். மிஞ்சுவது தயிர் ஆகும். தயிர் மோராகும். வீட்டிற்கு வந்து போகின்றவர்கள் குடிப்பதற்கு வற்றாத அட்சய பாத்திரத்துத் திரவமாக அது என்றென்றும் சுரந்துகொண்டு இருக்கும். எடுக்கும் வெண்ணெய்யை உருக்கி நெய்யாக்குவார்கள். அதைச் சூடான தாளித்த பருப்புக் கறியில் விட்டு ஊரரிசி உடன் பிசைந்து உண்பது பூலோகத்தின் தேவாமிர்தமாகும். உண்ட பின்னும் நெய் கையில் மணக்கும். கண் யாரையும் கேளாது தன் விருப்பில் மொய்க்கும். கவலையற்ற வாழ்க்கையது என்பது கமலத்திற்கு நித்தியமான நினைவாகப் பதிந்துவிட்டது.

முதலில் எருதுகள் பூட்டிய வண்டியே கமலத்தின் அப்பாவின் கச்சேரி வாகனம். கமலத்தின் அப்பா வண்டிலை வைத்திருந்ததுகூட ஒருவித அழகுதான். கச்சேரிகள் அனேகம் கோடைக் காலத்தில் நடந்ததால் வண்டில் கோப்பிசம் இல்லாமலே வலம் வந்தது. பக்கத் தட்டிகள், சில்லுத் தடிகள், துலாத் தடி, நுகம் ஆகியவை உரிய முறையில் அழகுறச் செய்யப்பட்ட கம்பீரம் அனைவரது கண்ணையும் தன்பக்கம் இழுத்துக் கொள்ளும். தேய்த்துத் தேய்த்து வாணிஸ் பூசிப், பூசி கண்ணாடியாக மினுங்கும் இரதம். அந்த இரதத்தில் தேவையான பாய், துணி, லாந்தர், மாட்டிற்கு உணவாக வைக்கோல், தண்ணி அள்ள வாளி என்பன தயாராக இருக்கும். வண்டில் ஓட்டுவதற்கு… மாடுகளை மேய்ப்பதற்கு… தண்ணி ஏற்றுவதற்கென வீட்டில் உள்ள தொட்டாட்டு வேலைகள் செய்வதற்கு சுப்பன் தினமும் வருவான். கமலத்தின் அப்பாவிற்குச் சங்கீத வாழ்வு தந்த சம்பளத்தைவிட மரியாதைதான் அதிகம். கமலத்தின் அப்பா இரவு கச்சேரிக்கு சென்றாலும் அடுத்த நாள் வேலைக்குச் செல்ல வேண்டும். அவர் தூக்கக் கலக்கத்தோடு பேருந்தில் யாழ்ப்பாணக் கச்சேரிக்கு நித்திரைக் கச்சேரி செய்யச் செல்வார். வீட்டிற்கு வரும் பொழுது மிகவும் தெளிவாகச் சங்கீதக் கச்சேரிக்கு ஆயுத்தமாகத் திரும்பி வருவார். கமலத்தின் அப்பாவுக்கு நிறையச்

சொத்துகள் இருந்தன. அசையாச் சொத்துக்கள் அப்படியே இருந்தாலும் அதில் விளைவன சம்பளமாய் அளந்து கொடுக்கப்படும். சுப்பனின் சோற்றுப்பாடு அதை நம்பியே இருந்தது.

இரவில் கோவில்களில் கச்சேரிக்குப் போவது கமலத்திற்கு மிகவும் பிடிக்கும். தேவலோகத்தை அவள் நேரில் கண்டது கிடையாது. கோயில்களில் திருவிழா நடக்கும் நாட்கள்தான் அவள் கண்ட தேவலோகங்கள். இரவுத் திருவிழாக்கள் மனதை மயக்கும் இந்திரலோகம். சிறியவர்களாய், பெரியவர்களாய் எங்கும் குதுகலமான, மகிழ்ச்சியான மனிதர்களின் நடமாட்டம். பக்திப் பாடலாய் பரவும் தமிழிசை. இரவிற் சூரியனாய் எங்கும் யொலிக்கும் மின்விளக்குகள். கோவிலில் இருந்து வரும் அத்தர், சென்ற், மலர் வாசம் ஆகிவை கலந்த தேவலோக நறுமணம். அப்படியே வெளி வீதி சென்றால் கச்சான், பக்கோடா, மற்றும் தின்பண்டங்களின் வாசத்தின் இழையோடல். வயிற்றையும், வாயையும் ஊறவைக்கும் மணமும் காட்சிகளும். ஒத்த வயதுச் சிறுவர், சிறுமிகளின் ஒளித்துப் பிடிக்கும் ஒய்யார ஓட்டம். நித்திரை தூங்கியதால் கரியில் மீசை எழுதப்பட்ட சிறுவர்களின் முகங்கள். சில சிறுமிகள்கூட மிசைகளோடு அலைந்ததைக் கமலம் கண்டிருக்கிறாள். சங்கீத வித்துவானுக்குத் தனியாக வரும் பிரசாதத்தின் சலுகை. சந்தையான கலகலப்பு அப்பாவின் கம்பீரமான குரலோடு அடங்கிப் போகும் மாயம். பூலோகத்தில் கண்ட தேவலோகம் கோயில் திருவிழாக்கள் தான் என்று கமலம் இன்றும் அடித்துச் சொல்லுவாள். உலகில் எல்லாவற்றையும் படைக்கும் மனிதனைப் படைத்தவன் என்கின்ற நித்தியம் மாறாத தேவலோகம். அவனே படைத்தான் என்பதை அசைக்க முடியாதவாறு நம்புபவள் கமலம்.

கமலத்தின் அப்பா சிலவேளை தான் பாடிவிட்டுச் சிறிய இடைவேளைக்காக அவளையும் பாட விடுவது உண்டு. அவள் பாடும் நேர்த்தியில் அவர் தன்னை இழப்பார். இசையை இரசிப்பார். அதில் மயங்கி ஆனந்தத்தில் திளைப்பார். சங்கீதம் அவர் யாகம். அந்த யாகத்திற்குக் கிடைத்த வரம் கமலம் என்கின்ற பூரிப்பு. வித்துவான் சங்கரப்பிள்ளை பாடும் போது இருக்கும் அமைதியைவிட மகளின் பாட்டிற்கு அதிக அமைதி இருப்பது அவரைப் பெருமை கொள்ள வைக்கும். மனிதர்களின் அமைதியும், ஆர்வமும் கச்சேரியில் ஞானத்தின் அங்கீகரிப்பு என்பது அவர் கணிப்பு. அதைப் பார்த்து மனம் மகிழ்ந்து அவர் கூத்தாடியதுண்டு. பாகவதரோடு சேர்ந்து பாடித்திரியும் கமலத்தின் ஆனந்தமான வாழ்க்கை நாடு குழம்பிய போது நிர்மூலமாகியது.

யுத்தம் கொடுமையானது. குழந்தைப் பருவம் முடியும் முன்னே ஆயிரம் பொறுப்புக்களை தலையில் குந்த வைத்தது. கமலம் அப்பா அம்மாவை ஒற்றைப் பெண்ணாக நின்று காக்க வேண்டி வந்தது. கமலத்தின் அப்பா சொத்துக்களை விற்றுவிட்டுக் கொழும்பிற்கு மாற்றலாகினார். கொழும்பில் கமலத்திற்கு வரம் கிடைத்தது. அந்த வரத்தில் கமலம் முதுபெரும் சங்கீத பூசனம் ஒருவரின் மாணவியானாள். மீன் குஞ்சிற்கு நீந்தக் கற்றுக் கொடுக்கத் தேவையில்லை. அப்படி இருக்கக் கமலத்திற்கு அப்பாவோடு அந்த ஆசிரியரும் கிடைத்தது அளப்பரிய வரப்பிரசாதமாயிற்று.

ஞானம், நேர்மை என்பன இருந்தாலும் இலங்கையில் தமிழராய் வாழ்வது போராட்டமாகியது. அவமானமாகியது. மனச்சாட்சி உள்ள யாராலும் மறுக்க முடியாத உண்மை அவை. புலிகள் பெண் தற்கொலைப் படையை அறிமுகம் செய்த காலம். இளம் தமிழ் பெண்ணாய் கொழும்பில் வாழ்வதும் சிறையாகிய யதார்த்தம். கமலத்தின் அப்பாவின் சங்கீத புளகாங்கிதங்கள் எல்லாம் போரோடு மௌனமாகின. பெண்ணைக் கரை சேர்க்க வேண்டும் என்பதில் அவர் கண்ணும் கருத்துமாய் இருந்தார். கால் கடுக்க நடந்தார்.

கொழும்பில் வாழ்ந்ததால் சங்கரப்பிள்ளையின் கையிருப்பு இறங்கியது. வித்துவான் சங்கரப்பிள்ளையின் மகள் என்றாலும் விவாகம் என்று வரும் போது பேரம் பேசுவதற்கு எவரும் தயங்கவில்லை. அந்தக் காலத்தில் பேரத்தில் தனக்கு நம்பிக்கை இல்லை என்று தனது கொள்கையில் பிடிவாதமாய் நின்று கமலத்தை விவாக விற்பனையில் காப்பாற்றியவன்தான் சண்முகம். அந்தப் பெருந்தன்மையை எண்ணி இப்போதும் கமலம் பரவசப்படுவாள். கமலத்தின் வாழ்வு பரவசமாகத்தான் இருந்திருக்கும். எல்லாவற்றையும் தேனுகா மாற்றிவிட்டாள். விளையாட்டாக நினைத்து விபரீதங்களைச் செய்துவிட்டாள். மாற்ற முடியாத விபரீதங்கள். மாறமுடியாத இழுக்குகள். மாட்டிற்குக் குறியிடுவது போல மனதிற்குக் குறியிட்டுவிட்டாள். இனி தொடர்கதையான ஆறாத் தழும்புகளே. அதன் ஞாபகங்களே.

கமலம் நோர்வேக்கு வந்தவுடன் முதல் செய்த வேலை சங்கீத வகுப்பு ஆரம்பித்ததுதான். தான் கற்ற வித்தைகளை மற்றவர்களுக்கும் கற்றுக் கொடுத்து அவர்களின் வித்துவ ஏற்றத்தில் மகிழ்வு காணுவது அவள் நோக்காக, வாழ்வின் அடி நாதமாக, அதில் அவள் மூழ்கினாள். அவளது சீடர்களிடம் வித்துவம் விழைந்து விழுது பரப்பியது.

முதலில் அவள் சங்கீத வகுப்பிற்கு மூன்று மாணவர்கள் மட்டும் வந்தார்கள்.'இவ இங்க சங்கீதம் படிப்பிச்சு யாருக்குப் பாடிக்காட்டப் போகிறா?" எனச் சிலர் ஆரம்பத்தில் நெளிப்புக் காட்டினர். நாட்டை இழந்து வந்தவர்கள் காவி வந்த மொழியையும், ஆரியரிடம் இருந்து கடனாகப் பெற்ற கலாச்சாரத்தையும் கெட்டியாகப் பிடித்துக் கொள்வதில் மூர்க்கம் காட்டினர். புலம் பெயர்ந்த தமிழரைப் பொறுத்தவரை கருநாடக சங்கீதம் அவர்களது இசையாகியது. தாங்கள் படிக்க வசதியில்லாது விட்டவற்றை எல்லாம் தங்கள் பிள்ளைகளின் மேல் திணிப்பதில் குருட்டுத்தனமான திருப்தி கண்டனர். கமலத்திற்கு வெள்ளி திசை அடிக்கத் தொடங்கியது. கூட்டம் மெல்லப் பல்கிப் பெருகியது. கலை, ஞானம் பரம்பரை பார்த்து மட்டும் வருவதில்லை. சங்கீத ஞானம் இல்லாவிட்டாலும் குழந்தைகளின் சா பாவில் மயங்கும் பெற்றோர்கள் பெருகினர். வேலை நாளிலும் காரில் கூட்டிவந்து காவலிருந்து கூட்டிச்சென்றனர். ரீச்சர், ரீச்சர் என்கின்ற போது கமலத்திற்குப் பூமியில் கால் படாத உணர்வு. ஒரு சில மாணவர்கள் கமலத்தைத் தமது ஞானத்தால் வியக்க வைத்தாலும் பலருக்கும் இது ஒரு பொழுது போக்காகியது. சகமாணவர்களோடு அரட்டையடிக்க, வீட்டில் இருந்து வெளியே வருவதற்கு இதை ஒரு வாய்ப்பாக்கினர். கமலத்திற்கு அவர்களை எல்லாம் வகுப்பால் கலைத்துவிட வேண்டும் போல் கோபம் வரும். பணத்தை எண்ணி எண்ணிப் பெட்டியில் வைக்கும் ஆசை குட்டியாக எழுந்து அவளைத் தடுத்து விடும். வரி கட்ட தேவையில்லாத பணம். வரவு செலவு சொல்ல வேண்டிய அவசியம் இல்லாத சுகம். கமலம் தனது ஞானக் கோபத்தைச் சுருட்டி பெட்டிக்குள் வைத்துக் கொள்வாள். அதற்குக் கொஞ்சம் பணத்தாசையை இரையாகப் போடுவாள். அது பணத்தாசையில் தொடர்ந்தும் பௌவியம் காத்தது.

கமலத்தின் சங்கீத வகுப்புக் களை கட்டிய காலம். நிறைய மாணவர்கள் வந்தார்கள். அளவற்ற மகிழ்வில் அவள் திளைத்தாள். அதே வேளை இளமையின் நச்சரிப்பில் இரவில் சண்முகத்துடன் ஆடிய சரசம் தொடர்ந்தது. இயற்கையின் விதிப்படி விதை கருவாகி வயிற்றில் பதிந்ததில் வாழ்வில் சந்தோசம் பூரித்தது. என்றாலும் கமலம் பின்னடிக்கவில்லை. தனது பணியைத் தொடர்ந்தாள். ஞானத்தை மற்றவர்களுக்குப் போதிப்பது ஒருவித யாகம். திருப்தி. சந்தோசம். சிலவேளைகளில் அது இனம் புரியாத மனவழுத்தத்தையும் உண்டு பண்ணிவிடும். ஞானத்தில் அக்கறை இல்லாது நேரம் போக்க வரும் மாணவர்களுக்கு ஞானம் புகட்டுவது சோதனையானது. அதன் வேதனை அவளை அறியாது அரிக்கத் தொடங்கியது. கமலத்தை மெதுவாக மனவழுத்தம் பீடிக்கத் தொடங்கியது. கமலம் தான் மனவழுத்தத்தால் பாதிக்க படுகிறேன் என்பது புரியாமலே பானை வயிறாயிருக்கும் போதும் வகுப்பு நடத்துவதில் மூர்க்கம் காட்டினாள். இலண்டனில் இருந்து வரும் பரீட்சகர்களிடம் இன்னாரின் மாணவர்கள் என்கின்ற பெயரையாவது காக்க வேண்டும் என்கின்ற பரிதவிப்பு அவளிடம். அவள் பரிதவிப்பு அவள் சிசுவின் திணறல் ஆகியது.

கமலத்திற்குப் பிரசவ வலி எடுத்தது. கடையோ, காரோ இல்லாது சண்முகம் ஒரு வேலை செய்து கொண்டு திரிந்த காலம் அது. கடந்தகால யாழ்ப்பாணத்துச் சேமிப்பைக் கைவிடாத மனம். கமலம் தனது சங்கீதத்திற்குப் பொது போக்குவரத்தையே நம்பி இருந்தாள். சும்மாய் குத்துவது போன்று இருப்பதற்கு எல்லாம் வாடகைக்கார் பிடிக்க முடியாது என்கின்ற நிலை. அவர்கள் றாமில் பயணம் செய்தனர். றாம் மருத்துவ மனைக்கு அருகே செல்லாது. ஐந்நூறு மீற்றர்கள் நடக்க வேண்டியதாகிற்று. நடந்தார்கள். அது ஏற்றமான பாதை. பனி கரையும் காலம். வழுக்க, வழுக்கப் பதட்டத்தோடு இருவரும் ஒரு பிட்டியில் ஏறினார்கள். பிட்டி ஏறிமுடிந்ததும் சமதரை வந்தது. சிறிது தூரம் நடந்தால் மருத்துவ மனைக்குள் சென்று விடலாம். திடீரென 'ஏனப்பா என்னை இதால கூட்டி வந்த நீங்கள்?" எனச் சண்முகத்தைப் பார்த்துக் கமலம் கேட்டாள். சண்முகத்திற்கு ஒருகணம் என்ன பதில் சொல்வது என்று புரியவில்லை. கடைசி நேரத்தில் சிசுக்கொலை செய்வதாகத் தனது காரியம் அமைந்ததை அவன் உணர்ந்தான். வெட்கித்தான்.

'நான் உன்னை வேணும் எண்டே எத்தினான். கிட்டடியா இருக்கும் எண்டு பாத்தன். இப்பிடி வழுக்கலா இருக்கும் எண்டு யாருக்குத் தெரியும்?'

'ஒரு கார் இருந்தால் இந்தப் பிரச்சனை வந்து இருக்காது. சங்கீத வகுப்புக்குப் போறதும் ஈசியா இருக்கும்.'

'வாங்குறன் கமலம். இனி வாங்கத்தானே வேணும். பிள்ளையைக் கொண்டு திரிய. நீ வகுப்புக்குப் போக, அங்க இங்க போய்வர, எல்லாத்துக்கும் உதவும்.'

'உண்மையப்பா... இனி இப்பிடி நடந்து திரியேலாது.'

அன்று சண்முகம் முதன் முறை தான் இரண்டு வேலை செய்ய வேண்டும் என்று நினைத்தான்.

மருத்துவமனைக்குப் போக முதலே சண்முகத்திற்கு அந்த ஐயம் இருந்தது. இவர்கள் எப்பொழுதும் புத்தகத்தில் படித்துவிட்டு அப்படியே நடக்கும் என்கின்ற கணிப்போடு இருப்பவர்கள் என்பது அவன் எண்ணம். மருத்துவ மனைக்குள் சென்று தங்கள் பிரச்சனையைக் கூறிய பொழுது முதலில் அவர்களைக் காத்திருக்கக் கூறினார்கள். இரண்டு மணித்தியாலங்கள் காத்திருக்க வேண்டி வந்தது. பின்பு 'யூர்மூர்' என்கின்ற பிள்ளைப்பேறு பார்க்கும் தாதி வந்தார். அவர் மிகவும் கனிவாக விசாரித்தார். பரிசோதித்த பின்பு இது பிள்ளை பெறுவதற்கான குத்து இல்லை எனவும், வீட்டிற்கு திரும்பிப் போகுமாறும் கூறிவிட்டார். சண்முகத்திற்கு அது பிடிக்கவில்லை. சும்மாய் அலைக்கழிக்கிறார்கள் என்று கோவப்பட்டான். இருந்தும் எதுவும் சொல்ல முடியாது கமலத்தையும் கூட்டிக்கொண்டு வீட்டிற்குத் திரும்பி வந்தான். திரும்பி வருவதற்குச் செலவைப் பாராது வாடகைக்கார் பிடித்தான். இனியும் இலங்கைக் காசிற்குப் பெருக்கிப் பார்க்கக் கூடாதென அன்று அவன் முடிவு செய்தான்.

இரவு பத்துமணி போலக் கமலம் வலியால் புழுவாகத் துடித்தாள். பதட்டத்தோடு அருகே சென்ற சண்முகத்தின் சட்டையை இரண்டு கைகளாலும் இறுக்கிப் பிடித்தாள். அவனின் சட்டைக் கொலர் கழுத்தைச் சுற்றி இறுக்கியது. சண்முகத்திற்கு மூச்சு முட்டியது. தன் பலம் கொண்ட மட்டும் முயற்சித்துப் போராடி தன்னை அவளிடம் இருந்து விடுவித்தான். கமலம் தொடர்ந்தும் வலியில் துடித்தாள். சண்முகம் உதறித் தன்னை விடுவித்தது கமலத்திற்குப் பிடிக்கவில்லை. இன்னும் சிறிது நேரம் அப்படியே நின்றால் தனது உயிர் போயிருக்கும் என்கிற அந்தரம் சண்முகத்திற்கு. பிள்ளை பெறுபவர்கள் காளியாக மாறுவார்கள் என்பது அவனுக்குத் தெரியும். என்றாலும் கமலம் இந்த ஆட்டம் ஆடுவாளென அவன் எதிர்பார்க்கவில்லை.

சண்முகம் தன்னை ஆசுவாசப்படுத்திய பின்பு கமலத்தைப் பார்த்து,

'என்ன நீ கொல்லப் பார்த்தா.' என்றான்.

'உங்களை கொல்லேல்லை. நான் வலியில செத்துப் போறன். ஐயோ எனக்குப் பாலை ஊத்துங்கோ. கடைசியா நாக்கை நனைச்சுப்போட்டு செத்துப் போறன்.' என்று கத்தினாள்.

சண்முகத்திற்கு அவளின் அந்த வேதனையிலும் சிரிப்பு வந்தது. அவன் சிரிக்கவில்லை. சிரித்தால் நல்ல பேச்சு வாங்க வேண்டும் என்பது தெரியும். மனதிற்குள் சிரித்தாலும் வெளியே முகத்தைக் கடுமையாக வைத்திருந்தான். வேதனை சர்வ நிச்சயம். அதற்கு இந்த ஆட்டம் பரிகாரமாகுமா என்பது அவனுக்குப் புரியவில்லை. வேதனையை வெளிப்படுத்துவதில் இதுவும் ஒரு விதம். மற்றவர்களை சங்கடப்படுத்தும் விதம். சண்முகம் அதற்குமேல் சிந்தித்துக் கொண்டு நிற்கவில்லை.

அவன் அவசரமாக வாடகைக்காரை வரவழைத்துவிட்டுக் கமலம் பேசப் பேச அவளை வெளிக்கிடுத்தி வெளியே அழைத்துச் சென்றான். இல்லை இழுத்துச் சென்றான்.

கமலம் வாடகைக்காருக்குள்ளும் ஓயவில்லை. ஐயோ ஐயோ எனக் கத்தினாள். வாடகைக்காரை ஓட்டியவர் ஒரு சுதேசி. அவர் திரும்பிப் பார்க்காது சிரித்த வண்ணம் காரை ஓட்டிச் சென்றார். இப்படி நிறைய ஆட்களை அவர் பார்த்து இருக்கலாமென சண்முகம் எண்ணினான். அதுவே முதலும் கடைசியுமான பிரசவ அனுபவமாய் சண்முகத்திற்கும் கமலத்திற்கும் அமைந்தது. வாடகைக்கார் சிறிது நேரத்தில் மருத்துவமனையை வந்தடைந்தது. வீட்டிற்கும் மருத்துவமனைக்கும் அதிக தூரம் இல்லாதது ஒரு விதத்தில் அன்று சௌகரியமாகப் போயிற்று.

வாடகைக்கார் சாரதிக்குப் பணத்தைக் கொடுக்க அவர் மீதியைச் சண்முகத்திடம் கொடுத்த பின்பு வாழ்த்துச் சொல்லிவிட்டுச் சென்றார். சண்முகம் கமலத்தை உள்ளே கைத்தாங்கலாக அழைத்துச் சென்றான். அவள் தொடர்ந்தும் ஐயோ ஐயோ என சங்கேனம் வைத்த வண்ணம் நடக்க முடியாது நடந்து வந்தாள். சண்முகத்திற்கு அது பெரிய கிலிசகேடாய் இருந்தது. ஒன்றும் செய்ய முடியாதவனாய் நெளிந்த வண்ணம் அவளை அழைத்துச் சென்றான். கமலத்தின் ஆர்ப்பாட்டத்தில் உடனடியாகவே மகப்பேற்றுத் தாதி வந்துவிட்டார். அவர் முதலில் சின்ன ஒலிபெருக்கி போன்ற ஒன்றை வயிற்றில் வைத்துக் குழந்தையின் இதயத் துடிப்பை கேட்டார். பின்பு எவ்வளவு திறந்து இருக்கிறது என்பதைப் பார்த்துவிட்டு,

'டேற கார் கூ தீட்.' ( உங்களுக்கு நிறைய நேரம் இருக்கிறது.) என்றார்.
சண்முகத்திற்கு அந்தப் பதிலில் திருப்தி ஏற்படவில்லை.
'வீ கான் இக்க கோ தில்பாக்க.' ( நாங்கள் இப்பொழுது திரும்பிப் போக முடியாது.) என்றான்.
தலைமைத் தாதி யோசித்துவிட்டு,
'ஓகே. குன் கான் வார கார். மென் டூ மோ கோ ஜெம் ஒக் சோவக் கொத்.' (சரி அவள் இங்க தங்கட்டும். நீ வீட்ட போய் நல்லா நித்திரை கொள்.) என்றாள்.
அதற்கு மேல் அவரோடு தற்கப்படுவதில் அர்த்தம் இல்லை என்பதைப் புரிந்துகொண்ட சண்முகம்'ஓகே.' என்றான்.
சண்முகம் வெளிக்கிடவும்,
'ஐயோ என்னத் தவிக்க விட்டிட்டுப் போறியளே? உயிர் போகேக்கையும் பக்கத்தில நிக்க மாட்டியளே? ஐயோ என்ன விட்டிட்டுப் போகாதேங்கோ.' எனக் கமலம் ஒப்பாரி வைத்தாள்.

சண்முகத்திற்கு மிளகாய் புண்ணில்பட்ட வேதனை. அந்த வேதனையில் அடக்க முடியாத கோபம். ஆணிற்குக் கோபம் வந்தால் பெண்ணின் மேல் பாய்வது வடிகாலாவதுண்டு.

'இனிக் கத்தினாய் எண்டாக் கன்னத்தைப் பொத்தி அறைஞ்சு போடுவன். குத்தும்தான். நோகும்தான். வாயப் பொத்திக்கொண்டு இரு. ஏதும் அவசரம் எண்டா என்னைக் கூப்பிடச் சொல்லு.' எனக் கத்திவிட்டு அதற்கு மேல் கமலத்தின் பதிலைக் கேட்கும் பொறுமை இல்லாதவனாய் விசுக்கென வெளியே சென்றான்.
வெளியே வந்த சண்முகத்திற்குக் கமலத்தை எண்ணப் பாவமாய் இருந்தது. வலியிற்தனே அவள் இப்படித் துடிக்கிறாள் என்கின்ற பரிதாபம் உண்டாகியது. எதற்கும் விடிந்ததும் வந்து விடவேண்டுமென எண்ணினான். பின்பு வைத்தியசாலைக்கு முன்பு நின்ற ஒரு வாடகைக்காரைப் பிடித்துக்கொண்டு வீட்டிற்குச் சென்றான்.

வீட்டிற்கு வந்த போது அவனுக்குப் பசித்தது. இரண்டு பாண் துண்டுகளுக்கு இறைச்சி வைத்துச் சாப்பிட்டான். பின்பு தேநீரும் தயாரித்துப் பருகினான். பல்லைத் துலக்கிவிட்டு வந்து படுத்தான். நினைவுகள் கமலத்தின் குளறலை நோக்கி ஓடியது. திரும்பிப் படுத்தான். நித்திரை வர மறுத்தது.

பகலை இரவு வென்று, பின்பு பகலிடம் இரவு தோற்கும் நேரம். திடீரென கமலம் வலியால் தீ பட்ட மயிர் கொட்டியாகத் துடித்தாள். வேதனையின் உதறலில் அவள் வியர்வையில் தெப்பமாக நனைந்தாள். சண்முகத்திற்கு அவளைப் பார்க்க சங்கடமாகிற்று. அவள் வலி உச்சம் காண்கிறது. அவள் நான்கு வீடு கேட்குமளவிற்கு சங்கேனம் வைத்தாள். சண்முகம் அவளைக் கைத்தாங்கலாக குளியல் அறைக்குள் அழைத்துச் சென்றான். அவள் உருக்கிய லோகத்தை மேலில் தெளித்ததாய் வேதனையால் துள்ளித் துள்ளி துடிக்கிறாள். சண்முகத்தை இறுக்கிப் பிடிக்கிறாள். அந்த இறுக்கத்தில் தோல் பிய்ந்து போக நகத்தால் கீறுகிறாள். சண்முகம் கோபத்தில் கத்துகிறான். அவள் விசர் கொண்டவள் போல் ம்… ம்… என உறுமுகிறாள். மீண்டும் தாங்கமுடியாத வலியால் துடிக்கிறாள். குளியல் அறைக்குள் சென்றவுடன் நிலத்தில் படுத்துக் கொள்கிறாள். இரு கரைக்கும் புரண்டு புரண்டு துடிக்கிறாள். கால்களை அகட்டிய வண்ணம், முக்கிய வண்ணம் சண்முகத்தை காழி போல விழிக்கிறாள். உரத்துக் கத்துகிறாள். அவள் கண்கள் உன்னால் வந்த வினை என்பது போலச் சண்முகத்தைப் பார்வை என்னும் சாட்டையால் அடிக்கின்றன. அவை சிவந்த இலந்தைப் பழமாய் அங்குமிங்கும் உருண்டு உருண்டு துடிக்கின்றன.
சண்முகத்திற்கு அந்த இடத்தை விட்டு ஓட வேண்டும் எனத் தோன்றியது. மனிதாபிமானம் அவனது கால்களைப் பிடித்து நிறுத்தியது. அவன் ஓடிவிடாது விலங்கு பூட்டியது. தன்மானம் போனாலும் மனிதம் காக்க அவன் அங்கு

நிற்கிறான். இரத்தம் பீரிட்டது. குழந்தை வீரிட்டது. சண்முகத்திற்கு என்ன செய்ய வேண்டும் என்பது புரியவில்லை. அவன் திகைத்துப் போய் நிற்கிறான். கமலம் அவனை மீண்டும் காழியாக விழித்தாள். இலந்தைப் பழங்கள் இங்கும் அங்கும் மீண்டும் உருண்டன. அவளுக்குப் பேய் பிடித்து விட்டதோ என்கின்ற சந்தேகம் சண்முகத்திற்கு எழுந்தது.

சிறிது நேரத்தில் பிறந்த குழந்தை நடந்து சென்றது. தொப்புள் கொடி எங்கேயெனச் சண்முகத்திற்குப் புரியவில்லை. யார் அதைத் துண்டித்தார்கள் என்பது விளங்கவில்லை. குழந்தை அவசரமாக ஓடுகிறது. அது நிர்வாணமாக ஓடுகிறது. எங்கே? எதற்காக? எப்படி? சண்முகத்திற்கு எதுவும் புரியவில்லை. குழந்தை குழியல் அறையைவிட்டு வெளியே ஓடியது. அது கோலை நோக்கி ஓடியது.'குழந்தை... குழந்தை...' பதறிய வண்ணம் சண்முகம் அதன் பின்னால் ஓடுகிறான். குழந்தை அவனைவிட அதிக விரைவாக ஓடியது. சண்முகத்திற்கு ஒன்றும் விளங்கவில்லை. இது எப்படிச் சாத்தியம் என்பது திகைப்பாகியது. அவன் அதற்கு மேல் சிந்திக்க முடியாதவாறு முள்ளந்தண்டின் ஏவலின்படி வேகமாகக் குழந்தையை நோக்கி ஓடினான். பல்கணிக் கதவு திறந்து கிடந்தது. குழந்தை அந்தக் கதவை நோக்கி வேகமாக ஓடியது. சண்முகத்திற்கு ஓடி அந்த குழந்தையைப் பிடிக்க முடியுமெனத் தோன்றவில்லை. தோற்ற மனதுடன் ஓடினான். உலகம் இருளப்போவதான உணர்வுடன் ஓடினான். கால்கள் அசைய மறுப்பதான கனத்தோடு போராடிப் போராடி ஓடினான்.

குழந்தை பல்கணிக்குச் சென்றது. திரும்பிச் சண்முகத்தைப் பார்த்துக் கைதட்டிச் சிரித்தது. சண்முகம் வேகமாக ஓட முயற்சித்தான். அதற்குள் குழந்தை வேகமாகப் பாய்ந்து பல்கணிக் கட்டில் ஏறியது. அது இடுப்பு அளவு உயரம் உள்ள பல்கணிக் கட்டு. குழந்தை அதில் ஏறி நின்று தன்னை நிதானப் படுத்த முயற்சித்தது. முடியவில்லை. குழந்தை உள்ளே விழவில்லை.

'ஐயோ குழந்தை. ஐயோ குழந்தை .' சண்முகம் வாய்விட்டுக் கத்தினான்.

தொலைபேசி மணியடித்தது. உடம்பெல்லாம் வியர்வையால் தெப்பமாக நனைந்து கசகசத்தது. கைகால் நடுங்கின. ஏதாவது தப்பாகிவிடுமோ என்கின்ற பயம் பூதமாய் கிளம்பி நின்று பேய்க் கூத்தாடியது. அவசரமாகத் தொலை பேசியை நோக்கிப் பாய்ந்தான். அது மருத்துவமனையில் இருந்து வந்திருந்தது. சத்திர சிகிச்சை செய்து பிள்ளையை எடுப்பதற்கு முடிவு செய்து இருப்பதாகவும் உடனடியாக வைத்தியசாலைக்கு வருமாறும் அதில் அவனுக்குத் தகவல் கூறினார்கள். சண்முகம் கைக்கடிகாரத்தை எடுத்துப் பார்த்தான். மணி மூன்றைக் காட்டியது. கனவு அவன் நிம்மதியைத் தின்றுவிட்டது. அவசரமாய் எழுந்து பல்லைத் தீட்டினான். மனதில் அவலமான நினைவுகள் படையெடுத்தன. அவன் வேண்டாம் வேண்டாம் என்றாலும் அவை விடுவதாக இல்லை. சண்முகம் வாய் திறவாது மனதிற்குள் அழுதான்.'என்ன கோதாரிக் கனவு இது!' எனச் சலித்தான். மருத்துவமனையில் தங்கவிடாது கலைத்த தாதிமேல் கோபம் வந்தது. அங்கு தான் தங்கி இருந்தால் அவளுக்கும் ஆறுதலாய் இருந்து இருக்குமென அவன் எண்ணினான்.

சண்முகம் அவசர அவசரமாகத் தனது உடைகளை மாற்றினான். பின்பு வாடகைக் காருக்குப் போன் செய்தான்.

சண்முகம் சென்ற போது கமலத்தை சத்திர சிகிச்சை செய்வதற்குக் கொண்டு சென்று விட்டார்கள். அவனை வீட்டிற்குச் செல்லுமாறு பணித்த மகப்பேற்றுத் தாதியைக் காணவில்லை. கண்டால் பேச வேண்டுமெனச் சண்முகம் நினைத்தான். அவன் எண்ணம் நிறைவேறவில்லை. வேறு ஒரு தாதி வந்தார்.

'ஆர் டு சண்முகம் சிவசுப்பிர...?' (நீங்கள்தானா சண்முகம் சிவசுப்பிர)
'யா... யா...'
'தே விளே லித் லீத்த புல்ஸ் தில் வாண். டார்போர் மோத்த வீ ஒப்பறேற இ கஸ்த். குன் உண்டர்ஸ்கிறிவத் சேமாவென. எத்தர் ஒப்பறேசன் டு கான் சே கென்ன.' (குழந்தையின் சுவாசம் குறைந்து போனது. அதனால் அவதியாகச் சத்திர சிகிச்சை செய்ய வேண்டிய கட்டாயமாகிற்று. அவள் படிவங்களில் கையெழுத்து இட்டுவிட்டாள். சத்திர சிகிச்சை முடிந்ததும் நீங்கள் அவளை போய்ப் பார்க்கலாம்.) என்றாள்.

சண்முகம் காத்திருந்தான். சேற்றில் புதைந்த தேராகக் கணங்கள் அசைய மறுத்து வேதனையை விட்டெறிந்து சென்றன. பயம் அழிவுக்காலக் கருமேகமாகத் திரண்டு அவன் நெஞ்சைப் பிசைந்தன. நீண்ட நேரமாய் ஒருவரும் வரவில்லை. என்ன நடக்கிறது என்பதும் சண்முகத்திற்குப் புரியவில்லை. அவன் கண்ட கனவு இடையிடையே பேய்போல நினைவில் ஆடிற்று. அந்த நினைவு அவனை சுயம் இளக்கப் பண்ணியது. அடிக்கடி கொட்டாவி வந்தது. சாதுவாய் குளிராய் உள்ளங்கை வியர்த்தது. சண்முகம் எழுந்து நிம்மதி இல்லாது உலாத்தினான். பெரிய வட்டமான வெள்ளைக் கடிகாரம் ஒன்று ஒற்றை ஆந்தைக் கண்ணாகப் பயமுறுத்தியது. அதன் கம்பிகள் மாத்திரம் அசையாது நிற்பதான பிரமை. ஒரு கல் இருந்தால் எறிந்து அதன் கண்ணாடியை உடைக்க வேண்டும் போல் அவனுக்குக் கோபம் வந்தது. நாயைக் கண்டால் கல்லை காணோம் கல்லைக் கண்டால் நாயை காணோமெனச் சண்முகம் மனதிற்குள் எண்ணினான்.

அதிக நேரமாகச் சண்முகம் குழப்பத்தில் போராடினான். அவனை அதில் இருந்து காப்பது போலப் போன தாதி திரும்பி வந்தார். அவளோடு மருத்துவர் ஒருவரும் வந்தார். அவள் ஒரு பெண் மருத்துவர். எல்லோரும் வெள்ளை அங்கி அணிந்த கோலம். மருத்துவரின் அங்கி மாத்திரம் பச்சையாக சற்று வித்தியாசமாக முழங்கால் வரை நீண்டிருந்தது.

அந்த மருத்துவர் சண்முகத்திற்குக் கையைக் கொடுத்துத் தன்னை அறிமுகம் செய்து கொண்டார். அவர் முகத்தில் வாழ்த்துச் சொல்ல வந்த களை சற்றும் இல்லை. சண்முகத்திற்கு ஏதும் தப்பாக நடந்துவிட்டதா என்கின்ற எண்ணம் சுவாசத்தை இறுக்கியது. மூச்சுவிட முடியாத அந்தரத்தில் அவன் மருத்துவரின் முகத்தைப் பார்த்தவண்ணம் தவித்தான். பின்பு, அவன் தன்னைக் கட்டுப்படுத்த முடியாதவனாய்,

'வூர் ஆர் வார்ணா? வூர் ஆர் மூரா?' (எங்கே பிள்ளை? எங்கே தாய்?) எனக்கேட்ட வண்ணம் அலமலக்கப்பட்டான். அதைப் பார்த்த மருத்துவர்.

'தாமே றுஸீ. எய் வில் சினக்கமே டை.' (பொறுமையாக இரு. நான் உன்னோடு கதைக்க வேண்டும்.) என்றார்.

'யா... யா... வாற சீ... வா ஆர் தே?' (சரி... சரி... என்ன விசயம் எண்டு சொல்லுங்க.) என்றான் பரபரப்போடு.

சண்முகம் அவசரப்பட்டான். சுவாசத்தை யாரோ திருடிச் சென்றதாக அவஸ்தைப்பட்டான். அவனால் பொறுமையாக இருக்க முடியவில்லை. அவனது கற்பனைகளை யாரோ களவு செய்வதான உணர்வு. மருத்துவர் பேசத் தொடங்கினார். சண்முகம் அவரது வாயைப் பார்த்த வண்ணம் நின்றான். அவன் மனம் அவர் என்ன சொல்லப் போகிறார் என்கின்ற பயத்தில் தவித்தது.

'டின் கூனா கார்தே பிறா. ஒப்பிறஸ்சுன் வெல்லீக்கத்.' (உன் மனைவி சுகமாய் இருக்கிறாள். சத்திரசிகிச்சை வெற்றியாக முடிந்துவிட்டது.)

'தெ ஆர் பிறா? வூர்டன் ஆர் தே மே வார்ணா?' (நல்லது. பிள்ளை எப்படி இருக்கிறது?)

'தெ ஆர் லித் பிறப்பிளம் போர் கென்ன? குன் கார் வன்ஸ்கெலி மே ஓ புஸ்த. வீ கார் பிளாசேற் கென்ன போ பார்ணா அவ்டேலிங். மென் இக்க வெசிம்ற செய். டென் வில் கோ ஓவர்.' (குழந்தைக்குச் சிறிய பிரச்சனை உண்டு. அவள் சுவாசிக்க கஸ்ரப் படுகிறாள். நாங்கள் அவளைக் குழந்தைகளுக்கான பிரத்தியேகப் பகுதியில் வைத்திருக்கிறோம். அவளது பிரச்சனை சரியாகிவிடும்.) என்றார்.

அதற்கு மேல் சண்முகம் அங்கு நிற்க விரும்பவில்லை.

'எய் மோ சே. எய் மோ சே.' (நான் பார்க்க வேணும். நான் பார்க்க வேணும்) என்றான். அவனது அவசரத்தைப் பார்த்த மருத்துவர் தாதியைப்பார்த்து,

'தா மே கன் டார் ஓக் போர்கிளார் வா சம் செட்ட.' (அவனைக் கூட்டிக்கொண்டு சென்று காட்டு. அத்தோடு என்ன நடந்தது என்பதையும் விளங்கப்படுத்து.) என்று கூறிவிட்டு சென்றார்.

அந்தத்தாதி சண்முகத்தை அழைத்துக் கொண்டு குழந்தைகளுக்கான பிரத்தியேக பகுதிக்குச் சென்றாள். அப்படிப் போகும் போது அவள் சண்முகத்தோடு கதைத்த வண்ணம் சென்றாள். பால் கொடுப்பதற்கு தாங்கள் பிள்ளையை தாயிடம் கொண்டு வருவோம் என்றும், மற்றைய நேரங்களில் தாதிகளின் பார்வையில் பிள்ளை இந்தப் பிரத்தியேக

பகுதியில் இருப்பது அவசியம் என்றும் விளங்கப் படுத்தினாள். பிள்ளையின் சுவாசப்பையில் ஓட்டை இருப்பதாயும், அது நாளையளவில் நிரவிவிடும் என்றும் கூறினாள். அத்தோடு பிள்ளை தாயின் வயிற்றில் இருந்த திரவத்தைக் குடித்ததால் முதலில் சுவாசிக்கவில்லை என்றும், பின்பு தாங்கள் சுவாசம் ஊட்டியதாகவும் கூறினாள். பிள்ளையின் சுவாசப்பையில் தண்ணி போனதால் தடுப்பு மருந்து கொடுத்து இருப்பதாயும் அவள் சண்முகத்திற்கு விளக்கம் கொடுத்தாள்.

சண்முகத்திற்கு முதலில் அந்தத் தகவல்கள் மலைப்பைத் தந்தன. பின்பு என்ன நடக்குமோ என்கின்ற பயமாகவும், கவலையாகவும் அது மனதை வாட்டியது. எப்படியாவது தனது பிள்ளை பிழைத்துக் கொள்ள வேண்டுமென அவன் கடவுளிடம் மன்றாடினான். காவடி எடுப்பதாக நேர்ந்து கொண்டான். குழந்தைகளுக்கான அந்தப் பிரத்தியேக பகுதி மிகவும் பாதுகாப்பாய், நோய்க் கிருமிகள் உள்ளே புகமுடியாதவாறு அரண் செய்யப் பட்டிருந்தது. உள்ளே போக முதல் காலுறை, முகவுறை என்பன அணிந்து, பின்பு கை கழுவிக் கொள்ள வேண்டும். சண்முகம் அவசரமாகத் தாதி கூறியபடி செய்தான். அவனுக்குப் பிள்ளையை எப்போது பார்ப்போம் என்கின்ற அவதி. அறைக்குள் சென்ற போது மீண்டும் தடுமாற்றமாய் போயிற்று. பல கண்ணாடிப் பெட்டிகளில் பல பிள்ளைகளை வைத்திருந்தனர். எல்லாப் பிள்ளைகளும் கிட்டத்தட்ட ஒரே மாதிரியாகவே இருந்தன. சண்முகத்திற்கு எல்லாம் ஒவ்வொரு இராட்சத ரோஜா மலர் தூங்குவது போலத் தோன்றியது.

பின்பு அங்கு இருந்த தாதி பெயரைக் கேட்டுவிட்டு ஒரு கண்ணாடிப் பெட்டியைக் காட்டினாள். உள்ளே கண்ணாடி பெட்டியில் ரோஜா நிறத்தில் ஒரு பிள்ளை தூங்கியது. ரோஜா நிறத்திலேயே அந்தப் பிள்ளைக்குத் தொப்பி. பிள்ளைக்குப் பிராண வாயு கொடுத்து இருந்தார்கள். சண்முகத்தின் அடி மனதில் இனம் புரியாத கவலை. ஏதாவது அசம்பாவிதம் நடக்குமா என்கின்ற பயம் மீண்டும் மீண்டும் அவனைப் பந்தாடியது.

அங்கு நின்ற தாதியில் ஒருத்தி பிள்ளையின் நிலமை இப்போது பருவாய் இல்லை என்றும், இன்னும் ஒரு சில நாட்களில் பிள்ளைக்கு பிராண வாயு கொடுக்க வேண்டி இருக்காது என்றும் கூறினாள். இப்படி ஏற்படுவது ஒன்றும் அபூர்வம் இல்லை எனவும் இதற்காகக் கவலைப்படத் தேவையில்லை என்பதாகவும் சண்முகத்திற்கு அவள் ஆறுதல் கூறினாள்.

அவளின் வார்த்தைகள் சண்முகத்திற்கு சற்று நிம்மதியைத் தந்தது. சண்முகம் ஆவலாகத் தனது மகளைப் பார்த்தான். கண்ணாடிப் பெட்டியில் இருந்த ஓட்டையால் கை விரலைக் கொடுக்க, கொடுத்த விரலை நித்திரையிலும் அவள் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள். இந்தப் பிடியை அவள் விடக்கூடாது என்கின்ற அடங்காத ஆசை அந்தக் கணமே முளை கொண்டது. சுவாசம் தற்போது சீராக இருப்பதை அவனால் பார்க்க முடிந்தது. சண்முகம் அமைதியானான். தன்னுடைய ரோஜாக் குட்டி என்கின்ற பெருமை மெல்ல மனதில் தளிர் விடத் தொடங்கியது. அவன் நேரம் போவது தெரியாது அங்கு நின்று பிள்ளையைப் பார்த்தான். அதை அவதானித்த அவனோடு வந்த தாதி,

'வில் டு சே போ கூனா டீ?' (உனது மனைவியைப் பார்க்கப் போறாயா?) என்றாள்.

சண்முகம் அவசரமாக'யா... யா...' என்றான். பின்பு பிரிய மனது இல்லாது மகளைவிட்டுப் பிரிந்து கமலத்தைப் பார்க்கச் சென்றான். வளமையாக மகப்பேற்றுக்கு வருபவர்கள் எல்லோருக்கும் தனியறை கிடைப்பதில்லை. கமலத்தின் அதிஸ்ரம் அவளுக்குத் தனியறை கிடைத்திருந்தது.

கமலம் செத்துப் பிழைத்தவளாய் கட்டிலில் கிடந்தாள். இரத்த போக்கு அதிகம். மார்பால் பால் சுரந்து அவள் அணிந்திருந்த மருத்துவமனைச் சட்டை நனைந்து பின்பு பாலின் வெல்லத்தின் பிசு பிசுப்பில் உடம்போடு ஒட்டியது. பால் எடுக்கும் கருவியை கொண்டு வந்து வைத்திருந்தார்கள். இன்னும் அதை எப்படி உபயோகிப்பது என்று காட்டிக் கொடுக்கவில்லை என்பதைச் சண்முகம் உணர்ந்து கொண்டான்.

கமலம் கதைப்பதற்கே பலம் இல்லாதவள் போலப் புன்னகைத்தாள். அந்தப் புன்னகையில்கூட அவளுக்கு வலியிருப்பதை உணர்ந்த சண்முகத்தின் தவிப்பு. எத்தனை வலியையும் ஒரு மழலைக்காகத் தாங்கி கொள்வது மனித இயல்பு. இயற்கையின் ஏமாற்று. உலகத்து அனைத்து ஜீவராசிகளின் இயல்பும் அதுவே. வம்ச விருத்தி என்கின்ற இயற்கையின் தேவையைப் புரிந்தும், புரியாமலும் நிறைவேற்றும் உலக உயிரினங்கள். நாங்களும் அந்த

இன்பத்தையும் துன்பத்தையும் அனுபவிப்போம் எனச் சண்முகம் மனதிற்குள் எண்ணினான். மறுக்க முடியாத இயற்கையின் கட்டளையில் விளையும் இன்பமும் துன்பமும் உலகத்தின் இயக்கமாக. அதில் ஒரு பாகமாக அவர்கள்.

# 4

தேனுகா 'பொர்ணவூ' என்னும் இடத்தில் ஒரு அடுக்குமாடிக் கட்டடத்தில் குடியிருக்கிறாள். பழைய விமான நிலையம் பரந்து கிடந்த பகுதி அது. பழைய விமான நிலையத்தைக் 'கர்டமூவன்' என்கின்ற இடத்திற்கு மாற்றிய பின்பு அதற்குப் புனர்வாழ்வு கிடைத்தது அல்லது விமான நிலையம் என்கின்ற பழைய வாழ்வை இழந்தது. ஒஸ்லோவுக்கு வெளியே இருக்கும் ஒஸ்லோவின் மேற்குப் பகுதியின் தொடர்ச்சி அது. அந்தப் பகுதிகளில் வீடுகளின் விலை அதிகம். பழைய விமான நிலையம் கைவிடப்பட்ட பின்பு பல சர்வதேச நிறுவனங்களும் 'தெலநூர்' போன்ற சில நோர்வேயில் பிறந்த சர்வதேச நிறுவனங்களும், அத்தோடு பல உள்ளூர் நிறுவனங்களும் போட்டி போட்டு அங்கு குடிவந்தன. அது மேலும் அவ்விடங்களின் மதிப்பைப் பன்மடங்காக்கியது.

தேனுகாவின் வீடு நவீனமயமான குடியிருப்புகளில் ஒன்று. அவளுக்கு நிகழ்ச்சி மூலம் கிடைத்த விளம்பரப் பணத்தை முதலீடாக வைத்து அதை வாங்கினாள். அந்த வருவாய் கிடைத்திருக்காவிட்டால் வீடு வாங்க அப்பா அம்மாவின் உதவி தேவைப்பட்டிருக்கும். அவர்கள் உதவி இல்லாது வீடு வாங்குவதைப் பற்றி அவள் கனவுகூடக் கண்டிருக்க முடியாதவாறு வீட்டு நிலவரம் ஒஸ்லோவில் மாறிவிட்டது. வீட்டின் விலை ஏவுகணையாக வசதி குறைந்தவர்களைப் பின் தள்ளிப் பிரபஞ்சத்தை நோக்கிப் பயணிக்கிறது. அப்பா அம்மாவிற்குப் பெரிய வீடு இருக்கும் பொழுது தேனுகாவுக்கு எந்த உதவியும் கிடைத்திருக்காது. அப்படி ஒரு கொள்முதலுக்கு எந்தத் தேவையும் வந்திருக்காது. அப்பா அம்மாவுடனான உறவு பாதாளத்தில் விழுந்தமை அவளுக்கு வீட்டுத் தேவையை உண்டு பண்ணியது. ஒரே கூட்டுக்குள் இருந்து எதிரியின் முகத்தையே பார்க்கத் தேனுகாவுக்குப் பிடிக்கவில்லை. பாதாளத்தில் விழுந்துவிட்ட அப்பா அம்மா உடன் இருந்த உறவை இனிப் பூலோகத்திற்கு இழுத்துவர முடியாது என்பதும் புரிந்தது. ஒரு வேகத்தில் செய்தது செய்து முடிந்தாயிற்று. பின் நாளில் பல விபரீதமான பக்க விளைவுகளை அது தந்துகொண்டே இருக்கும் என்பது அப்போது புரியவில்லை. இக்காலத்தில் அந்தப் புரிதல் அவளுக்கு வேதனை தந்தாலும் அது மாற்ற முடியாதாகிவிட்டது.

இப்பொழுது தேனுகாவால் அப்பா அம்மாவோடு சேர்ந்து இருக்க முடியாது. இருக்கும் வெறுப்பில் வீட்டை யாருக்காவது அவர்கள் எழுதி வைத்தாலும் வைப்பார்களெனத் தேனுகா நினைத்துக் கொள்வாள். அப்பா அம்மாவைப் பார்க்கப் போவதில் இருக்கும் சந்தோசம் எங்கோ தொலைந்து போய்விட்டது. அவர்களைப் பார்க்கப் போவதை எண்ணினாலே அவளுக்கு வயிற்றைப் பினைகிறது. போகக் கூடாது என்றுதான் அவள் எண்ணினாள். தனிமையில் இருப்பவர்களுக்கு ஏதாவது நடந்துவிட்டால் என்கின்ற பயம் அவளைக் குழப்பியது. தனிமையில் இறந்து அழுகும் பிணங்களின் வரலாற்றை அவள் நிறைய அறிந்ததுண்டு. அப்பிடி தனது அப்பா அம்மாவிற்கும் ஏற்பட்டுவிடக் கூடாது என்கின்ற பயம் தேனுகாவின் பிடரி பிடித்துத் தள்ளியது. மனம் இல்லாத போதும் கட்டாயத்திற்குப் போகவேண்டிய கட்டாயத்தை எண்ணிக் கறுவிய வண்ணம் அவள் போவதற்குத் தயாரானாள். அவர்களைப் பார்க்க விருப்பம் இல்லாவிட்டாலும் அவர்களைப் பார்த்தவுடன் பாசம் பொத்துக் கொள்ளும். அதற்குப் பின்பான கதை வேறாகும். பேசப் பேச உருகி உருகி நிற்பாள். சிலவேளை இந்த வெறுப்பையும் மிஞ்சி அவர்களைப் பார்க்க வேண்டும், அவர்களோடு சேர்ந்து வாழ வேண்டும் என்கின்ற ஆசையும் பீரிடுவது உண்டு. ஊசலாடும் மனதில் ஆசையும் வெறுப்பும் நாணயத்தின் இரு பக்கங்களாக நர்த்தனம் ஆடுகின்றன.
தேனுகா வெளியே போவது என்றால் பொலிஸ் கொடுத்த அலார்மை கவனமாகக் கொண்டு செல்ல வேண்டும். தேனுகா அதை எப்பொழுதும் தனது கைப்பையில் வைத்திருப்பாள். அந்தச் சம்பவத்தின் பின்பு அவளை அலார்ம் கொண்டு திரியும்படி பொலிஸ் பணித்திருந்தது. அவளுக்கு இருக்கும் ஒரே பாதுகாப்பும் அதுதான் என்பது அவள் முடிவு. இந்தப் பிரச்சனை நிகழ்ச்சியில் கலந்து கொண்டதன் பக்க விளைவுகளில் ஒன்று. இந்தப் பக்க விளைவுகளுக்கு எப்போது முடிவு வரும் என்பதுதான் அவளுக்கு விளங்கவில்லை.

தேனுகா வெளியே புறப்பட முதல் தன்னை ஒருமுறை கண்ணாடியில் பார்த்தாள். இறுக்கமான டெனிம் அழுத்திய பிடியில் உடலின் அரைக்குக் கீழான வளைவுகள் நளினமாக எட்டிப்பார்த்தன. அவள் குதியுயர்ந்த சப்பாத்து உடலுயரம் கூட்டியதில் ஒருவித திருப்தி. இந்தவிதமான குதியுயரச் சப்பாத்து அப்பாவுக்குப் பிடிக்காது என்பது அவளுக்கு ஞாபகம் வந்தது. அப்பாவுக்காகத் தனது சிறிய சிறிய விருப்புகளை ஏன் தியாகம் செய்ய வேண்டும் என்கின்ற கேள்வி எழுந்தது. யாருக்காகவும் தனது விருப்புகளை விட்டுக்கொடுக்க முடியாதென அவள் தன் மனதிற்குள் உறுதி பூண்டாள்.

குளிர் என்பதால் சட்டைக்கு மேலே சுவேற்றர் அணிந்தாள். பொபிள்ஜெக்கெற் என்னும் மொத்தமான ஜெக்கெற்றை மாட்டினாள். அதன் தொப்பியால் தலையை மூடிப்பார்த்தாள். அவளுக்கு அது திருப்தி தந்தது. தலை முடியைத் தற்போது கட்டையாக வெட்டி உள்ளாள். ஜெக்கெற்றின் தொப்பியால் மொட்டாக்குப் போட்டு கொள்வதற்கு அது வசதியாகிற்று.

தலைக்கு ஜெக்கெற்றின் தொப்பியை இழுத்துவிட்ட வண்ணம் வெளியே வந்தாள். கதவைப் பூட்டிய பின்பு மீண்டும் அலார்ம் இருக்கிறதாவெனக் கைப் பையை ஒருமுறை சரி பார்த்தாள். அலார்ம் பத்திரமாக இருந்தது. திருப்தியுடன் கீழே இறங்கி தங்கள் குடியிருப்புக்கு முன்னால் இருந்த பேருந்துத் தரிப்பிடத்தில் வந்து நின்றாள். தேனுகா யாருடைய கண்ணையும் நேரே பார்ப்பதில்லை. அப்படி யாராவது பார்த்தாலும் உடனே தனது பார்வையை வேறுபக்கம் திருப்பிக் கொள்வாள். இயலும் என்றால் மொத்தமாக மறு திசைக்கே திரும்பிவிடுவாள். கண்ணைப் பார்க்கப் போனால் உங்களை எனக்குத் தெரியும் என்று கதை கொடுக்கப் பலர் தயாராக இருந்தனர். அதுவும் ஒத்த வயது ஆண்கள் மிகவும் மோசம் என்பது தேனுகாவின் கருத்து. தமிழ் ஆண்களைக் கண்டால் அவளுக்கு அதிகமாக நடுக்கம் எடுக்கும். அவர்கள் தொல்லை தரவேண்டும் என்பதற்காகவே தன்னை பார்ப்பதாகவும், தன்னோடு கதைக்க வருவதாகவும் அவள் எண்ணுவாள்.

'பொர்ணவூவில்' இருந்து பேருந்தில் வந்தவள்'நாசுனால் தியேட்டரில்' இறங்கி அங்கிருந்து சுரங்கரதம் எடுத்துத்'திவைத்தா'வுக்கு வந்தாள். திவைத்தாவில் இருந்து பேருந்து எடுத்தால் வீட்டிற்குச் சென்று விடலாம். சனிக்கிழமை என்பதால் பேருந்துத் தரிப்பில் ஆட்கள் சொப்பிங் பைகளுடன் நின்றனர். சனிக் கிழமையில் கடைகளுக்குப் போய் வருபவர்கள் அதிகம். தேனுகா எப்போதும் வியாழக் கிழமைகளில் பொருட்கள் வாங்கி வருவாள். அப்பொழுது கடைக்குள் அதிகமான மனிதர்களைச் சந்திக்க வேண்டி நேராது. அந்த நேரங்களில் கூட சிலர் கண்டு பல்லை இளித்தால் அவளுக்குப் பற்றிக்கொண்டு வரும். தேனுகா திருப்பிப் பல்லைக் காட்டுவது இல்லை. முகத்தை மறுபக்கம் திருப்பிக்கொண்டு வந்து விடுவாள். மனிதர்களோடு பழகவேண்டும் என்கின்ற ஆசை அவளுக்கு உண்டு. மனிதர்களோடு பழகினால் அவள் மறக்க நினைக்கும் வேதனைகளை எல்லாம் கிளறுவார்கள் என்கின்ற பயத்தில் அந்த மனித நட்பிற்கெல்லாம் தேனுகா நெருப்புச் சுவர் எழுப்பிவிட்டாள். ஒரு முறை பத்திரிக்கை ஒன்றில் அவளைப் பற்றி செய்தி வந்ததாகக் கேள்விப்பட்டாள். அந்தப் பத்திரிக்கையை வாங்கிப் பார்த்த பொழுது அகங்காரம் பிடித்தவள் என்று அதில் எழுதி இருந்தது.
தேனுகா தான் அகங்காரம் பிடித்தவள் இல்லையெனவும் தன்னை அநியாயமாகப் பழிவாங்குகிறார்கள் எனவும் எண்ணினாள். தான் எதற்காக அந்நியப்படுகிறேன் என்பது புரியாத அறியாமையில் எழுதுகிறார்கள் என்பது அவளுக்கு விளங்கியது. மனிதர்களோடு பழகப் பின்னடிப்பதை வைத்து அந்த நிருபர் தன்னை எடை போட்டிருக்கிறார் என்பது அவளுக்குத் தெளிவாகிற்று. செய்த தவறுகளுக்கு எல்லாம் சேர்த்து தான் இப்போது இரும்புத் திரை போடுவது தவிர்க்க முடியாது என்பது அவளுக்குப் புரிந்தது. அந்தத் திரைக்கு மறுபக்கம் நிற்பவர்கள் தன்னைப் பற்றி தப்பாகக் கூக்குரல் இடுவது அவளுக்குத் தெளிவாகக் கேட்டது. தாண்டிச் சென்று பதில் சொல்லும் துணிவோ அல்லது விருப்போ அற்று அவள் மௌனியானாள்.

திவைத்தாவில் இருந்து'ஒப்சாலுக்கு' போவதற்குச் சிவப்பு நிற பேருந்து இரண்டு பக்கங்களால் வரும். ஒன்று'கெல்ஸ்பியூர்' பக்கம் இருந்து வரும். மற்றது'குருரூட்' பக்கமிருந்து வரும். குருரூட் பக்கமிருந்து'கொல்மெல்லியா' செல்லும் பேருந்து வந்தது. தேனுகா அதில் ஏறினாள். வசதியாக ஒரு ஆசனம் இருக்க அவள் அதில் இடம் பிடித்தாள். எல்லோரும் தன்னைப் பார்ப்பதான ஒருவித அவஸ்தை உண்டாகிற்று. இப்படி மனிதர்களுக்குப் பயந்து எவ்வளவு காலம் வாழ்வது என்கின்ற புகைச்சல் எழுந்தது. பேசாது லண்டன் அல்லது நியுயோர்க் சென்றுவிடலாம் என்கின்ற எண்ணம் தோன்றியது. அப்படிச் சென்றால் கடைசிக் காலத்தில்

அப்பா அம்மாவுக்குப் பக்கத்தில் யாரும் இருக்கமாட்டார்கள் என்கின்ற மனவுறுத்தல் அந்த எண்ணத்தை வலுக்கட்டாயமாக அவளிடம் இருந்து பிடுங்கி எறிந்தது. மனிதர்களுக்குப் பயந்து, பயந்து ஒஸ்லோவில் வாழ வேண்டிய கட்டாயம் அவள் மனதில் வேம்பாகக் கசந்தது.

தேனுகா பேருந்தின் கண்ணாடியால் வெளியே பார்த்தாள். அது அவளுக்கு உள்ளே இருக்கும் மனிதர்களைப் பார்ப்பதில் இருந்து தற்காலிக விடுதலையைத் தந்தது. வெளியே சின்னதும் பெரியதுமான வீடுகள். முதலில் புதிய தொடர் வீடுகள் வந்தன. அவை இரண்டு வருடங்களுக்கு முன்பு கட்டி முடிக்கப்பட்டவை. அதைத் தொடர்ந்து பழைய தனி வீடுகள். அந்த வீடுகளை ஊடறுத்து ஒரு ஓடை ஓடுகிறது. அந்த ஓடையில் வாழும் மீன்களைப் பாதுகாக்க வேண்டும் என்கின்ற தகவல் ஒரு பலகையில் பெரிதாகச் சிரித்தது. அதையடுத்து ஒரு பழைய வீட்டின் முன்னால் இரண்டு கார்கள் நின்றன. அதில் சில இந்தியர்கள் குடியிருப்பது அவளுக்குத் தெரியும். பேருந்து ஒரு பாடசாலைக்கு முன்பு நின்றது. அதில் ஒரு மத்திய கிழக்கு நாட்டைச் சார்ந்தவனும் இன்னும் சிலரும் நின்றார்கள். பேருந்து நிற்கவும் அவர்கள் வந்து அதில் ஏறினார்கள்.

தேனுகா பேருந்தில் ஏறி வருபவர்களை மேற்கொண்டு பார்க்காது மீண்டும் தனது பார்வையைத் திருப்பி வெளியே செலுத்தினாள். அந்தப் பாடசாலைக்குப் பின்னே பெரிய கோலும் விளையாட்டு மைதானமும் இருக்கிறது. தேனுகா சில காலம் அங்கு கரப்பந்தாட்டம் பழகினாள். பின்பு அப்பா அம்மாவுக்கு நேரம் இல்லை என்பதால் அதை நிறுத்தினாள். கரப்பந்தாட்டம் விளையாடிய காலம் இனிமையானது. அந்த இனிமையை அம்மா அப்பாவால் புரிந்து கொள்ள முடியவில்லை. அவர்கள் தங்களது இலட்சியத்தில் தொலைந்து போனதால் தனது இருப்பை மறந்து போனார்களோ எனத் தேனுகா எண்ணினாள்.

பேருந்து புறப்படவும் யாரோ பக்கத்தில் வந்து இருப்பதான ஒரு உணர்வு தேனுகாவுக்கு ஏற்பட்டது. அதைத் தொடர்ந்து ஒருவித பழக்கமில்லா வாசம் மூக்கை நெருடியது. தேனுகா யார் வந்து இருந்தார்கள் என்று பார்க்கவில்லை. அது தேவையில்லாத சங்கடங்களை உண்டு பண்ணலாம் என்பது அவள் கணிப்பு. அவள் தொடர்ந்தும் நோர்வேயின் இயற்கை அழகை இரசித்தாள். அவள் இரசிப்பு நீடிக்கவில்லை. பக்கத்தில் வந்து இருந்தவன் தன்னைப் பார்ப்பதான உறுத்தல் அவளைச் சுறண்டியது. திரும்பிப் பார்த்தால் கதை வளரும் என்கின்ற அசௌகரியம் அவளிடம். தேனுகா அவனைக் கண்டு கொள்ளாதவள் போல வெளியே பார்த்தாள். அவன் அவளை விடுவதாய் இல்லை. தானாகவே கதைக்கத் தொடங்கினான்.

'உன்சில்' (மன்னிக்கவும்) என்றான் அவன். தேனுகா எதுவும் செய்ய முடியாது அவனைப் பார்த்தாள். அவனது முகத்தில் வெற்றிவாகை சூடியதான பரவசம். தேனுகாவுக்கு அடுத்து அவனிடம் இருந்து என்ன கேள்வி வரப் போகிறது என்பது புரிந்தது. அதற்குத் தான் என்ன பதில் சொல்ல வேண்டும் என்று யோசித்தாள். உண்மை பேசுவதில்லை. உண்மை பேசிப் பிரயோசனம் இல்லை. அவை வீண் தொந்தரவுகளைத்தான் கொண்டு வரும். அவள் முடிவு செய்து கொண்டு மீண்டும் முகத்தை வெளியே திருப்பிக் கொண்டாள். அவன் விடுவதாக இல்லை. மீண்டும்,

'உன்சில்' (மன்னிக்கவும்) என்றான். தேனுகாவுக்குக் கோபம் வந்தது. பொறுமை தொலைந்து போயிற்று.

'வா?' (என்ன) என்று அவனைப் பார்த்துக் கேட்டாள்.

'ஆர் டு விக்பிறதர் தேனுகா?' (நீ விக்பிறதர் தேனுகாவா?) என்றான்.

'நய்.' (இல்லை) என்றாள் தேனுகா.

'டு சேர் உத் சம் கென்ன.' ( நீ அவளைப் போல இருக்கிறாய்.) என்றான் அவன். அவன் கதையைக் கேட்டு மற்றவர்களும் திரும்பிப் பார்ப்பதான உணர்வு தேனுகாவுக்கு. அது அவளுக்குக் கோபத்தை உண்டு பண்ணியது. உடல் பூராகவும் கதிராக வெப்பம் பரவியது. முதுகு, கமக்கட்டுப் போன்ற இடங்களில் திடீரென வியர்த்தது. அடுத்த தரிப்பில் இறங்கி நடந்து போவது உத்தமமாகத் தோன்றியது. தேனுகா பேசாது இருப்பதைப் பார்த்துவிட்டு,

'காய்...' என்று கூறியவண்ணம் கையை முகத்திற்கு நேரே அவன் ஆட்டிப் பார்த்தான்.

'வா...?' (என்ன?) எனக் கோபத்தோடு கேட்டாள் தேனுகா.

'டு சேர் உத் சம் கென்ன.' ( நீ அவளைப் போல இருக்கிறாய்.)

'பிளேற கான் சே உத் சம் கென்ன. வா யெய் ஸ்கால் யோர போர் தே?' (அவளைப் போல பலர் இருக்கலாம். அதற்கு நான் என்ன செய்ய முடியும்?)

'ம்... தே ஆர் என் மூலிகெத். மென் ஈ ஒஸ்லோ? போ சம்ம மில்லியோ..? தே ஆர் ஓவறஸ்கெண்ட.' (ம்... அப்பிடியும் ஒரு சந்தர்ப்பம் இருக்கிறது. ஆனா ஒஸ்லோவில... அதுவும் ஒரே இனத்திற்க... அதிசயம்தான்.) என்றான். தேனுகாவுக்கு அதற்கு மேல் பேருந்தில் பிரயாணித்து அவனுக்கு விளக்கம் சொல்லப் பிடிக்கவில்லை. அவள் எழுந்தாள். அவன் வழிவிட மனம் இல்லாது முதலில் வழிந்து வேறு வழியின்றி வழிவிட்டான். எழுந்து சென்ற தேனுகாவைப் பார்த்து,

'வீ கான் சினக்க என் அன்னேன் காங்.' (நாங்கள் இன்னொருமுறை கதைப்போம்.) என்றான். பேருந்து அடுத்து வந்த தரிப்பில் நின்றது. தேனுகா முறைத்துக் கொண்டு பேருந்தில் இருந்து அவசரமாக வெளியேறினாள். வெறுப்பும் சினமும் அவளை விரட்டியது. மீதி இடத்தை நடந்தே செல்ல வேண்டும் என்கின்ற கோபம் மனதில் பொங்கியது. அவள் நடக்கத் தொடங்கினாள். வாழ்க்கை தலை கீழாக மாறிவிட்டது. அம்மாவின் புகழுக்கும் தனது புகழுக்குமான வித்தியாசம் தெரியத் தொடங்கியது.

அம்மாவிற்கு இருந்த புகழ் தேனுகாவுக்குத் தெரியும். தேனுகாவின் அம்மா யாருக்காகவும் ஒளிந்து ஓடியது இல்லை. பாராட்டுக்கள் அவளுக்கு மகிழ்வைத் தந்தன. தமிழருக்குள் அவளுக்குத் தனியொரு மதிப்பு இருந்தது. எங்கு பார்த்தாலும் ரீச்சர் ரீச்சர் என்கின்ற போது அவள் முகத்தில் தன்னிச்சையாகப் புளகாங்கிதம் பொங்கி வழியும். தேனுகாவின் அம்மாவின் புகழ் என்பது தமிழருக்குள் மட்டும் அடங்கியது. தமிழர்களுக்கு அப்பால் தேனுகாவின் அம்மாவைப் பற்றி யாருக்கும் தெரியாது. மருத்துவ மனையில் கடை நிலை வேலையான கழுவும் வேலை செய்துவிட்டு முகம் இல்லாத மனிசியாய் வீட்டிற்கு வருவாள். அந்த நேரத்தில் தொலைந்து போகும் அவள் முகம் சா, பா சொல்லும் போது மட்டும்தான் மீண்டும் அறிமுகமாகும். அது அவளுக்கு அம்சமாகும். வித்தையினால் விளைந்த செருக்கில் ஆணவமும் அதிகாரமும் அவளிடம் தோன்றும்.

வேலை செய்யும் இடங்களில் கல்வித் தகமை இல்லாவிட்டால் அடிமைக்குக் கிடைக்கும் மரியாதை மட்டும்தான். அவளிற்கு இருந்த சங்கீத ஞானத்திற்கும் அதுதான் கிடைத்தது. தனக்குப் பாடத் தெரியும் என்று தானாகப் போய் யாரிடமும் சொல்லுபவள் அல்ல தேனுகாவின் அம்மா. தமிழில் பாடினாலும் புரிந்து கொள்பவர்கள் எத்தனை பேர் இங்கு? கருநாடக சங்கீதத்தை மேற்குத் தேச இசை போல் பலராலும் தொடர்ந்து இரசிக்க முடியாது. இசைக்கு முக்கியத்துவம் கொடுக்கும் மரபு அவர்களுடையது. குரலுக்கு முக்கியத்துவம் கொடுப்பது எங்கள் இசை மரபு. இசை தணிந்த குரல் துருத்தும் எங்களது பாட்டைக் கேட்டாலே சிலருக்கு வெறுப்பு வந்துவிடும் என்பது தேனுகாவின் அம்மாவின் கணிப்பு. தேனுகாவிற்கே அம்மாவின் இசை பிடிப்பதில்லை. சா, பா என்று அவள் இழுக்கத் தொடங்கும் போதெல்லாம் தேனுகா கதவை இறுக்கிச் சாத்திக் கொள்வாள். இயலும் என்றால் வீட்டை விட்டு வெளியே போய்விடுவாள். இசையா? இம்சையா? என்பது அவளுக்குப் புரிவதில்லை. புரிய முடியாதவை இம்சையாகவும் புரிவன இசையாகவும் இருக்க வேண்டுமென அவள் எண்ணுவாள். ஒரு பட்டதாரியாக இருந்தாலும் இந்நாட்டு நிலத்தைத் துப்பரவு செய்வது தவிர்க்கமுடியாது போய்விட்டது. அதுவே தமிழ் மொழிக்கான விதியாகிற்று.
தேனுகாவின் அம்மாவிற்குப் புகழின் முகத்தோடு வலம் வருவது பிடித்திருந்தது. முகமில்லாத மனிசியாய் வாழ்வதே சுகம் என்பது தேனுகாவின் இன்றைய அனுபவமாகிறது. அப்படி வாழ்வது சுதந்திரம் என்பது அவள் முடிவு. மனித அறிமுகத்திற்குப் பயந்து ஓடும் அவளது இப்போதைய வாழ்க்கை வெறுத்துப் போய்விட்டது.

தேனுகா நினைவுகளில் மிதக்கக் கால்கள் தன்பாட்டில் நடந்தன. சில விடயங்கள் தன்னிச்சையாக நடப்பவை. அது ஒரு நாற்சந்தி. அதைத் தாண்டினால் எரிபொருள் நிலையம் ஒன்று இருக்கிறது. அதையும் தாண்டியவுடன் இன்னுமொரு சந்தி வருகிறது. அதில் வலக்கைபக்கம் திரும்பி நடந்து சென்றால் தேனுகாவின் அப்பா அம்மா குடியிருக்கும் வீட்டிற்குச் செல்லலாம். அவளுக்கு அந்தப் பழகிய ஒழுங்கை வழியாக செல்வதற்குப் பிடிக்கவில்லை. அவள் முதல் வந்த நாற் சந்தியிலேயே வலக்கைப் பக்கம் திரும்பினாள். அவ்வழியே நடந்து சென்றவளுக்கு அழுகை வந்துவிட்டது?

'என்ன வாழ்க்கை இது?' தன்னைத் தானே பொறுக்க முடியாது கேட்டுக்கொண்டாள்.

ஓயாத இரணமான போராட்டமே பலருக்கு வாழ்வாகிறது. புகழோடு வாழ்வது சிலவேளை சுகமாகிறது. சிலவேளை இரணமாகிறது. இந்த இரணத்தில் இருந்து எப்படி விடுபட முடியும்? என்கின்ற எண்ணங்கள் சாட்டைவீச அவள் வேகமாக நடந்து சென்றாள்.

திடீரெனச் செத்துப் போய்விடு, செத்துப் போய்விடு என்று ஒரு குரல் அவளது தலையைச் சுற்றுவதாக பிரமை தட்டியது. அவள் ஒரு சிறிய ஒழுங்கைக்குள் திரும்பி வேலி ஓரமாய் சிறிது நேரம் நின்றாள். பின்பு கோழைத்தனமான எண்ணங்கள் தன்னை வெல்லக்கூடாது என்கின்ற பிடிவாதத்தோடு தொடர்ந்து நடந்தாள்.

அப்படி நடந்து சென்றவளுக்கு மீண்டும் தனது புகழின் மேல் வெறுப்பு வந்தது. விளையாட்டாக நினைத்துத் தொடங்கியது தனது பிடிவாத குணத்தால் வினையாகிப் போனதாய் நினைத்தாள். மறு கணம் இல்லை அது எனது சுதந்திரம் என்று எண்ணினாள். ஒரு சமுதாயத்தில் புகழாகப் பார்க்கப்படுவது இன்னொரு சமுதாயத்தில் அவமானமாய் பார்க்கப்படுவதைத் தேனுகா பட்டுத் தெளிந்தாள். பல சமுதாயங்கள் ஒன்றிணைந்து வாழும் நாடு நோர்வே. ஒவ்வொரு சமுதாயமும் தேனுகாவைப் பற்றி ஒவ்வொரு விதமாகப் பார்க்கிறார்கள், எண்ணுகிறார்கள் என்பது அவளுக்குத் தெரியும். பெண்ணிய விடுதலைப் போராளி என்பது தொடக்கம் வேசி என்கின்ற வரையில் அதன் விம்பங்கள் சமுதாயங்களுக்கு ஏற்ப, மனிதர்களுக்கு ஏற்ப திரிபு படும் என்பது வெளிப்படை.
தேனுகாவுக்கு மனமும் கால்களும் உளைவதான சோர்வு. அந்தச் சோர்வு தன்னை வென்றுவிடக் கூடாது என்கின்ற பிடிவாதத்தோடு நடந்தாள். தேனுகா அப்பா அம்மாவின் வீட்டிற்கு அருகே வந்துவிட்டாள். இது வசதி படைத்தவர்கள் இருக்கும் வீடுகள் உள்ள இடம். ஒழுங்கைகள் மட்டும் மிகவும் குறுகியதாக இருக்கும். தேவைக்கு மட்டும் போக்குவரத்து அல்லது அமைதி என்கின்ற எண்ணத்தில் படைக்கப்பட்டவை எனத் தேனுகா எண்ணினாள். அப்பா அம்மா தன்னைக் கவனித்ததைவிட பொருளாதாரத்தைக் கவனித்ததால் மட்டுமே இங்கு அவர்களால் வீடு வாங்க முடிந்தது என்பது அவளுக்கு விளங்கியது. அவர்கள் வாழ்வை தொலைத்துத் தேடிய சொத்து. அதை எண்ண இனம் புரியாத கவலை அவளைத் தாக்கியது. தான் அதற்கான காரணமோ என்கின்ற ஐயம் திடீரென எழுந்தது. அவளுக்குக் கண்ணீர் வந்துவிட்டது.

# 5

கோவிற் கதவு பூசைக்கும் திருவிழாவிற்கும் திறக்கப்படுவது உண்டு. தேனுகா தங்கள் வீட்டுப் படலை இப்படித் திறந்து கிடந்ததைக் கண்டதில்லை. கடந்த காலத்தில் அக்கறையும் ஐமிச்சமும் அதை எப்போதும் பூட்டியே வைத்திருந்தன. இன்று வீட்டின் படலை தேடுவாரற்று திறந்து கிடந்தது. முன்பெல்லாம் இந்தத்தவறு அவர்களை மீறி என்றும் நடந்ததில்லை. தங்களுக்குரிய பிரத்தியேக இடம் என்பதை அவர்கள் தயவு தாட்சண்ணியம் இல்லாது கடைப்பிடித்து வந்தனர். தேனுகா திறந்துவிட்டாலும் பேசிப் பேசி படலையைப் பகலில் சாத்திவிட்டு வருவார்கள். இரவில் பூட்டியே விடுவார்கள். நேரம் பிந்திவந்து கத்திக் குளறி வீட்டிற்குள் போனது இன்றும் அவள் மனதில் பசுமையாக ஞாபகம் இருக்கிறது. உலக மாயைப் புரியாத அவர்களின் அந்தக்காலம்.

இங்கு வாழ்பவர்கள் களவு செய்ய மாட்டார்கள். வந்து போகின்றவர்கள் எதையாவது தூக்கிச் சென்று விடுவார்கள் என்பது அவர்களின் பயமாகும். தேனுகா அதைப்பற்றி அப்பொழுது காதில் போட்டுக் கொள்வதில்லை. இப்பொழுது அப்பா அம்மா தனித்து இருக்கிறார்கள் என்கின்ற நடுக்கத்தில் படலை திறந்து கிடப்பதுகூடப் பதட்டத்தை தருகிறது. அது பாதுகாப்புக் குறைந்த யதார்த்தமாய் அவளைப் பயமுறுத்துகிறது. படலை இன்று இப்படித் திறந்து கிடப்பது அவளுக்கு ஆச்சரியத்தைத் தரவில்லை என்றாலும் அவஸ்தையாக, கவலையாக இருந்தது. அவளுக்குத் திடீரென வயிற்றைக் குமட்டியது. உள்ளே செல்லாமல் வந்த வழியே திரும்பிப் போய்விடலாமோ என்று தோன்றியது. பாவம் அவர்கள் என்கின்ற எண்ணம் மனதை வருடியது. தயக்கத்தைத் தணித்தது.

பெற்ற பாவம். வளர்த்த பாவம். ஒரே ஒரு பிள்ளையாகப் பிறந்த பாவம். அவள் படலையை தாண்டி வளவிற்குள் காலடி எடுத்து வைத்தாள். பனி வெட்டாது கரைந்து பளிங்காக மின்னிற்று. எந்தக் காற் தடங்களும் இல்லாத தூய்மை. தேனுகாவுக்கு ஒரு கணம் திக்கென்றது.'சீ அப்படி ஏதும் இருக்காது.' எனத் திடமாக நம்பினாள்.

தேனுகா மேற்கொண்டு நடக்கக் கால்கள் வழுக்கின. அவள் வழுக்கி வழுக்கி உள்ளே சென்றாள். வயிற்றைத் தொடர்ந்தும் பினைந்தது. ஒருவாறு படிகளில் ஏறினாள். கதவைத் திறந்து பார்த்தாள். அதையும் திறந்து போட்டு இருப்பார்களோ என்கின்ற சந்தேகம். கதவு பூட்டி இருந்தது. தேனுகா அழைப்பு மணியை அழுத்தினாள்.

சிறிது நேரம் சென்ற பின்பு கதவு திறந்தது. அழுகிய நாற்றம் அவளை அதிரடியாய் தாக்கிவிட்டுத் திறந்திருந்த கதவால் மூச்சு வாங்கியது. வாந்தி வந்துவிடும் போல் ஒரு அவஸ்தை அவளுக்கு. தேனுகா சமாளித்துக் கொண்டாள். வெளியே திரும்பி பார்த்துச் சுவாசித்தாள். பின்பு தன்னை ஆசுவாசப்படுத்திய வண்ணம் மீண்டும் திரும்பி அம்மாவைப் பார்த்தாள்.

கதவுக்குப் பின்பு என்றும் கண்டிராத கோலத்தில், கண்களில் இருந்து கண்ணீர் சட்டென இறங்கி, வதனத்தின் பள்ளங்களில் வெள்ளிக் கோடாக வழுக்கி ஓட, விசரியைப் போல விழித்த வண்ணம் நின்றாள் அம்மா. தேனுகா வருவாள் என்று அவள் எதிர்பார்க்காத திகைப்பு. தேனுகாவுக்கு அழுகை வந்தது. அவள் தன்னைக் கட்டுப்படுத்த முடியாது தேம்பினாள். எல்லாம் உன்னால் என்பது போல அவள் மனது அவளைக் குற்றம் சாட்டியது.

தேனுகா உள்ளே தயக்கத்தோடு புகுந்தாள். கமலம் முகத்தைச் சுளித்துக்கொண்டு வழிவிட்டாள். உள்ளே வந்த தேனுகாவுக்கு தலை சுற்றியது. இப்படியான அலங்கோலத்தில் அவள் வீட்டை ஒரு போதும் பார்த்தது இல்லை. இது என்ன பழிவாங்கல் என்பதும் அவளுக்குப் புரியவில்லை. அதைப் பற்றி கதைக்கப் போனால் நிச்சயம் சண்டையாகும் என்பது புரிந்தது. என்றாலும் அவள் சற்று அவதானமாக விடயத்தைக் கதைக்க வேண்டும் என்று எண்ணினாள். பின்பு கமலத்தைப் பார்த்து,

'என்னம்மா நாத்தம் வருகுது? ஏன் வீடு இந்தக் கோலத்தில கிடக்குது?' என்றாள்.

'என்ன கோலத்தில கிடந்தா உனக்கு என்னடி? நாங்கள் நாறினா என்ன நாசமாப் போனா என்ன?. எங்களுக்குச் சா வருகுது இல்லை. பாவியர் போற இடமெல்லாம் பள்ளமும் திட்டியும் எண்ட மாதிரிப் போச்சுது.' என்றாள் கமலம் கடுப்பாக.

'இப்பிடி எல்லாம் கதைச்சியெண்டா நான் இங்க இனி வரமாட்டன்.'

'உன்னை யாரடி இங்க பாக்கு வெத்திலை வைச்சுக் கூப்பிட்டது? மானம் மரியாதை எல்லாம் கெடுத்துப்போட்டு போனவள் நீ. உன்னை யாரோ வரச்சொல்லிக் கேட்டவையே? நீ இங்க வராத. அதுதான் எங்களுக்கு நிம்மதி. இது கூட உனக்கு விளங்குறேல்லையே?'

'அம்மா பிளீஸ் எனக்குத் தொடர்ந்தும் தண்டனை தராதை.'

'நீ செய்த காரியம் எங்களுக்கு ஏழேழு ஜன்மத்துக்கும் தண்டனை. உனக்கு என்ன தண்டனை? நீ வெட்கம், மானம், ரோசம் இல்லாமல் திரியிறாதானேடி?'

'அப்ப நான் என்ன செத்து போகவே அம்மா?'

'ஓ... செத்துப் போடி... நாங்களும் செத்துப் போறம். அதுக்குப் பிறகாவது எங்களுக்கு நிம்மதி கிடைக்கட்டும்.'
தேனுகாவுக்கு அதற்கு என்ன பதில் சொல்வது என்று புரியவில்லை. அழுகை வந்தது. சோபாவில் இருந்து முழங்காலுக்குள் முகம் புதைத்துத் தேம்பித் தேம்பி அழுதாள். பின்பு தன்னை சமாளித்துக் கொண்டு,

'நான் செத்துப் போனா நீங்கள் நிம்மதியா இருப்பியளா அம்மா?' என்றாள்.

'ஓமடி... நீ செத்துக் காடாத்தின பிறகு நாங்கள் ஓகோ எண்டு இருப்பம். ஐயோ எனக்குச் சா வருகுதில்லை. தயவு செய்து அப்பா எழும்ப முதல் போய் சேருடி. அவர் எழும்பினா உன்ன இங்கயே கொலை செய்துபோடுவார். அந்தச் சங்கேனமும் இப்ப எங்களுக்கு வேணுமோடி? நீ மோட்டுப் பெட்டையாட்டம் நான் சொல்லச் சொல்லக் கேட்காமல் அந்த ஆட்டம் ஆடினியேடி? இப்ப பாத்தியே? ஒருத்தருக்கும் நிம்மதி இல்லை. சாவைத் தவிர வேற ஒண்டும் எங்களுக்கு நிம்மதி தரப்போறேல்ல.' என்றாள் கமலம்.

'அம்மா நாங்கள் இதை பெரிசா நினைக்காட்டி...'

'உன்ர விளக்கத்தை நிப்பாட்டு. அப்பா எழும்ப முதல் நீ உன்ர வீட்டை போய்ச்சேரு. நாங்கள் செத்த பிறகு இங்க வந்து பார். அப்பிடி நீ வந்து பார்க்காமல் விட்டாலும் எங்கட ஆத்மாக்களுக்கு நிம்மதியாகத்தான் இருக்கும்.'

‘நான் என்ன பாவம் செய்தன்?’ எனத் தேனுகா குலுங்கிக் குலுங்கி அழுதாள்.

‘ஓமடி… நீ செய்த பாவம் உனக்கு எப்பிடித் தெரியும்? நீ இப்ப நடையக்கட்டு. அவர் எழும்பினா உனக்கும் அவருக்கும் இடையில நான் நிக்கேலாது. என்ர கையாலேயே உன்ர கழுத்த நெரிச்சு இருக்கோணும். அதை செய்யிறத்துக்கு எனக்கு பலமும் இல்ல. மனமும் இல்லை. இப்பிடியே வாழ் நாள் பூராவும் நினைச்சு நினைச்சுத் துடிக்கோணும் எண்டது என்ர தலை விதி.’ என்றாள் கமலம்.

‘அம்மா அமைதியா இரம்மா. வீடெல்லாம் நாறுது. நான் கொஞ்சம் துப்பரவு செய்துபோட்டுப் போறன். அதுவரையும் தயவு செய்து பேசாமல் இரு.’ என்றாள் தேனுகா.

‘அது நாறட்டும். வீடு புழுக்கட்டும். நீ ஏன் அதைப் பற்றி கவலைப்படுகிறாய்?. நான் பாத்தும் பாராமலும் தந்த சுதந்திரத்தில தானே நீ அந்தக் கூத்தெல்லாம் ஆடினாய்? இப்ப தலைக்கு மேல தண்ணி வந்தபிறகு சமாதானம் சொல்லுறியாக்கும். உன்ர சமாதானம் எனக்கு இப்ப தேவையில்லை. நீ கொப்பற்ற கண்ணுக்கு முன்ன நிக்காதை. அவர் எழும்ப முதல் வெளியால போ. அந்த மனிசனைக் கொலை செய்ய வைச்சிடாதயடி.’

‘இல்லையம்மா நான் துப்பரவு செய்து போட்டுத்தான் போவன்.’

‘சரி. உனக்கு நான் சொல்லுறது ஒரு நாளும் விளங்கிறதே இல்ல. அந்த விசர் மனுசன் இப்ப எழும்பிவருவார். அவரோட அவமானப்பட்ட பிறகு அழுதுகொண்டு போ. கழுத்தைப் பிடிச்சு வெளிய தள்ளினாலும் நான் ஏனெண்டு கேட்கமாட்டன். ஓ சொல்லிப்போட்டன். உன்ன யார் திருத்த ஏலும் சொல்லு பாப்பம்?’

‘அது பருவாய் இல்ல. என்ன எண்டாலும் அப்பாதானே?’

‘ஓ இந்தப் புத்தி இப்பதான் வந்ததாக்கும்? இதுகளைப் பற்றி கொஞ்சம் யோசிச்சிருந்தா நீ அப்பிடி செய்திருப்பியேடி?’

‘உங்கட கவனிப்பு ஒழுங்காயில்லை. எனக்காக யாரும் இல்லாத மாதிரி இருந்திச்சு. அந்த விசரில உங்களை ஏதிர்த்துச் செய்தாச்சு. இங்க அது ஒண்டும் பெரிய விசயம் இல்ல. நீங்கள்தான் தேவையில்லாமல் சும்மா குமுறிக்கொண்டு இருக்கிறியள். உங்கள இப்பிடிப் பார்க்கேக்க எனக்கு கவலையா இருக்குது. மனசில நிம்மதியில்லை.’

‘ஓ நாங்கள் கவனிக்காமல் உன்னைத் தெருவில விட்டிட்டம். நீ தெருத் தெருவா அன்னம் தண்ணி இல்லாமல் அனாதையாத்தானே திரிஞ்சனி?’

‘நான் அனாதையாத் தெருத் தெருவா திரியாட்டாலும் வீட்டில தனிமையில அனாதை போலத்தான் இருந்தன். அது உங்களுக்கு விளங்கேல்லை.’

‘என்ரி… இப்ப யாரோட இருக்கிறாய்? இப்ப நாங்களும் இல்லாமல் தனியத்தானே இருக்கிறாய். அது உனக்கு அனாதையாத் தெரியேல்லயே?’

தேனுகா பதில் சொல்லவில்லை. சத்தமாகக் கூவர் பிடிக்காது தும்புக்கட்டையால் கூட்டத் தொடங்கினாள். தேவையில்லாது அப்பாவை எழுப்பி அவரது திருக் கூத்தைப் பார்ப்பதற்கு அவளுக்கு விருப்பம் இல்லை. கமலத்தைப் பார்க்க தேனுகாவுக்கு அழுகை வந்தது. கவலை கறையானாக அரித்ததைச் சிறுபிராயத்தில் புரிந்து கொள்ள முடியவில்லை. அது வன்மமாக மனதில் விளைந்தது. ஏட்டிக்குப் போட்டியாக அவளின் சுயத்தை அது மீறிவிட்டது. எல்லாம் முடிந்த பின்பு அந்த மீறல் இன்று அவளது மனச் சாட்சியை உறுத்துகிறது.

அம்மாவின் தலை திடீரென நரைத்துப் போய்றிறு. தலை முடி உதிர்ந்து கோலேங்கும் சாரை சாரையாக இழுபடுகிறது. முகத்தில் சுருக்கம் விழுந்து தோல் மெலிந்து விரிசல் காண்கிறது. அம்மாவின் முன் பல்லில் ஒன்று ஆட அதை நாக்கால் அடிக்கடி முன்னே தள்ளித் தள்ளி இருப்பது பரிதாபத்தையும், கோபத்தையும் அவளுக்கு உண்டு பண்ணியது. உழைத்த பணம் இருப்பில் இருக்கிறது. அதை எனக்காக வைத்திருக்கத் தேவையில்லை. தங்களுக்குச் செலவு செய்யாது யாருக்காக மிச்சம் பிடிக்கிறார்கள் என்பது தேனுகாவிற்குப் புரியவில்லை.

தேனுகா மீண்டும் கதைக்கத் தொடங்கினாள்.

‘காசை வைச்சிருந்து என்னம்மா செய்யப்போறியள்? உங்கட பல்லையாவது கொண்டே காட்டலாம் எல்லே?’

‘ஓ பல்லுக் கட்டி நான் இனி புதுசாப் பவுசு காட்டிக்கொண்டு திரிய முடியமே? எனக்கு மானரோசம் இல்லாமல் உன்னப் போல வெளியால வெளிக்கிட ஏலாது.’

‘ஐயோ அம்மா பல்லுப் போனாச் சொல்லு போம் எண்டுவினம். சொல்லுப் போனா உங்கட சங்கீதமும் போயிடும் எல்லே?’

‘மானம் போனா எல்லாம் போன மாதிரி. அது போன பிறகு இனி பல்லுப் போனா என்ன சொல்லுப் போனா என்ன? சங்கீதம் போனா என்ன? அதுக்கெல்லாம் கவலைப்பட ஏலாது. எங்கட வாக்ழ்கை முடிஞ்சு போச்சுது. இனி எப்பிடி எண்டாலும் செத்து ஒளிஞ்சாச் சரி.’

‘இப்பிடியே என்னைக் குத்தம் சொல்லிக்கொண்டு இருந்தியள் எண்டா நான் இந்தப் பக்கம் வரமாட்டன்.’

‘திரும்பவும் கேட்கிறன். அரணை கணக்கா உன்னை யாரடி இப்ப இஞ்ச வரச் சொன்னது?’

‘உங்களிட்ட வாரதுக்கு நான் யாரைக் கேட்டு வர வேணும்?’

‘இந்தா பிள்ளை… மதிப்பு குடுத்துத்தான் மதிப்பு எடுக்கிறது. நீ அப்பா அம்மாவுக்கான மதிப்பைக் குடுத்திருந்தியெண்டா இப்பவும் நாங்கள் உன்னத் தலையில வைச்சுத் தாங்கி இருப்பம். எங்கட மானத்தைச் சீர்கெடுத்துப் போட்டா. நீ செய்த வேலையில உன்ர அப்பா அம்மா செத்துப் போச்சினம். இப்ப உயிர் இருக்கிற பிணங்களா நாங்கள் சாகக் காத்திருக்கிறம். நீ இனி இங்க வராத. நாங்கள் நாறுகிறம் இல்லாட்டிச் சாகிறம் எண்டு கவலைப்படாத. எங்களக் கொஞ்சம் நிம்மதியாச் சாகவாது விடு.’

அதற்கு மேல் அம்மாவின் பேச்சைக் கேட்க முடியாது தேனுகா தேம்பித் தேம்பி அழுதாள். கமலத்தின் கண்களில் இருந்தும் கண்ணீர் பொல பொலவென உதிர்ந்தது. சிறிது நேரம் இருவரும் அழுத வண்ணம் இருந்தார்கள். பின்பு தேனுகா எழுந்து சமையல் அறைக்குள் சென்றாள். பாவித்துக் கழுவாது மலையாகப் பூஞ்சணம் பிடித்த சட்டிகளை எடுத்து கழுவத் தொடங்கினாள். அதில் ஒரு சட்டி கை தவறிக் கீழே விழுந்தது. தேனுகா திடுக்குற்றாள். கமலம் கலவரமுற்றாள்.

‘கொப்பர் எழும்பி வரப்போறார்… நீ வெளிக்கிடு.’ என்றாள் கமலம்.

கெட்ட கனவு ஒன்றுடன் போராடிய சண்முகத்தின் நித்திரை குழம்பியது. கீழே யாரோ கதைத்தது போலக் கேட்டது. யார் கமலத்தோடு கதைப்பது என்று அவனுக்குப் புரியவில்லை. கமலம் தனக்குத் தானே கதைத்துக் கொள்வது இப்போது வழக்கம். சில வேளை தனித்து இருந்து அழுது கொண்டும் இருப்பாள். அப்படி ஏதாவது இருக்கும் என்கின்ற நினைவோடு திரும்பிப் படுக்க நினைத்த சண்முகத்திற்கு ஏதோ விழுந்த சத்தம் கேட்டதான ஞாபகம்.

‘இந்த விசரி ஏதாவது செய்தாலும் செய்து போடுவாள். ஒருக்காப் போய் என்ன நடந்தது எண்டு பாத்திட்டு வந்து படுப்பம்’ என்று முடிவு செய்தவனாய் திறக்க விரும்பாத கண்களை வலுவில் திறந்து, இரவு உடுப்போடு எரிச்சல் மண்டக் கோலுக்கு வந்தான். அப்பொழுது சமையல் அறைக்குள் தேனுகா நிற்பதை அவன் கண்டு விட்டான். கண்கள் சிவப்பாக, பித்து தலைக்கேற, கை கால் நடுங்க, ஆவேசம் வந்தவனாய்,

‘இஞ்ச எங்கயடி வந்தனீ. நாங்கள் செத்துப்போனமோ எண்டு பார்க்க வந்தனியேடி?’ என்று கத்தத் தொடங்கினான்.

‘அப்பா நீங்கள் என்ன கதைக்கிறியள்?’ என்றாள் தேனுகா.

‘உண்மையைத்தான் கதைக்கிறன். நாங்கள் செத்துப் போனமோ எண்டு பார்க்கத்தானே வந்தனி? சொத்துக்கு அலையிறியா நாயே?’ என்று வன்மமாகக் கேட்டான் சண்முகம்.

தேனுகா அழுதாள். எதுவும் கதைக்கவில்லை.

‘உந்தச் சாலம் எல்லாம் என்னிட்டப் பலிக்காது. நாங்கள் செத்தாலும் நீ எங்கட பிணத்திலகூட முளிக்கக் கூடாது. இந்த வீட்டுக்க எந்தக் காரணமும் சொல்லிக் கொண்டு காலடி எடுத்து வைக்கக் கூடாது. இன்னும் ஒருமுறை இப்பிடி வந்தியெண்டா நான் கொலைகாரன் ஆகிடுவன் ஓ… போடி வெளியால எடுபட்ட நாயே.’

‘இல்லையப்பா நான் இதைக் கிளின் பண்ணிப்போட்டுப் போறன்.’

‘கிளீன் பண்ணுறியோ. உன்ன நான் கிளீன் பண்ணுறன் பாரடி.’

சண்முகம் கோபமாகச் சமையல் அறைக்குள் செல்ல முதல் கமலம் சமையல் அறை வாசலில் வந்து நின்றாள். சண்முகத்தைக் கோபமாகப் பார்த்தாள். சண்முகம் சிறிது தயங்கினான். அந்தச் சந்தர்ப்பத்தை பயன்படுத்திக் கொண்டு,

'அவள் என்னதான் செய்தாலும் சரி, தோழுக்கு மிஞ்சின பிள்ளையை நீங்கள் தொடக்கூடாது.' என்றாள்.

'மரமே... அவள் ஆடின ஆட்டத்தைப் பார்த்துப் போட்டும் அவளுக்கு வக்காலத்து வாங்கிறியே?' என்று சண்முகம் கோபமானான்.

'அது என்னவோ.... அவள்ல உங்கட கை படக்கூடாது.' என்றாள் கமலம்.

'மரம்... மரமடி நீ.'

ஏதிர் பாராத கணத்தில் படாரென ஒரு அறை கமலத்தின் கன்னத்தில் விழுந்தது. அவள் திகைத்துப் போனாள். சண்முகம் அப்படித் திடீரென அடிப்பான் என்று அவள் எதிர்பார்க்கவில்லை.

'கெதியா வெளிக்கிட்டுப் போடி நீ. இல்லாட்டி எனக்கு இடுப்பில இருக்கிற இந்தச் சாறமும் இல்லாத மாதிரி எரியும். நீ போகாமல் இப்பிடியே நிண்டியெண்டா முதல்ல கொம்மாவை அடிச்சே கொல்லுவன். ஓ சொல்லிப் போட்டன். நான் விசரில என்ன செய்வன் ஏது செய்வன் எண்டில்லை.'

'போதும்.'

தேனுகா இரண்டு கைகளையும் போதும் என்பதாய் விரித்துக் காட்டினாள். தான் கொண்டு வந்த கைப்பையை அவசரமாகப் பாய்ந்து எடுத்தாள். அதைவிட வேகமாக வெளியே வந்தாள். உருகிய மெழுகாகக் கண்களால் கண்ணீர் பொல பொலவெனக் கொட்டியது. வாசல் தாண்டும் பொழுது மீண்டும் மனம் கேளாது,

'அம்மா ஏதும் உதவி வேணும் எண்டா போன் பண்ணம்மா.' என்றாள்.

'போடி.' சண்முகம் அடிப்பது போல வாசலை நோக்கி வந்தான்.

'ஐயோ எங்கட வாழ்க்கை இப்பிடியாப் போச்சுதே...'

அம்மா தலையில் அடித்து அழும் சத்தம் தேனுகாவுக்குக் கேட்டது.

அம்மாவைத் திரும்பிப் போய் அணைத்துக் கொள்ளத் தேனுகாவுக்கு மனது படபடத்தது. அப்பாவின் இரத்தக் கோளமான கண்களும் வெறி பிடித்த கோலமும் அதற்குத் தடை போட்டது.

தேனுகா கதவை அடித்துச் சாத்திவிட்டு வெளியே வந்தாள். கடந்த காலத்தில் தான் கதவை அடித்துச் சாத்திய போது அவர்கள் இதயம் நொந்திருக்கும். இன்று அதற்குப் பதிலாக தனது இதயம் நோவதை அவள் உணர்ந்தாள். அயல் வீட்டுக்காரப் பெண் சாளரத்தைத் திறந்து இவர்கள் வீட்டைப் பார்த்தபடி நிற்பது தெரிந்தது. இந்த வீடுகளில் உள்ளே கதைப்பது வெளியே கேட்காது. அதையும் மீறி அப்பா கத்துவது சில வேளை கேட்டிருக்கலாம். அவருக்கு அப்படி ஒரு குரல் என்று எண்ணியவாறு தேனுகா தெருவுக்கு வந்தாள்.

அந்தப் பெண் தேனுகாவைப் பார்த்து,

'வுர்டன் ஆர் டின் சென்டிஸ் லீவ்?' (உனது பிரபல வாழ்க்கை எப்பிடி?) என்று கேட்டாள்.

'இக்க நுவ ஓ சீ. காதா.' ( ஒண்டும் சொல்லிக் கொள்ளுற அளவில இல்ல. வாறன்.)

தேனுகா அந்த இடத்தை விட்டு விரைவாக நகர்ந்தாள். அதற்கு மேல் அவளோடு நின்று கதைப்பதற்கு தேனுகாவுக்கு பொறுமையோ விருப்பமோ இல்லை.

நரகமான நகர்வுகள் மனதைக் குடைந்தன. புரிந்து கொள்ளாத சமுதாயம். புரிய முடியாத அப்பா அம்மா. சனங்களின் இடை விடாத தொந்தரவு. எங்கும் நிம்மதி இல்லாத வாழ்வு. அவளுக்கு நித்திரைக்கான மாத்திரைகளை விழுங்கி மரணித்தால் இந்த வேதனை தணியும் என்பதான எண்ணம் எழுந்தது. பின்பு அது கோளைகளின் முடிவு எனத் தன்னைத்தானே மீண்டும் கேலி செய்து கொண்டாள். மூச்சை இழுத்துவிட்ட வண்ணம் மேற்கொண்டு நடந்தாள்.

# 6

எதிர்பார்ப்பை, நம்பிக்கையை, வாழ்வில் ஒரு பிடிப்பை, ஒரு குழந்தையின் அவதரிப்பு பலருக்குத் தருகிறது. அது சுற்றியிருக்கும் பல உறவினர்களுக்கு ஆனந்தத்தை ஏற்படுத்துகிறது. தேனுகாவின் பிறப்பு கவலைகளை முதலில் பனி மூட்டமாய் காட்டிற்று. பின்பு அவை ஆதவனைக் கண்ட பனியாக ஆனந்தத் திருநடனம் சண்முகம் தம்பதியின் வாழ்வில் அரங்கேறிற்று. சுவாசப் பையில் ஓட்டை இருந்ததாக எண்ணி முதலில் மருத்துவர்கள் அமளிப் படுத்தினர். பின்பு அது தப்பு என்பதை உணர்ந்து கொண்டனர். அதற்காக அவர்கள் மன்னிப்புக் கேட்டார்கள். அதில் சண்முகத்திற்குப் பரம திருப்தி.

வீட்டிற்குத் தேனுகாவுடன் போகும் நாள் நெருங்கியது. கமலத்திற்கும் சண்முகத்திற்கும் அது மட்டற்ற மகிழ்வாயிற்று. மருத்துவர்கள் இறுதியில் நற்செய்தியைக் கூறியதால் முதலில் அவர்கள் விட்ட பிழைகள் மறந்து போயிற்று. மனிதப் பண்பிற்கு ஏற்ப கருணையோடு மன்னித்தாகிற்று. இறுதியில் மகிழ்வாக மகவோடு சண்முகம் தம்பதியினர் வீடெய்தினர்.

வீட்டிற்கு வந்த பின்பு சண்முகம் ஒரு கிழமை விடுப்பு எடுத்துக் கமலத்திற்கு உதவி செய்தான். அப்பொழுது இலங்கையில் யுத்தம் நடந்த காலம். கமலத்தின் அப்பா இறந்த பின்பு அம்மா யாழ்ப்பாணம் போய் அங்கு அகப்பட்டுக் கொண்டாள். கொழும்புக்கு வருவது என்றால் வெளிநாடு போதற்கான பிரயத்தனம் செய்ய வேண்டும். சிலவேளை அதைவிட மேலாக முயல வேண்டும். கமலம் யாழ்ப்பாணச் சிறையில் அகப்பட்ட அம்மாவை மறந்தாக வேண்டியதாகிற்று. கமலமும் சண்முகமும் தங்கள் வாழ்வைத் தாங்களே சுயமாகப் பார்த்துக்கொண்டனர். சண்முகம் வேலைக்குச் செல்லத் தொடங்கக் கமலம் வீட்டு வேலைகளைப் பொறுப்பேற்றாள். ஐரோப்பிய வாழ்வில் சோம்பி இருக்க முடியாது. மற்றவர்கள் மீதும் பொறுப்புச் சுமத்த முடியாது. எமது சுமையை நாமே சுமக்க வேண்டியது தவிர்க்க முடியாது. அதைப் புரிந்து கொண்டவர்கள் ஐரோப்பிய வாழ்வைப் பற்றி அலுத்துக் கொள்ளார்.

என்ன பெயர் வைப்பது என்று சண்முகத்தைக் கமலம் முதலிற் கேட்டாள். என்ன பெயர் வைக்கலாம் என்று கமலத்தைப் பார்த்து அவன் திருப்பிக் கேட்டான்.'சரியப்பா நான் கண்டு பிடிக்கிறன்.' என்று சொல்லி வைத்தாள் கமலம். பெயர் என்றதும் அவளுக்கு மீண்டும் சங்கீதத்தின் ஞாபகம் வரத் தொடங்கியது. ஏதாவது அழகான ஒரு இராகத்தை இந்தத் தளிரான ரோஜாவுக்கு வைக்க வேண்டும் என்பதாக அவள் முடிவு செய்தாள். எந்த இராகத்தை வைக்கலாம் என்கின்ற தேடல் தொடங்கியது. நீட்டாக உள்ள இராகத்தின் பெயர் வேண்டாம் என்பது அவள் முடிவு.

அவள் தேடல் தேனுகா என்னும் இராகத்தில் முற்றுப் பெற்றது. இந்த இராகம் கருநாடக இசையில் பயன்படும் இராகங்களில் ஒன்றாகும். இது ஒன்பதாவது மேளகர்த்தா இராகமாகும். இதைவிட அதற்கு இன்னும் அதிக சிறப்புக்கள் உண்டு. அந்தத் தகவல்களை எல்லாம் மறக்கடிப்பதாக அந்தப் பெயரின் அழகு அவளுக்குப் பிடித்து விட்டது. அத்தோடு அது சிறிய பெயராக அமைந்தமை வசதியாகப் போயிற்று. தேனுகாவென அந்தப் பெயரை ஆயிரம் முறை சொல்லிப் பார்த்தாள். சொல்லி பார்க்கப் பார்க்க அது நவீனமாக இருப்பதாயும், தேனாக இனிப்பதாயும் அவளுக்குத் தோன்றியது. அத்தோடு அது நோர்வேஜியரும் சொல்லக்கூடிய பெயரென எண்ணினாள்.

சண்முகத்திடம் அந்தப் பெயரை கமலம் பெருமையோடு கூறினாள்.'அருமையான பெயர் கமலம்.' என்று கூறி அவன் அதற்கு ஆதரவு அளித்தான். பின்பு எண் சாத்திரம் யாரிடமோ கேட்டு அதுவும் பொருந்துவதாய் கமலத்திடம் வந்து அவன் கூறினான்.

ஆரம்பத்தில் தேனுகாவைப் பார்க்கும் போதெல்லாம் மற்றவர்களின் கண்ணுறு பட்டுவிடக் கூடாது என்கிற பதட்டம் கமலத்திற்கு. தேனுகா ரோஜா நிறத்தில் அழகாய் இருந்தாள். தன்னைப் போல இவளுக்கும் சங்கீத ஞானம் இருக்கும் என்கின்ற அசையாத நம்பிக்கை அவளிடம்.

நீண்ட காலத்திற்குப் பின்பு கமலம் தேனுகாவுக்காகப் பாடத் தொடங்கினாள். சங்கீதம் பாடும் அம்மா ஒருத்தியின் தாலாட்டுப் பாட்டைத் தேனுகா கேட்கும் பாக்கியம் கிடைத்தது. இருப்பினும் அது அவளுக்குச் சுவைக்கவில்லை. சிலவேளைகளில் அம்மாவைப் பார்த்துச் சிரிப்பாள். சிலவேளைகளில் அம்மாவை முழுசி முழுசிப் பார்ப்பாள். சிலவேளை போதும் என்பது போலத் திரும்பிப் படுப்பாள்.

அன்று ஒரு வெள்ளிக் கிழமை. வேலையால் வந்த சண்முகத்திற்குச் சாப்பாடு கொடுத்த பின்பு தேனுகாவைத் தூக்கி வந்து சோபாவில் வைத்த வண்ணம் ஆனந்த மிகுதியால் கமலம் தன்னை மறந்து பாரதியின் பாட்டைப் பாடினாள்.

சின்னஞ்சிறு கிளியே கண்ணம்மா
சின்னஞ்சிறு கிளியே கண்ணம்மா செல்வக் களஞ்சியமே
சின்னஞ்சிறு கிளியே கண்ணம்மா செல்வக் களஞ்சியமே
என்னைக் கலி தீர்த்தே உலகில்
என்னைக் கலி தீர்த்தே உலகில் ஏற்றம் புரிய வந்தாய்

சின்னஞ்சிறு கிளியே கண்ணம்மா சின்னஞ்சிறு கிளியே
பிள்ளைக் கனியமுதே கண்ணம்மா பேசும் பொற்சித்திரமே
பிள்ளைக் கனியமுதே கண்ணம்மா பேசும் பொற்சித்திரமே
அள்ளி அணைத்திடவே என் முன்னே
அள்ளி அணைத்திடவே என் முன்னே ஆடி வரும் தேனே

சின்னஞ்சிறு கிளியே கண்ணம்மா சின்னஞ்சிறு கிளியே
ஓடி வருகையிலே கண்ணம்மா உள்ளம் குளிருதடி
ஓடி வருகையிலே கண்ணம்மா உள்ளம் குளிருதடி
ஆடித் திரிதல் கண்டால் உன்னைப் போய்
ஆடித் திரிதல் கண்டால் உன்னைப் போய் ஆவி தழுவதடி

உச்சி தன்னை முகர்ந்தால் கருவம் ஓங்கி வளருதடி
உச்சி தன்னை முகர்ந்தால் கருவம் ஓங்கி வளருதடி
மெச்சி உன்னை ஊரார் புகழ்ந்தால் மேனி சிலிர்க்குதடி
மெச்சி உன்னை ஊரார் புகழ்ந்தால் மேனி சிலிர்க்குதடி

கன்னத்தில் முத்தமிட்டால் உள்ளந்தான் கள்வெறி கொள்ளுதடி
கன்னத்தில் முத்தமிட்டால் உள்ளந்தான் கள்வெறி கொள்ளுதடி
கன்னத்தில் முத்தமிட்டால் உள்ளந்தான் கள்வெறி கொள்ளுதடி

உன்னைத் தழுவிடிலோ கண்ணம்மா உன்மத்தமாகுதடி
உன்னைத் தழுவிடிலோ கண்ணம்மா உன்மத்தமாகுதடி

உன் கண்ணில் நீர் வழிந்தால் என் நெஞ்சில் உதிரம் கொட்டுதடி
உன் கண்ணில் நீர் வழிந்தால் என் நெஞ்சில் உதிரம் கொட்டுதடி

என் கண்ணில் பாவையன்றோ கண்ணம்மா
என் கண்ணில் பாவையன்றோ கண்ணம்மா என்னுயில் நின்னதன்றோ?

அதைக் கேட்டுக் கொண்டிருந்த சண்முகத்திற்கு ஆனந்தத்தில் கண்ணீர் வந்துவிட்டது. அவன் தன்னை மறந்து பாட்டில் கரைந்தான். தேனுகா சிறிது நேரம் அம்மாவின் வாயைப் பார்த்தாள். பின்பு அங்கும் இங்கும் பராக்குப் பார்த்தாள். குழந்தைப் பிள்ளை அல்லவா என்கின்ற பரிவோடு கமலம் அள்ளி அணைத்தாள். கமலத்திற்குச் சங்கீதம் என்பது உயிரிலும் மேன்மையான ஞானம். சங்கீதம் என்பது இடையறாத் தவம். சங்கீதம் என்பது அவள் பிறவிக்கான யாகம். சங்கீதம் அவள் ஜீவ ஆத்மா. அந்த யாகம் தேனுகாவின் ஜனனத்தால் சிறிது காலம் தடைப்பட்டது. அந்த மூச்சை இழுத்து விடாது அவளால் அதிக காலம் வாழ முடியவில்லை. அவள் மீண்டும் சங்கீத வகுப்பு எடுக்கத் தொடங்கினாள். அப்போதுதான் சண்முகமும் கடை ஒன்றை எடுத்து வியாபாரம் தொடங்கினான்.

கடை, வேலை, சங்கீதம், தேனுகா... நேரத் துளிகளுக்காய் தவண்டையடிக்க ஆரம்பித்தாள். கமலம் சங்கீத மூச்செடுக்க எண்ணி பிராண மூச்சு விடமுடியாது தெண்டாடினாள். ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன்பிள்ளை தானாக

வளரும் என்று எண்ணினாள். புலிக்குப் பிறந்தது பூனையாகுமா என்று அப்பா சொல்வதும் அடிக்கடி அவளுக்கு ஞாபகம் வந்து போகும்.

தேனுகாவைக் கமலம் அடிக்கடி சங்கீத வகுப்பிற்குக் கூட்டிக்கொண்டு செல்வாள். தேனுகாவுக்குப் பத்துப்பேர் சேர்ந்து மொத்தமாகக் கத்துவது அறவே பிடிப்பதில்லை. அவள் அங்கு அழுது ஆர்ப்பாட்டம் செய்யத் தொடங்கிவிடுவாள். சிலகாலத்தில் அலுத்துப் போன கமலம் விநாயகம் அண்ணா வீட்டை தேனுகாவின் சரணாலயம் ஆக்கினாள். சொந்த மகளுக்குரிய நேரத்தைச் சங்கீத மோகத்தில் துஸ்பிரயோகம் செய்வது புரியாது செய்தாள். சொந்த மகள் எதை விரும்புகிறாள் என்பதை விளங்கிக்கொள்ள முயற்சிக்காது விளங்கியதாக நினைத்தாள்.

விநாயகம் அண்ணை கமலத்திற்குத் தூரத்து அண்ணன் உறவு. அத்தோடு அவர்கள் வீடும் மிகவும் அருகில் இருந்தது. விநாயகம் அண்ணாவிற்கும் ஒரு மகள் இருந்தாள். அவள் பெயர் பிரவீனா. தேனுகா பிரவீனாவோடு அதிகம் சேர்ந்து பழகினாள். அதைவிடக் குழந்தைகள் பாதுகாப்பு இல்லத்திற்கு வரும் நண்பர்களோடும் பழகினாள்.

கமலம் பிள்ளைகளைச் சிலவேளைகளில் வீட்டிற்கு அழைத்து வந்து பாடம் சொல்லிக் கொடுப்பாள். அப்போது தேனுகாவுக்கு முகம் பேயறைந்ததாக மாறிவிடும். தனது அறையின் கதவைச் சாத்திவிட்டு தனியே இருந்து விளையாடுவாள். தேனுகா ஏன் இப்படிச் செய்கிறாள் என்பது கமலத்திற்குப் புரியவில்லை. இந்த நேரங்களில் கமலத்திற்கு தேனுகா மேல் கோபம் பற்றிக்கொண்டு வரும். புலிக்குப் பிறந்தது பூனையாகுமா? என்று கமலத்தின் அப்பா கேட்கும் கேள்வி இவள் விடயத்தில் பொய்த்து விடுமோ என்கின்ற பயம் மெல்ல முளைவிடத் தொடங்கும். தனது பயத்தை மறக்க, மறைக்க அவள் சுரங்களுக்குள் மேலும் ஒளிந்து கொள்வாள்.

கமலத்திற்கு மரபணுக்கள் பற்றிய உயர்தர வகுப்பில் படித்த அறிவு உண்டு. தாயைப் போல பிள்ளை நூலைப் போல சேலை என்பது பொய்யாகிப் பின் நோக்கிய பரம்பரை காட்டி நிற்கும் உண்மையும் விளங்கும். அப்படியான சந்தர்ப்பங்கள் தன்னுடைய வாழ்வில் விளையாடக் கூடாது என்பதே அவளது வேண்டுதலாயிற்று. வேண்டுதல்கள் எப்போதும் வரங்களைப் பிரசவிப்பதில்லை. பின் நோக்கிய பரம்பரையில் யார் சங்கீதம் பாடினார்கள் யார் மாடு மேய்த்தார்கள் என்பதை அவள் அப்பாவிடம் கேட்க மறந்து போய்விட்டாள். அதைவிடச் சண்முகமும் அவன் பரம்பரையும் அரைப்பங்கு என்பதும் விளங்கியது. இயற்கையின் அதிசயத்தை இறைவன் என்பவன் இருந்தாலும் அவனாலேயே புரிந்துகொள்ள முடியாது? என்கின்ற மலைப்பு அவளுக்கு ஏற்பட்டது. வரங்கள் கிடைக்காவிட்டாலும் சாபங்கள் கிடைக்காமல் இருந்தால் அதுவே மேன்மையாகும். சாபங்கள் கிடைக்கக் கூடாதென கமலம் மீண்டும் மீண்டும் முருகனை வேண்டிக் கொள்வாள்.

விநாயகம் மாமாவின் மகள் பிரவீனாவைத் தேனுகா அதிகம் நம்பினாள். எப்போதும் அவளோடு சேர்ந்து இருப்பதை அவள் விரும்பினாள். பிரவீனா சில வேளைகளில் விலாங்கு மீன் குஞ்சு மாதிரி. இடையிடையே அரிச்சந்திரன் வேசம் போட்டுக்கொண்டு முழுப் பூசனிக்காயை சோற்றுக்குள் மறைப்பது தெரியாது மறைப்பாள். தேனுகாவுக்கு அந்த நெளிவு சுளிவு சற்றுத் தாமதமாகவே புரிந்தது. அவள் புளுகுவதை எல்லாம் தேனுகா உண்மை என்று நம்பிக்கொண்டு வந்து கமலத்திடம் ஒப்பித்தது உண்டு. கமலத்திற்கு அது சிரிப்பாக இருக்கும். பின்பு அவள் பொய் சொல்கிறாள் என்று கூறுவாள். அதை தேனுகா நம்ப மறுக்கும் பொழுது கமலத்திற்கு அடிமனதில் குண்டூசிகள் பாய்வதான உணர்வு உண்டாகும். நாளையளவில் சரியாகிவிடும் என்று நம்பினாள்.

அப்போது தேனுகாவுக்கு ஒன்பது வயது. மூன்றாம் வகுப்புப் படித்தாள். பிரவீனாவோடும் சில சுதேச மாணவர்களோடும் சேர்ந்து பாடசாலைக்குச் செல்வது அவள் வழக்கம். தேனுகா இடைக்கிடை நாட்குறிப்பு எழுதுவாள். அது எப்பொழுதும் அவளின் அறையில் இருக்கும். ஒரு முறை சுகவீனகாரணமாக வீட்டில் நின்ற கமலம் அதை எடுத்துப் பார்த்தாள். அதில் பிரவீனாவோடு கதைத்தது எழுதப்பட்டிருந்தது. தேனுகா, பிரவீனா மீது எவ்வளவு நம்பிக்கை வைத்து இருக்கிறாள் என்பதைக் கமலம் அதில் இருந்து அறிந்தாள். மனிதர்களை நம்ப வேண்டும். அதற்காகக் கண்மூடித்தனமாக மற்றவர்களை நம்பக் கூடாது என்பது கமலத்தின் கொள்கை. தேனுகா எந்தவித கேள்வியும் இல்லாது கண்மூடித்தனமாக பிரவீனாவை நம்புவதாகக் கமலம் எண்ணினாள். அதை எப்படி தேனுகாவுக்குப் புரிய வைக்க வேண்டும் என்பது அவளுக்கு விளங்கவில்லை. என்ன செய்யலாம் என்கின்ற குடைச்சல் அவளை அந்தரிக்க விட்டது.

கமலம் சில காலம் எதுவும் செய்யவில்லை. அவள் நினைப்பதோடு சரி. அவள் நேரத்தைச் சங்கீதம் முதலை போல விழுங்கியது. அந்த ஞான மோகத்தில் மூழ்கினால் இந்த உலகை அவள் மறந்து விடுவாள். கமலத்தின் இந்த உலக மறப்பில் தேனுகா இன்னொரு வழியில் பயணமாகினாள்.

அன்று ஒஸ்லோவின் பெரியதொரு மண்டபத்தில் நடந்த இசை நிகழ்ச்சியில் கமலம் பாடவிருந்தாள். அவள் ஆக்கினைக்கட்டி தேனுகாவுக்குப் பாவாடை சட்டை அணிவித்து ஒப்பனை செய்தாள். இன்று தன்னோடு தேனுகா நிகழ்ச்சிக்குக் கட்டாயமாக வரவேண்டும் என்பதில் கமலம் குழந்தைப் பிள்ளையிடம் குழந்தைப் பிள்ளை போல் பிடிவாதம் காட்டினாள்.

பிரவீனா அந்தச் சங்கீத நிகழ்ச்சிக்குத் தான் வரமாட்டேன் எனவும் அதற்குச் சென்றால் அலுப்படிக்கும் என்றும் தேனுகாவுக்கு முதலில் கதையளந்தாள். கமலத்தை அழைத்துச் செல்ல வந்த அண்ணாவின் காரில் அவள் முன்னாசனத்தில் பௌவியம் காத்தாள். அவள் சுடிதார் அணிந்திருந்ததோடு ஒப்பனை வேறு செய்திருந்தாள். கமலம் தேனுகாவைக் கேள்விக் குறியோடு பார்த்தாள். தாயின் பாசை விளங்கிக் கொள்ளாத மகளாகத் தேனுகா. தேனுகாவின் உணர்வைப் புரிந்து கொள்ளாத தாயாக கமலம். தேனுகாவிற்குத் தாயின் பார்வை விளங்கவில்லை. அதைப் புரிந்து கொள்ளாத தேனுகா பிரவீனாவிடம் சென்று,

'நீ வரமாட்டன் எண்டு சொன்னா?' என்று கேட்ட போது கன்னத்தைப் பொத்தி அறைய வேண்டும் போல் கமலத்திற்குக் கோபம் வந்தது.

'ஓ எனக்கு வோறிங்தான். எண்டாலும் உங்கட அம்மா பாடுறாதானே? அதுதான் வாறன்.' என்றாள் அந்த விலாங்குக் குட்டி.

கமலம் தலையை ஆட்டிக் கொண்டாள். பின்பு விநாயகம் அண்ணையைப் பார்த்து,

'அண்ணா பிரவீனாவை அரசியல்ல சேர்த்து விடுங்கோ…' என்றாள்.

'நான் என்ன சேர்க்கிறது? எனக்கும் மனிசிக்கும் இடையில அரசியல் நடத்துறதே இவள்தான். இவள் யாரை எப்ப கொளுவி வைப்பாள் எண்டு ஒருத்தருக்கும் தெரியாது. எங்கட பரம்பரையில நானறிய இப்பிடி ஒருத்தரையும் காணேல்ல. அவையின்ர பரம்பரையில ஆராவது இப்பிடி இருந்திருக்கலாம்.' என்றார் விநாயகம் அண்ணா.

'என்ர அம்மாவின்ர பரம்பரையப் பற்றியே கதைக்கிறியள்? வீட்ட வாங்க.' என்றாள் பிரவீனா.

'நான் அப்பிடி ஒண்டும் கதைக்கேல்ல அம்மா.' என்றார் விநாயகம் அண்ணா.

'அப்பிடி ஏதோ கேட்ட மாதிரி இருந்திச்சு.' என்றாள் விரவீனா.

'நான் கமலம் மாமியிட்ட சங்கீதம் பற்றியேல்லே கேட்டன்.' என்று விநாயகம் அண்ணா மழுப்பினார். அவள் முறைத்துத் தகப்பனைப் பார்த்தவிட்டு மீண்டும் தேனுகாவோடு கதைக்கத் தொடங்கினாள்.

'சண்முகத்தார் இண்டைக்கும் கடையோடதானோ?'

'என்ன செய்யிறது அண்ணா. கடைய விக்கச் சொன்னா மாட்டன் எண்டுறார். எனக்குச் சங்கீதம் படிப்பிக்க, புறோக்கிறாமுக்குப் போகவெல்லாம் இடைஞ்சலா இருக்குது எண்டாலும் விக்கிறார் இல்லை.'

'ஒவ்வொருத்தருக்கும் ஒவ்வொரு பைத்தியம். கலை, காசு, பெண், மண், பொன், புகழ் இப்பிடி ஆயிரம் விசயங்களில மனிசருக்குப் பைத்தியம். ஆனா அந்தக் கடவுளுக்குத்தான் தெரியும் எங்கட முடிவு எப்ப எண்டு. யாரும் எதையும் கொண்டு வந்ததும் இல்லை. கொண்டு போகப் போறதும் இல்லை. இந்த வாழ்க்கைகூட ஒரு கனவு மாதிரிதான். கனவு முடிஞ்ச பிறகு எதுவும் நிரந்தரம் இல்லை எண்டுறதும் விளங்கும். சூனியத்தில தொடங்கி சூனியத்தில முடியிற இந்த வாழ்வின் இடையில நாங்கள் செய்யிற கற்பனை மாத்திரம் இந்தப் பிரபஞ்சத்தையும் தாண்டி வளருது. பின்பு அதுவும் சூனியமாகுது.'

'உண்மைதான் அண்ணா. பிறந்தோம்… இறந்தோம் எண்டில்லாமல்… இருந்தோம் எண்டதுக்கு ஏதாவது விட்டிட்டுப் போக வேண்டாமோ?'

'சூனியம் ஆகிறதை எது அழிக்கும்? புகழா?'

'புகழும் அழிஞ்சிடும்.'

'அப்ப?'

‘பரம்பரை பரம்பரையாச் செல்லும் ஞானம். சில மனிதர்களின் ஞாபக அடையாளங்கள், படைப்புகள்…’

‘ஓ சங்கீத ஞானம். பிரபஞ்சமும் ஒரு நாள் அழிஞ்சிடுமாம் கமலம்.’

‘எல்லாமே அழியிறது நிச்சயம். அதில சிலகாலத்திற்கு என்றாலும் வாழுறது எது எண்டு பார்க்க வேணும். கலை, இலக்கியம், சங்கீதம் இப்பிடி சிலதுகள் நாங்கள் அழிஞ்சும் தாங்கள் வாழுமெல்லோ அண்ணா? அதில நாங்கள் அழிஞ்சாலும் எங்கட ஞாபகம் வாழுமெல்லோ அண்ணா?’

‘நீங்கள் சொல்லுறதிலும் அர்த்தம் இருக்குது.’

விநாயகம் அண்ணா அமைதியாகக் காரைச் செலுத்தினார். கமலம் சுரங்களில் மூழ்கி இராகங்களோடு ஐக்கியமானாள்.

*

கோலுக்குள் போன போது கமலத்திற்கு திகைப்பாகத்தான் இருந்தது. அவள் இவ்வளவு சனத்தை எதிர்பார்க்கவில்லை. அன்று இருப்பதற்கு இடம் இல்லாது கூட்டம் நிரம்பி வழிந்தது. இது சங்கீதத்திற்காக வந்த கூட்டம் மட்டுமல்ல என்பது அவளுக்கு மெல்லப் புரிந்தது. இந்தியத் திரைப்படத் தாரகை ஒருத்தியைப் பணம் கட்டி அழைத்திருந்தனர். அவளைப் பார்க்க வந்த கூட்டத்திற்குத் தனது சங்கீதம் எவ்வளவு விளங்கும் என்று கமலம் கவலைப்பட்டாள். யாழ்ப்பாணத்தவர் படித்தவர்கள் பண்பானவர்கள் என்கின்ற ஒரு நினைப்பு இருக்கிறது. அது நினைப்பு மட்டும்தான். நடப்பு வேறு விதமாகத்தான் இருக்கிறது. திரைப்படத்திற்கு விழா எடுக்கத் தாங்கள் தமிழ் நாட்டவருக்குக் குறைவில்லை என்பதற்கு இப்போது ஓஸ்லோவில் போட்டி நடக்கிறது. அவர்கள் தமிழை வளர்க்கப் போகிறார்களாம். இந்த அரைப் பைத்தியங்கள் பாலால் அபிசேகம் செய்தாலும் பார்த்துக் கொண்டுதான் இருக்க வேண்டும். இங்கு வாழ்பவர்களில் சில கலாரசிகர்களும் இருக்கிறார்கள். அவர்கள் சங்கீதத்தை விளங்கிக் கொள்வார்கள். என்பதாக அதற்கு ஒரு உப்புச் சப்பில்லா சமாதானம் கண்டுபிடித்துச் சாந்தி கண்டாள். பின்பு நிகழ்ச்சிக்குத் தயாரானாள்.

நிகழ்ச்சிக்குப் போனதில் இருந்து கமலம் தேனுகாவைக் கெட்டியாகப் பிடித்து வைத்திருந்தாள். இன்று தான் பாடும் பொழுது அவளையும் மேடையில் வைத்துக் கொண்டு பாடவேண்டும் என்பது அவள் திட்டம். ஞானம் பரப்ப முடியாவிட்டால் என்ன விளம்பரமாவது செய்து விடுவோம் என்பது அவள் எண்ணம். அப்படிச் செய்தால் தேனுகாவுக்கு மேடைக் கூச்சம் தணிவதோடு மேடையில் ஏறும் ஆசையும் வரும் என்கின்ற கணிப்பு அவளிடம். மேடையேறும் ஆசை வந்தால் அவள் சங்கீதத்தைச் சிரத்தையோடு கற்றுக்கொள்வாள் என்கின்ற குருட்டு நம்பிக்கை.

அந்த சினிமாத் தாரகை ஒரு சில பாட்டிற்கு மட்டும் டப்பாம் கூத்து ஆடினாள். எம்மவரும் எழுந்து நின்று கைதட்டி விசிலடித்து ஆடினர். குரங்கு தொப்பியைக் கழற்றி எறிந்தது போல அவள் செய்ததை அவர்களும் செய்தனர். ஆண் நடிகன் டப்பாங்கூத்து ஆடியிருந்தால் இன்னும் அசிங்கமாக, ஆபாசமாக இருந்திருக்கும் என்று கமலத்திற்குத் தோன்றியது. என்ன செய்வது? இவர்கள் கலையை வளர்க்கிறார்களாம் என்று கமலம் பெருமூச்சு விட்டாள். மற்றும்படி அந்த டப்பாங் கூத்து நடிகை அறிவித்தல் மட்டும் செய்தாள். மீதி நிகழ்ச்சிகள் உள்ளூர் கலைஞர்களுடையதாக இருந்தது. உள்ளூரிலேயே நல்ல அறிவிப்பாளர்கள் இருக்கிறார்கள். இருந்தும் ஒரு நடிகை தமிழைக் கொலை செய்வதை மண்ணை மீட்கப் புறப்பட்ட பாதையில் பொருளாதாரத்தை எண்ணிப் புறமுதுகிட்டு ஓடிவந்தவர்கள் குசியாக இரசித்தார்கள். அது கமலத்திற்குச் சற்றும் பிடிக்கவில்லை. நாங்கள் சுயநலமிகள். ஞான வறுமிகள். பணத்தையும் ஏட்டுப் படிப்பையும் தவிர உலகத்தை விளங்கிக் கொள்ள முடியாத ஜடங்கள் என்பதாக மனதிற்குள் மீண்டும் கொதித்தாள்.

பல நிகழ்ச்சிகள் நடந்தன. கமலத்தைப் பாட அழைத்தார்கள். கமலம் எழுந்தாள். அவளின் ஒருகை தேனுகாவைக் கெட்டியாகப் பிடித்து இருந்தது. தேனுகா எழாது தொடர்ந்தும் இருக்கையில் அமர்ந்திருந்தாள். கமலம் பொறுமையற்றவளாய்,

‘எழும்பிவா தேனுகா.’ என்றாள்.

‘நான் வரேல்ல அம்மா. எனக்குப் பயமா இருக்குது. நான் இங்கேயே இருக்கிறன். என்னை விடம்மா.’ என்றாள் தேனுகா.

‘அது ஒண்டும் பயம் இல்ல. இரண்டு தரம் ஏறி இறங்கின்னீ எண்டாக் கூச்சம் எல்லாம் மாறிப் போயிடும். அடம் பிடிக்காமல் வா இப்ப.’

‘நான் வரேல்ல அம்மா’

‘வாடி.’

கமலம் அவள் கையைப் பிடித்து இழுத்த வண்ணம் மேடையை நோக்கி நடக்கத் தொடங்கினாள். அவளுக்கு தேனுகா மேடைக்கு வருவதற்கு மறுத்தது கோபமாகவும், அதனால் மினெக்கெடுவது அவமானமாகவும் இருந்தது. அவள் கொற கொறவெனத் தேனுகாவை இழுத்த வண்ணம் மேடைக்குச் சென்றாள். தேனுகாவைத் தனக்குப் பக்கத்தில் இருத்திவிட்டுப் பாடத் தொடங்கினாள். தேனுகாவுக்கு அம்மா கோபத்தில் ஏதோ கத்துவதாய் தோன்றியது. அம்மாவின் விழிகள் காழியின் விழிகளாய் எரிப்பதான அவஸ்தை உண்டாகியது. அங்கிருந்து எழுந்து ஓட வேண்டும் என்ற உந்தல் உண்டாகிற்று. பயத்தில் அவளால் எழுந்து கொள்ள முடியவில்லை. அவள் கால்கள் நடுங்கின. கைகள் உதறின. அவசரமாக மூச்சை இழுத்து விட்டாள். கண்கள் ஓயாது கண்ணாடி முத்துக்களை உகுத்தன. உடைத்தன.

தேனுகா இவ்வளவு சனத்தை மேடையில் இருந்து இதற்கு முதல் பார்த்தது கிடையாது. அவள் இப்படிப்பட்ட மேடையில் இதற்கு முன்பு ஏறவும் இல்லை. அவளுக்கு அப்படி ஒரு ஆசையும் மனதில் இருந்ததில்லை. இவ்வளவு மனிதர்களுக்கு முன்பு அங்கு இருப்பது அவளுக்குப் பிடிக்கவில்லை. அம்மா மணிக்கட்டில் பிடித்து இழுத்து வந்த இடம் சிவந்து எரிந்தது. சனத்தைப் பார்க்கப் பார்க்கப் பயம் விஸ்வரூபம் காட்டியது. ஆயிரம் ஆயிரம் பேய்கள் அவளைத் தின்ன மேடை ஏறுவதான காட்சி அவள் மனதில் விரிந்தது. அவள் பயத்தில் அழுதாள்.
தேனுகா தேம்பித் தேம்பி அழத் தொடங்கினாள். பாடிக் கொண்டு இருந்த கமலத்தின் குரல் நின்றது. தேனுகாவை எரித்து விடுபவள் போலப் பார்த்தாள். இது மதுரையோ அவள் கண்ணகியோ அல்ல. தேனுகா மேலும் அழுதாள். விநாயகம் மாமா மேடையேறி வந்து அவளைக் கீழே கூட்டிச் சென்றார். அவளுக்குத் தானும் பேயாக மாறிய சந்தோசம். தான் இடம் மாறியதில் நிம்மதி.

கமலம்’பணிபதிசாயீ மாம்பாது.’ என்று பாடினாள். சனங்கள் புரியாது அவளைப் பார்த்தார்கள். தேனுகா நிறுத்த முடியாத சோகத்தில் கண் மூடி இருந்தாள். பிரவீனா அவளை அணைத்துக் கொண்டாள். பக்கத்தில் இருந்த ஒரு பெண் தேனுகாவைப் பார்த்து,

‘அம்மாவைப் போல மேடையில இருக்கிறதுக்கு உங்களுக்குப் பயமே? இதில பயப்பிட என்ன இருக்குது பிள்ளை?’ என்றாள்.
தேனுகா அந்தப் பெண்ணை பார்க்காது பிரவீனாவைக் கட்டிப் பிடித்தாள். வீட்டிற்கு வரும் போது வழியில் கமலம் ஒரு சொற்கூடத் தேனுகாவோடு கதைக்கவில்லை. விநாயகம் மாமா வளமை போலக் காரில் கூட்டி வந்து வீட்டில் விட்டார். அப்பொழுது கடை மூடிவிட்டு வந்த சண்முகம் சோபாவில் இவர்களுக்காக் காத்திருந்தான். அப்பா என்று ஓடிப் போய் தகப்பனைக் கட்டிப் பிடிக்கும் இரகம் அல்லத் தேனுகா. என்னவென்று தெரியாத ஒரு உணர்வில் அவள் தகப்பன் தாய் இருவரிடமும் ஒட்டாது விலகி நின்றாள். வீட்டிற்கு வந்தவுடன் அவள் தனது அறைக்குள் போய் அடைக்கலம் புக எண்ணினாள். அதற்குக் கமலம் இடம் கொடுக்கவில்லை. கதவைச் சாத்தியவுடனே சண்முகம் சோபாவை விட்டு எழுந்து இவர்கள் நிற்கும் இடத்திற்கு வந்தான். அவன் உள்ளே போகும் வழியை மறைத்த வண்ணம் நின்றதால் தேனுகாவுக்குத் தனது அறைக்குச் செல்ல முடியவில்லை. அவள் அப்படியே நின்றாள்.

‘இவள் என்ர மானத்தைக் கெடுத்துப் போட்டாள் அப்பா!’ என்று கமலம் புகார் சொல்லத் தொடங்கினாள்.

‘அப்பிடி என்ன செய்தவள்?’

‘நான் மேடைக்குக் கூட்டிக் கொண்டு போகக் குழந்தைப் பிள்ளை மாதிரி அழுது ஒரே சங்கேனம். எனக்கு மானக்கேடாப் போச்சுது. எல்லாச் சனமும் ஒரு மாதிரிப் பாத்துதுகள்.’ என்றாள் கமலம்.

‘ஏன்ரி தேனுகா மேடையில இருக்கிறதுக்கு உனக்கு என்ன?’

‘எனக்கு ஆட்களுக்கு முன்ன போறதுக்குப் பிடிக்காது.’

‘என்ன பிடிக்காது? தனியவே இருக்க விட்டனான். என்னோட தானே கூட்டிக் கொண்டு போனனான்.’

‘உங்களோடை எண்டா உங்களுக்கு உள்ளயா நான் இருக்கிறன்? நான் தனியாத் தானே இருந்தன். என்னை எல்லாரும் விழுங்குகிற மாதிரிப் பாத்தினம். அது எனக்குப் பிடிக்காது எண்டு தெரியும். அப்பிடியிருந்தும் ஏன் என்ன வலுக்கட்டாயத்திற்கு இழுத்துக் கொண்டு போனியள் அம்மா?’

‘அம்மாவுக்கு எவ்வளவு மதிப்பு இருக்கெண்டு பாத்தாயெல்லே. உன்னையும் அப்பிடி மற்றவை மதிக்கக் கூடிய மாதிரிச் செய்ய வேணும் எண்டுதானே நான் பாடுபடுகிறன்.’ என்றாள் கமலம்.

‘எனக்கு அப்பிடி ஒண்டும் வேண்டாம். என்னைச் சும்மா விடுங்கோ.’ என்றாள் தேனுகா.

‘அப்ப என்னதான் செய்யப் போறா?’ என்றான் சண்முகம்.

‘என்னை யாரும் தொந்தரவு செய்யாமல் தனிய இருக்க விடுங்க.’ என்றாள் தேனுகா.

‘இதுக்கு மேல நீ ஒண்டும் செய்யாத கமலம்.... ம்... பேசாமல் அவளை விடு.’ என்றான் சண்முகம்

‘நீங்கள் விளங்காமல் கதைக்கிறியள் அப்பா.? அவள் சொன்னாப் போல விடமுடியுமே? எனைப் போல எல்லாராலும் வரமுடியுமே? இல்லாட்டி என்னைப் போல ஒரு சங்கீத அறிவுள்ள அம்மா எல்லாருக்கும் கிடைக்குமே? அதைப் பயன்படுத்தத் தெரியாத மொக்குப் பிள்ளையா இருக்கிறாள் இவள். அதுக்கு நீங்களும் ஒத்துப் பாடுறியள்?’ என்றாள் கமலம். சண்முகன் வாய்திறக்க முதல்,

‘ஓ நான் மொக்குப் பிள்ளைதான். என்னச் சும்மா இருக்க விடுங்கோ. எனக்குச் சங்கீதமும் வேண்டாம். உங்களை மாதிரியும் இருக்க வேண்டாம். தயவு செய்து என்னச் சும்மா இருக்க விடுங்கோ.’ என்று வீடு அதிரும்படி கத்தினாள் தேனுகா.

‘எல்லாரும் அப்பா அம்மா மாதிரி இருக்கிறேல்லக் கமலம்.’ என்றான் சண்முகம்.

‘நான் இருந்தனே?’

‘அது உனக்குக் கிடைச்ச வரம்.’

‘அப்ப அவளுக்கு இல்லை எண்டுறீங்களோ?’

‘அது பாக்கிறாதானே?’

‘அப்ப இந்தப் பெட்டை ஒரு முகவரி இல்லாத பெட்டையாத்தான் இருக்கப் போகுதே?’

‘கமலம் எல்லாரும் சங்கீதம் பாடுறேல்ல. எல்லாரும் பிரபலங்களா இருக்கிறேல்ல. அதுக்காக அவை வாழ்றது வாழ்க்கை இல்லை எண்டு ஆகிடாது. அவளை பெரிசா போஸ் பண்ணாத. சும்மா விடுபாப்பம்.’ என்றான் சண்முகம்.

‘அப்பிடியெண்டா அவள் உலகம் வேற என்ர உலகம் வேறயாயிடும்.’ என்றாள் கமலம்.

‘எனக்கு உங்கட உலகம் பிடிக்கேல்லை. நான் முகவரி இல்லாமல் இருந்தாலும் சரி... உங்கட சங்கீதம் எனக்கு வேண்டாம்.’ என்றாள் தேனுகா.

‘வாயில போட்டன் எண்டா.’

பாய்ந்த கமலத்தைச் சண்முகம் பிடித்தான். தேனுகா தனது அறைக்குள் சென்று கதவை அடித்துச் சாத்தினாள். வீடு மீண்டும் அதிர்ந்தது.

*

தேனுகாவின் நிம்மதி பறிபோனது. நித்திரை தொலையானது. முன்பும் ஒரு முறை அம்மாவோடு சென்று அவமானப்பட்டது அவளுக்கு மீண்டும் ஞாபகம் வந்தது. அதற்கு இவ்வளவு கூட்டம் வந்திருக்கவில்லை. அன்றும் அம்மா மேடையில் இருத்திவிட்டுப் பாடச்சொன்னாள். தேனுகாவுக்கு பயத்தில் நா மரத்துப் போயிற்று. பாய்ந்து அண்ணத்தில் அது நிரந்தரமாய் ஒட்டியதாய் புரள மறுத்தது. அவள் மௌனம் பேசினாள். அம்மா திடீரென துடையில் கிள்ளிவிட்டாள். உயிரே போவது போல அவளுக்கு வலித்தது. அவள் அழுகையோடு பிழை பிழையாகப் பாடினாள். அரைவாசியில் அம்மா ’நிப்பாட்டு.’ என்றுவிட்டு அந்தப் பாட்டை தொடர்ந்து பாடினாள். அந்த

நிகழ்வுக்குப் பின்னாவது தனக்குச் சங்கீதத்தில் விருப்பம் இல்லை என்பதை அவள் உணர்ந்திருக்க வேண்டும். அதை உணராது மீண்டும் மீண்டும் வற்புறுத்துவது தேனுகாவுக்குக் கோபத்தை மட்டும் உற்பத்தி செய்தது. தனக்கு விருப்பமில்லாத ஒன்றை எதற்காக அம்மா தன்மீது திணிக்க முயல்கிறாள் என்பது அவளுக்குப் புரியவில்லை. அம்மாவின் மீது வெறுப்பு மாத்திரம் மிஞ்சியது.

தேனுகாவுக்கு கைகால்கள் தொடர்ந்தும் நடுங்குவதான அவஸ்தை. தான் தோற்றுப் போனதான உணர்வு அவள் நம்பிக்கையைக் கறையானாக அரிப்பதான உத்தரிப்பு. தேனுகா அதிக நேரமாக அழுதாள். பின்பு தான் தோற்றுப் போகப் பிறந்தவள் இல்லை என்பதாக முடிவு செய்தாள். ஆயிரம் ஆயிரம் மக்களுக்கு முன்னே நான் ஒரு நாள் தாரகையாக வலம் வரவேண்டும் என்று மனதில் சபதமிட்டாள். எப்படி அதை அடையலாம் என்பது அவளுக்குப் விளங்கவில்லை. நிச்சயமாக அது சங்கீதத்தால் இல்லை என்பது மட்டும் அவளுக்குத் தெளிவாக விளங்கியது. அப்படி ஒரு தாரகையாய் வருவது பிரமாண்டமான இலக்காக அவளுக்குப் பட்டது. அந்த பிரமிப்பில் எதுவும் பிடிபடாது அவள் நித்திரையாகிவிட்டாள்.

தேனுகா தனிமையாக வீட்டில் இருப்பது வளமை. சில வேளைகளில் பிரவீனா கூட இருப்பாள். சிலவேளை தேனுகாவே பிரவீனா வீட்டிற்குச் சென்று விடுவாள். அப்பொழுது விநாயகம் மாமாவோடு கதைப்பாள். அவர் மிகவும் சுவாரசியமாகவும் ஆழமாகவும் ஒவ்வொரு விடயத்தைப் பற்றியும் கதைப்பார். அவரது கனிவு தேனுகாவுக்கு மிகவும் பிடிக்கும். சில விளங்காத விடயங்களை அவள் விநாயகம் மாமாவிடம் கேட்பது உண்டு. அவர் அதற்குச் சினக்காமல் நேரம் எடுத்துப் பதில் சொல்லுவார். அவருக்கு அரக்கப் பறக்க பதறியடிப்பது பிடிக்காது. வாழும் கொஞ்ச நாட்களை இரசித்து அமைதியாக வாழ வேண்டும் என்பது அவருடைய கருத்து. அந்தக் கருத்து தேனுகாவுக்கு மிகவும் பிடிக்கும்.

தேனுகா அம்மாவிடம் எது கேட்டாலும் அதற்குப் பதில் சொல்வதற்கு அம்மாவிற்கு நேரமோ பொறுமையோ இருக்காது என்பது அவளுக்குத் தெரியும். அம்மா சங்கீதப் புகழில் தன்னைத் தொலைத்து, என்னை மறந்தே போய்விட்டாள் என்கின்ற ஏக்கம் தேனுகாவை எப்பொழுதும் அழுங்காகப் பிடித்து வாட்டும். அதை மாற்ற முடியாது என்பது அவளுக்குப் புரிந்தது. சங்கீதத்தைவிட உறவு முக்கியம் என்றால் நீங்கள் எல்லாம் ஞான சூனியங்கள் என்று அம்மா பேசுவாள் என்பது தேனுகாவுக்குத் தெரியும். ஞானம் உறவையே மறக்க வைக்குமா? உறவையும் காத்து ஞானத்தையும் வளர்க்க முடியாதா? அம்மா சங்கீதத்தையே உயிருக்கும் மேலாக நேசிக்கிறாள் என்பதை அவளால் புரிந்து கொள்ள முடிந்தது. அம்மா தன்னை விடச் சங்கீதத்தை நேசிப்பது அவளுக்குப் பிடிக்கவில்லை. அதுவே அம்மா மீது ஒருவகை வெறுப்பை உண்டு பண்ணியது. தேனுகா அம்மா இல்லாத பிள்ளையாக வளர்வதற்குத் தன்னை தயார் செய்தாள்.

அம்மா அப்படி என்றால் அப்பாவிற்குக்கூட உறவு முக்கியம் என்பது விளங்கவில்லை என்பது அவளுக்கு மிகவும் வேதனை தரும். அம்மாவிற்குச் சங்கீதம் என்றால் அப்பாவிற்குப் பணம். ஒருவருக்குப் புகழ் என்றால் மற்றவருக்குப் பொருள். அப்பாவைப் பகலில் அவளால் காண முடிவதில்லை. அவர் காலை ஆறுமணிக்குக் கடைக்குச் சென்றுவிடுவார். தேனுகா ஏழு மணிக்கு எழும்பும் போது வீட்டில் யாரும் இருக்க மாட்டார்கள். சமையல் அறையில் பாடசாலைக்குக் கொண்டு செல்வதற்கான சாப்பாட்டுப் பொதி தயாராக இருக்கும். காலைச் சாப்பாடாக கொன்பிளெக்சைக் கொட்டிச் சாப்பிட்ட பின்பு தானே வெளிக்கிட்டுப் பாடசாலைக்குச் செல்வாள். மாலை பாடசாலையால் வரும் போதும் அம்மா வந்திருக்க மாட்டாள். பின்பு தான் வந்து அவசரமாகச் சமைப்பாள் அல்லது குளிர்சாதனப் பெட்டியில் வைத்திருப்பதைச் சூடாக்கித் தருவாள். ஐந்து மணிக்கு மீண்டும் சங்கீதம் சொல்லிக் கொடுக்க அம்மா வெளியே செல்வாள். அல்லது வீட்டிற்கு வானரக்கூட்டம் வந்துவிடும். அம்மா கொடுக்கும் தொப்பியை அதுகள் திருப்பிக் கவனமாக எறியும். அது நித்தமும் தப்பாது நடக்கும். அவர்கள் வகுப்பு முடிந்து போக தேனுகாவுக்குக் கொட்டாவி வரும். சில வேளை அம்மா செய்யும் சாப்பாட்டிற்காய் காத்திருப்பாள். சில வேளை தானே கோன்பிளெக்ஸ் போட்டுச் சாப்பிடுவாள். பின்பு நித்திரை கொள்ளச் செல்வாள். தேனுகாவின் அப்பா இரவு பதினொரு மணிக்குத்தான் கடையால் வருவார். வந்ததும் வராததுமாகத் தொலைக்காட்சியைப் பார்த்த வண்ணம் அவசரமாகச் சாப்பிடுவார். சாப்பிட்ட கையோடு படுக்கப் போவார். மனிதனில் இயந்திர இயக்கம். அது இந்த வீட்டில் நிரந்தர இயக்கம்.

அப்பா அம்மா மீது இருந்த வெறுப்பில் இருவரையும் ஒரு நாள் அதிர வைக்க வேண்டும் என்கின்ற கோபம் அவள் மனதில் மெல்ல மெல்லக் கனலத் தொடங்கியது. அவள் வெறுப்பில் மேலும் அமைதியோடு ஒதுங்கத் தொடங்கினாள். அவள் ஒதுக்கம் பற்றி யாரும் கேட்கவில்லை. கேட்பதற்கு அவர்களுக்கு நேரம் கிடைக்கவில்லை. தனக்குச் சங்கீதம் பிடிக்கவில்லை என்பதை அறிந்த பின்பு அம்மா தனது வாரிசை வேற்றிடத்தில் தேடத் தொடங்கினாள். அதைப் பற்றித் தேனுகாவுக்குக் கவலை இல்லை. ஆனால் தனக்கு என்ன பிடித்து இருக்கிறது என்பதைக் கேட்க வேண்டும் என்கின்ற ஞாபகமே அம்மாவுக்கு வரவில்லை என்பது ஆறாத ஏக்கமாகிற்று. அவள் அதைப் பற்றிக் கதைக்க விரும்பவில்லை. அப்பாவிற்கு அவளது தேவை பற்றிச் சிந்திக்க நேரம் இருக்கவில்லை. அம்மாதான் உனது தேவைகள் பற்றிக் கதைக்க வேண்டும் என்று தேனுகாவிடம் அவர் கூறி இருக்கிறார்.

அப்பாவின் உலகம் வேறு. அம்மாவின் உலகம் வேறு. தான் வாழ விரும்பும் வாழ்க்கை வேறு. இந்த வேறுபாடுகள் அவளுக்குப் புரிந்தது. தேனுகாவுக்கு சிலவேளை அம்மாவின் வாழ்வில் ஒரு அர்த்தம் இருப்பதாயும் தோன்றும். இருந்தாலும் அம்மா கண்மூடித்தனமாகத் தன்னைச் சுற்றி இருக்கும் குடும்பத்தை மறந்தது பிடிக்கவில்லை. மற்றயவர்களின் பிள்ளைகளைத் தேனுகா பார்த்து இருக்கிறாள். அவர்களோடு தாய் தந்தையர் மினக்கெடும் நேரம் அவளுக்குத் தெரியும். விநாயகம் மாமா பிரவீனாவை எப்படிப் பார்த்துக்கொள்கிறார்? எங்கெல்லாம் கூட்டிச் செல்கிறார் என்பதை எல்லாம் அவள் அருகில் இருந்து பார்க்கிறாள். சில வேளை தேனுகா அவர்களோடு சேர்ந்து செல்வதும் உண்டு. இல்லாவிட்டால் தனிமை. தனிமையை போக்கத் தொலைக்காட்சி. வாழ்க்கை சில வேளைகளில் சுவாரசியம் அற்றதாகவும் தேனுகாவுக்குத் தோன்றியது உண்டு. முகவரி இல்லாத பெண் என்கின்ற அம்மாவின் இளக்காரத்தை எப்படி உடைப்பது என்கின்ற எண்ணத்தில் தேனுகா புழுவாகத் துடித்தாள். உயர்தர பாடசாலை தொடங்கிய பொழுது பிரவீனாவும், தேனுகாவும் ஒரே பாடசாலையில் படித்தார்கள். அப்படிப் பாடசாலை போய் வரும் பொழுது பிரவீனா காதலிக்க வேண்டும் என்று கூறுவாள். அத்தோடு நின்று விடாது நாங்களும் நோர்வே பிள்ளைகள் போலவே நடக்க வேண்டும் என்றும் தேனுகாவிடம் கூறுவாள். தேனுகா அதை முதலில் நம்பினாள். காதலித்தால் தனது தனிமையும் குறையுமென எண்ணினாள். தேனுகாவுக்குக் காதலிப்பதற்குப் பயமாக இருந்தது. யாரைக் காதலிப்பது என்றும் புரியவில்லை.

பிரவீனா பாடசாலைக்கு வரும் நோர்வே மாணவர்களைக் காட்டி அவனைக் காதலிக்கலாம் இவனைக் காதலிக்கலாம் என்று தேனுகாவிடம் கூறுவாள். தேனுகாவின் மனம் அலைமோதத் தொடங்கியது. எனினும் பயம் அவளை ஒதுங்கியிருக்கப் பண்ணியது. நோர்வே மாணவர்கள் தேனுகாவோடு வந்து கதைத்தாலும் சில வசனங்களோடு அதை அவள் முடித்துக் கொள்வாள். சல்லாபமாகச் சரளமாகக் கதைப்பது அவளுக்கு முதலில் கைவரவில்லை.

அன்று பிரவீனாவுக்குத் தேனுகா தொலைபேசி எடுத்தாள். பக்கத்து வீடு என்றாலும் எல்லா நேரமும் அவர்கள் வீட்டிற்குச் செல்வது தொந்தரவாகிவிடும் என்பது அவள் எண்ணம். அவர்கள் சில நேரம் சாப்பிட்ட வண்ணம் இருப்பார்கள். சாப்பாடு போதாமல் இருந்தாலும் மாமி சாப்பிட வருமாறு அழைப்பாள். அப்படியான சங்கடங்களைத் தேனுகா இப்போது விரும்புவதில்லை. மாமிக்கும் விநாயகம் மாமாவிற்கும் இருக்கும் நல்ல பண்புகள் பிரவீனாவோடு கோபித்துக் கொண்டதான ஒரு யதார்த்தம். சில விடயங்களை வேண்டும் என்றோ அல்லது புழுக வேண்டும் என்றோ அவள் சொல்வது தேனுகாவுக்கு இப்பொழுது பிடிபடத் தொடங்கியது. என்றாலும் ஐயத்தின் ஐயம் அறாது அவள் அல்லாடினாள்.

தொலைபேசியை முதலில் எடுத்த பிரவீனாவின் அம்மா, பிரவீனாவைக் கூப்பிடுகிறேன் என்ற வண்ணம் தொலைபேசியை வைத்துவிட்டுச் சென்றுவிட்டாள். பிரவீனாவின் அம்மாவுக்கு அரணை மறதி. தேனுகா நீண்ட நேரமாகக் காத்திருந்தாள். அவளுக்கு மாமியை நினைக்க முதலில் கோபம் வந்தது. பின்பு பாவமாய் இருந்தது. மாமி வேண்டும் என்று செய்வதில்லை. தனக்கும் வயது செல்ல இப்படித்தான் வருமா எனத் தேனுகா எண்ணிப் பார்த்தாள். தன்னுடைய அம்மாவுக்கோ அப்பாவுக்கோ அப்படி இல்லை என்பது அவளுக்குத் தெரியும். எல்லாருக்கும் இப்படி வராதென நினைத்தாள்.

பின்பு தொலைபேசியைத் துண்டிப்போமா என்று எண்ணும் போதுதான் பிரவீனா வீட்டிற்குள்ளே வரும் சத்தம் கேட்டது. அவளது தூரத்து உறவான அண்ணன் ஒருவனுடன் அவள் கதையளந்த வண்ணம் வருவதை தேனுகாவால் கேட்க முடிந்தது. அவன் பெயர் கவின். அவனை ஒருமுறை பிரவீனா அறிமுகம் செய்து வைத்தாள்.

அவன் நல்ல கொக்கு போல வளர்த்தியானவன். பெண்களைப் போல மென்மையான குரலும் குணமும் கொண்டவன். மிகவும் இரக்கமாக இருப்பான். அவனது இரக்க குணம் தேனுகாவுக்குப் பிடிக்கும். எதையும் வெளிப்படையாக கதைக்கக் கூடியவன்.

'அப்ப நீ யாரும் நொஸ்க் பெடியளக் காதலிக்கிறியே?' என்று அவன் பிரவீனாவைக் கேட்பதும், அவள் அதற்கு, 'நான் அப்பிடியும் மடத்தனமான வேலை செய்வனே? யாரும் லுசுகள்தான் அப்பிடிச் செய்யுங்கள். நான் ஒண்டும் லுசில்லாட்டியும் என்னோட உன்ன மாதிரி, தேனுகா மாதிரி லுசுகள் இருக்குதுகள் தானே? உங்கள மாதிரி ஆட்கள் நொஸ்குகளோட மாட்டுப்பட்டு என்ன செய்யிறியள் எண்டு பார்க்கோணும் எண்டு ஆசை. உன்ன லவ் பண்ணடா எண்டா பண்ணுறா இல்லை. அவள் தேனுகாவும் ஊமை மாதிரியே ஒருத்தரோடும் பேசாமல் திரியிறாள்.'

'உனக்கு வாய் நீட்டு. எங்களைப் பார்க்க லுசாட்டமே இருக்குது?'

'பிறகென்ன? அதில வேற சந்தேகமே? நீ பருவாய் இல்லை. தேனுகாவைக் கேட்க வேண்டாம்.'

'உனக்கு அறைவனடி.'

'அப்பாட்டச் சொல்லுவன்.'

'சித்தப்பாவும் சேர்ந்து அறைவார்.'

'இரண்டு பேரையும் பொலிசில மாட்டிவிடுவன்.'

'நீ செய்தாலும் செய்வாய். பாவம் அவள் தேனுகா. அவள் சூதுவாது இல்லாதவள்.'

'அப்பிடியில்ல. அது ஒரு லுசு... உன்னப் போல...'

தேனுகாவுக்கு அதற்கு மேல் தன்னைப் பற்றிய நண்பியின் வர்ணனையைக் கேட்க முடியவில்லை. அவள் மெதுவாகத் தொலைபேசியைத் துண்டித்தாள்.

அதன் பின்பு தேனுகாவைச் சில காலம் 'நான் லுசா?' என்கின்ற கேள்வி நிழலாக இடைவிடாது துரத்தியது. அந்த நிழலின் துரத்தலில் முன்பு போல் பிரவீனாவோடு பளக அவளுக்கு மனம் வருவதில்லை. அப்படிப் பளக நேர்ந்தாலும் அவள் சொல்லும் எதையும் தேனுகா பொருட்படுத்துவதில்லை. நம்பிக்கைகள் தொலைந்த பின்பு சொற்களுக்கு ஏது அர்த்தம் என அவள் எண்ணுவாள்.

*

இரண்டாயிரத்து ஒராம் ஆண்டில் இருந்து இரண்டாயிரத்து ஆறாம் ஆண்டுவரை நோர்வேயில் தொலைக்காட்சி நிகழ்ச்சி ஒன்று சுவாரசியம் காட்டி, மக்களைத் தன் முன்பு மண்டியிட வைத்தது. இரண்டாயிரத்து ஆறாம் ஆண்டு தேனுகா மேல்நிலைப்பள்ளி சென்றாள். வீட்டில் வழமை போல தனிமை. வீட்டுப் பாடங்களைச் செய்து முடித்துவிட்டுத் தொலைக்காட்சி பார்ப்பது தேனுகாவின் வழக்கமான பொழுது போக்கு. அப்படிப் பார்க்கும் பொழுதுதான் அந்த நிகழ்ச்சி அவளுக்கு அறிமுகமானது. தனிமையில் இருந்த அவளுக்கு அது மிகவும் வேண்டியதாகிற்று. அப்பா, அம்மா வீட்டில் இருக்கும் பொழுது அவர்களோடு இருந்து அவளால் அந்த நிகழ்ச்சியைப் பார்க்க முடியாது. அப்படிப் பார்த்தால் கண்ட குப்பையெல்லாம் பார்க்கிறாள் என்கின்ற கத்தலோடு தொலைக் காட்சியை நிறுத்தி விடுவார்கள். அவர்கள் இல்லை என்றால் தேனுகாவுக்குச் சுதந்திரம். தான் விரும்பிய நிகழ்ச்சியை விரும்பிய நேரம் பார்க்கும் வசதி.

ஆரம்பத்தில் அப்பா, அம்மா வீட்டில் இல்லை என்பது வெறுமை தந்தாலும் வளர வளர அது அவளுக்கு வசதியாகப் போய்விட்டது. அவர்கள் வீட்டில் இருந்தால் தேவையில்லாத தொண தொணப்பென அவள் எண்ணினாள். அந்த நிகழ்ச்சி தொடங்கினால் அவளுக்கு நேரம் போவதே தெரியாது. பாடசாலையிலும் அந்த நிகழ்ச்சியைப் பற்றிக் கதை வரும். ஆண்களைவிடப் பெண்கள்தான் அதில் அதிக அக்கறையோடு இருப்பதாகத் தேனுகா எண்ணிக் கொள்வாள். சில மாணவிகள் நிகழ்ச்சியில் பங்கு பெறுபவர்களில் தங்களுக்கு விருப்பமானவர்கள் பற்றிக் கதைப்பார்கள். சிலர் அவர்களுக்குத் தவறாது வாக்களித்தும் வந்தார்கள். சும்மாய் வாக்களிப்பது என்றால் வாக்களித்துவிட்டுப் போய் விடலாம். அந்த நிகழ்ச்சிக்குக் குறும் செய்தி மூலம் வாக்களிக்க வேண்டும். அந்தக் குறும் செய்தி பணத்தை அதிகம் அறவிடும். அதைவிட அந்த நிகழ்வை இணையத்தில் எப்பொழுதும் பார்க்கலாம். தேனுகா ஒரு போதும் வாக்களிப்பது இல்லை. சிலவேளை வாக்களிக்க வேண்டும் என்று எண்ணினாலும் பின்பு

பணத்தை எண்ணி அந்த எண்ணத்தைக் கைவிடுவாள். அப்பா தேனுகாவுக்கு அலைபேசியில் குறிப்பிட்ட காசு நிரப்பிக் கொடுத்து இருப்பார். அது ஒரு குறிப்பிட்ட நாட்களுக்குப் போதுமானதாய் இருக்கும். வாக்களித்தால் பணம் விரைவாக முடிந்துவிடும். எப்படி முடிந்தது என்கின்ற கேள்வி வரும். தேனுகா அப்பா அம்மாவிடம் இருந்து வரும் கேள்விகளை அறவே வெறுத்தாள்.

தேனுகா முதலில் அந்த நிகழ்ச்சியை ஒரு பொழுது போக்காகப் பார்த்தாள். நாட்கள் செல்லச் செல்ல அதை ஒவ்வொரு நாளும் பார்க்கத் தொடங்கினாள். பாடசாலையில் இருந்தாலும் நிகழ்ச்சியில் என்ன நடந்தது, என்ன முடிவு வந்தது என்பதை அறிந்துவிட வேண்டும் என்பது அவளது அடங்காத் துடிப்பாக இருக்கும். அவள் ஒவ்வொரு நாளும் அந்த நிகழ்ச்சியைப் பார்க்கும் பொழுது தானும் அவர்களில் ஒருத்தி போன்று கற்பனை செய்து கொள்வாள். அப்படிக் கற்பனை செய்வது அவளுக்குப் பிடித்திருந்தது. அதைவிட அவர்களைப் பற்றி வாரப் பத்திரிக்கைகளில் நிறைய எழுதுவார்கள். அந்த நிகழ்ச்சியில் இருந்து வெளியேற்றப்பட்டாலும் ஒருவித புகழ் அவர்களுக்கு இருக்கும். ஒரு வகையில் அவர்களுக்குச் சினிமா நட்சத்திரங்கள் போன்ற மதிப்பு இருந்தது. தேனுகாவோடு படிக்கும் மாணவ மாணவிகளுக்கு வெறிதரும் நட்சத்திரங்களாக அவர்கள் விளங்கினர்.

தேனுகாவுக்கும் அந்த நட்சத்திரங்களின் வாழ்வு பிடித்தது. அவளுக்கு அப்பா அம்மாவையும் அவர்களது கலாச்சாரத்தையும் எண்ணும் பொழுது ஒருவித அருவெருப்பு உண்டாகும். நோர்வேயில் பிறந்து இங்கேயே வாழ்ந்தாலும் அப்பா அம்மாவின் காலாச்சாரத்தில் மொட்டாக்குப் போடுவது அவளுக்கு வயிற்றைப் பிரட்டும்.

அம்மா தன்னை முகம் இல்லாதவள் என்று கூறியது இடையிடையே இப்பொழுதும் அவளுக்கு ஞாபகம் வருவது உண்டு. அம்மாவின் முகம் தமிழருக்கு மட்டும்தான் தெரியும். எனது முகம் நோர்வேயில் வாழும் எல்லோருக்கும் தெரிவது போலச் செய்ய வேண்டுமென அடிக்கடி எண்ணுவாள். அந்த எண்ணத்திற்கு ஒரு வழி கிடைத்தது. அந்த நிகழ்ச்சியில் நட்சத்திரங்களாய் இருப்பவர்களைப் போலத் தானும் ஒரு நாள் நட்சத்திரமாய், நோர்வே முழுவதும் அறிமுகமான ஒரு முகமாய் வரவேண்டும் என்கின்ற அந்தக் கற்பனையை நெஞ்சுக் கூட்டில் வைத்துப் பொத்திப் பொத்தி வளர்க்கத் தொடங்கினாள். அப்பொழுதுதான் அந்த நிகழ்ச்சி மீண்டும் தொலைக்காட்சியில் நடத்தப்பட இருந்தது. அந்த நிகழ்ச்சியை முன்பு ஐந்து ஆண்டுகள் தொடர்ந்து நடத்தியதால் பார்வையாளர்களின் சலிப்பை எண்ணிச் சில வருடங்கள் ஒத்தி வைத்திருந்தார்கள்.
அப்படி ஒத்தி வைத்தது தேனுகாவுக்குப் பெரும் ஏமாற்றமானாலும் தனது படிப்பில் அக்கறை செலுத்த அது அவளுக்கு உதவியது. அவள் படிப்பு முடியும் கட்டத்தில் அந்த நிகழ்ச்சி மீண்டும் வருவதாக அறிவிப்பு வந்தது. அதில் இருந்து தேனுகாவுக்கு ஒரே பதற்றமாகப் போயிற்று. அவள் அதை யாரிடமும் சொல்ல முடியாது தவித்தாள்.

அதைப் பற்றி யாருடனாவது கதைக்க வேண்டுமென அவள் எண்ணுவாள். அதற்கு அவளுக்கு வழி தெரியவில்லை. பிரவீனாவோடு இப்பொழுது அதிகம் கதைப்பதில்லை. கதைத்தாலும் ஒரு சில சொற்களோடு அது முற்றுப் பெற்றுவிடும். தன் முகத்திற்கு முன்பு பொய் பேசிவிட்டு மற்றவரிடம் தன்னைப் பற்றி இளக்காரம் பேசியவளோடு நட்பாய் அவளால் இருக்க முடியவில்லை. அந்த அற்பத்தனத்தை மறந்து மன்னிக்க வேண்டும் என்று அவள் எண்ணுவாள். பிரவீனாவை கண்டவுடன் வாய்க்குப் பூட்டுப் போட்டதான உணர்வு அவளுக்குத் தன்னிச்சையாக வந்துவிடும். எதிரியாக்கிக் கொள்ளாத அளவில் அவளது நட்பு நீடித்தது. மௌனம் வெறுப்பைச் சொற்களாக கொட்டிவிடாது தடை போட்டது. படிப்பு முடித்து வேலை ஒன்றைத் தொடங்கிய நேரம் அது. நட்சத்திரமாகித் தனது முகமும் பிரபலமாக வேண்டும் என்கின்ற அவா அவளை உந்தித் தள்ளியது. அம்மாவிற்குத் தன்னை நிரூபிப்பதற்கான சந்தர்ப்பம் அவளுக்குக் கிட்டியதான சந்தோசம். அவள் இரகசியமாகச் செயற்படத் தொடங்கினாள்.

சண்முகத்திற்கு நோர்வேயில் இருக்கும் தமிழர்களைப் பற்றிக் கெடில் பயம் உண்டு. தேனுகாவுக்குத் தெரியாமலே சண்முகம் இங்லாந்திலும், கனடாவிலும் ஊர் ஆட்களிடம் சொல்லி மாப்பிள்ளை பார்த்தான். பிரபஞ்சங்கள் தாண்டி அன்னிய உலகு சென்றாலும் நாங்கள் தமிழர் என்கின்ற வறட்டுப் பிடிவாதம் அவனிடம். வெளிநாடு எந்த மட்டில்? அவனுக்குத் தனது மகள் மேல் சிறிது தயக்கம் இருந்தாலும் தன் சொல்லைத் தட்டமாட்டாள் என்கின்ற நம்பிக்கை. அவளுக்காகத் தான் இமயத்தையே புரட்டுவதான சந்தோசம். இவை அனைத்தும் அவளுக்காகச் செய்யும் யாகம் என்கின்ற பரம திருப்தி.

கமலம் தனது குடும்பத்தின் புகழுக்காகவே தேனுகாவைக் கட்டிக் கொள்ளப் பலர் வருவார்கள் என்கின்ற கற்பனையில் மிதந்தாள். சங்கீத மேதையின் மகளின் திருமணம் என்பது பிரபலமாய் இருக்க வேண்டும். அதற்காக இப்பொழுதிருந்தே சேர்க்க வேண்டியதைச் சேர்த்துக் கொள்ள வேண்டுமென எண்ணினாள்.
காலம் யாரையும் கேட்காது அண்டத்தில் இருக்கும் கருப்பு ஓட்டையை நோக்கிப் பாய்கிறதா? இல்லை அண்டத்தில் சில புள்ளிகளுக்கு இடையில் அசைவதே காலம் என்கிறார்கள் சிலர். சிலர் முன்னுக்கும் பின்னுக்குமாக காலத்தோடு பிரயாணம் செய்யலாம் என்கிறார்கள். எங்கள் வாழ்வு ஏனோ நேர் கோட்டில்தான் பயணிக்கிறது. இந்தப் பிண்டங்கள் நீரால் உருவாகி நீரில் கரைந்து போகின்றன. அதில் குடியிருக்கும் ஆத்மாக்கள் மீண்டும் காலத்தில் சிறைப்படுகின்றன.

# 7

துக்கம், ஏக்கம், பயம், அவநம்பிக்கை, பரிதவிப்பு போன்ற பல உணர்வுகள் மதிலாகச் சுற்றி வளைத்துச் சிறையிட்ட வாழ்க்கை இது. அன்று அப்பா அம்மா தேனுகாவைக் கலைத்த பின்பு அவள் மீண்டும் அப்பா அம்மாவின் வீட்டிற்குச் செல்லவில்லை. அவள் அங்கு செல்லாவிட்டாலும் நினைவுகள் எப்பொழுதும் அவர்களைச் சுற்றியே அலைந்தது. அப்பா அம்மாவிற்குத் தானும் பிரபலம்தான் என்பதை நிரூபிக்க நினைத்ததைவிட இப்பொழுது அவர்கள் நினைவு அவளை அதிகம் வாட்டியது. மெல்லிய குற்ற உணர்வு அவள் விவாதங்களை அடிக்கடி உரமாய் காலில் போட்டு மிதித்தது. மிதித்த வேகத்தில் ஆணவத்தோடு திமிர்த்தது. அவர்கள் நிலைமையை உணர்ந்து இப்பொழுது உதவி செய்யப் போனாலும் அவர்கள் அதை ஏற்றுக் கொள்கிறார்கள் இல்லை என்பது தாளாத மனவருத்தமாகிற்று. தங்களது நிலமைக்குத் தேனுகாதான் காரணம் என்கின்ற அவர்கள் குற்றச்சாட்டை தேனுகாவால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. இந்த விடயத்தை அவமானமாக எடுப்பது அவர்களது அறிவீனம் என்பது் என்றும் அவளது மாறாத எண்ணம்.

இந்த நாட்டில் இது ஒரு பாரிய குற்றம் அல்ல. உணர்ச்சியை மற்றவருக்காய் அடக்கி உணர்வுகளோடு போராடிக் கருகவேண்டும் என்பதும் இங்கு விதி அல்ல. இதைவிட மோசமாக நடப்பவர்கள் நட்சத்திர அந்தஸ்தோடு இங்கு வாழ்கிறார்கள். அவர்கள் எந்தக் கூச்சமும் இல்லாது சுதந்திரமாக வலம் வருகிறார்கள். அவர்கள் வாழ்வில் யாரும் அத்துமீறிக் குறுக்கிடுவதில்லை. தேனுகாவின் வாழ்விலும் யாரும் குறுக்கிட முடியாது என்பதில் அவள் உறுதியாய் இருந்தாள். அதேவேளை அப்பா அம்மா தன்னை வெறுப்பதை அவளால் தாங்க முடியவில்லை. தேனுகாவுக்கு மீண்டும் அப்பா அம்மாவைப் போய் பார்க்க வேண்டும் போல் தோன்றியது. போக முடியாது என்கின்ற யதார்த்தம் அதற்குத் தடை போட்டது. போனால் என்ன நடக்கும் என்பது அவளுக்குத் தெரியும். அன்று அப்பா தன்னை அப்படி அச்சுறுத்தியது அவளுக்குச் சுத்தமாகப் பிடிக்கவில்லை. மனக் குழப்பத்தில் இருப்பதால் அவரை அவள் மன்னித்து விட்டாள். மீண்டும் அங்கு சென்றால் அதைவிட அசிங்கமாக ஏதாவது பேசுவாரா என்பது அவளுக்குத் தெளிவாகத் தெரியவில்லை. தேவையில்லாது அவரைக் கொதிக்க வைக்க வேண்டும் என்கின்ற எந்த ஆசையும் இப்போது அவளிடம் துளியும் இல்லை. அப்பாவைக் கொதிக்க வைத்து அம்மாவைச் சோகப்படுத்துவதும் நியாயம் இல்லை என்பதாக அவள் எண்ணினாள்.

அன்று அப்பா அச்சுறுத்தியது அநாகரிகமானது என்று தேனுகாவுக்குத் தெரியும். அவர்கள் நிலைமையில் இருந்தால் தானும் சில வேளை அப்படித்தான் செய்திருப்பேனோ என்பது அவளுக்குப் புரியவில்லை. அதை எண்ணியவளுக்கு அவர்கள்மேல் இருந்த கோபம் சற்று அடங்கியது. வேதனை என்பது அவரவர் சொந்த அனுபவம். தான் அனுபவிக்கும் வேதனை வேறு. அவர்கள் அனுபவிக்கும் வேதனை வேறு என்பதாகத் தேனுகா தன்னைச் சமாதானம் செய்தாள். அவர்கள் வேதனையில் அன்று அப்படிச் செய்தார்கள். இருந்தாலும் மீண்டும் அங்கு செல்ல முடியாது. மீண்டும் சென்றால் அதைவிட மோசமாகச் செய்வார்கள். அந்த அவமானத்தை இன்னுமொரு முறை அனுபவிக்கும் வலு தன்னிடம் இல்லையெனத் தேனுகா எண்ணினாள்.

தன்னால் நேரே சென்று அவர்களைப் பார்க்க முடியாத போது என்ன செய்வது என்பது அவளுக்கு முதலில் புரியவில்லை. அவர்களது நிலைமையை அறியாமலும் அவளால் அமைதியோடு இருக்க முடியவில்லை.

அப்போதுதான் விநாயகம் மாமாவின் நினைவு அவளுக்கு வந்தது. விநாயகம் மாமா எப்படி இதை எடுத்துக் கொள்வார் என்பதும் அவளுக்குத் தெரியாது. அவர் எப்படி இதை எடுத்துக் கொண்டாலும் அதை நிதானமாகக் கதைக்கக் கூடியவர். அவரோடு கதைத்து தனது அப்பா அம்மாவைக் கவனிக்க ஏற்பாடு செய்யலாமென அவள் நம்பினாள்.
அந்த எண்ணம் வந்த பின்பு அவளால் அமைதி காக்க முடியவில்லை. அதைச் செயற்படுத்துவதற்கான முயற்சியில் இறங்கினாள். இன்று 'பொர்ணபூவில்' இருந்து தனது காரில் ஒப்சால் செல்வதாய் திட்டம் போட்டாள். பொதுப் போக்குவரத்தின் பொழுது அவளது அறிமுகமான முகத்திற்கு இருக்கும் சங்கடம் இன்று அவளை காரில் போவதற்குத் தூண்டியது. தேவையில்லாத சங்கடங்களுக்கு முகம் கொடுக்க அவளுக்குப் பிடிக்கவில்லை. காரில் சென்றால் அந்தச் சந்தர்ப்பம் மிகவும் அரிது.

தலைக்குத் தொப்பி உள்ள மேலங்கி ஒன்றைத் தேடி எடுத்து அணிந்து கொண்டாள். அதனால் தலையை மூடினால் தன்னை மற்றவர்கள் அடையாளம் காண்பது சற்றுக் கடினமாகும் என்பது அவளது கணிப்பு. அவள் லிப்றில் கீழ் தளத்திற்குச் சென்றாள். அங்குதான் கார்களுக்கான தரிப்பிடம் இருக்கிறது. லிப்றை விட்டு வெளியே வரும் பொழுது ஒரு இரானியனும் அவனது சினேகிதியும் வந்தார்கள். அந்த இரானியன் தன்னை நன்கு அவதானிக்கிறான் என்பதைத் தேனுகா கண்டுகொண்டாள். அவளுக்கு அது பிடிக்காவிட்டாலும் அதைக் காணாதவள் போல விரைவாக அந்த இடத்தை விட்டு நகர்ந்தாள். தனது காரை நோக்கி ஓட்டமும் நடையுமாகக் கடக்க எத்தனித்தாள்.

அந்த இரானியன் இவளின் நழுவலைப் பார்த்துவிட்டான்.
'டூ...?' (நீ?)
தேனுகா நின்றாள். திரும்பி,
'வா?' (என்ன?) என்றாள்.
'ஆர் தே இக்க டூ சம் வார் போ தேவ?' (நீ யெல்லே ரீவியில வந்தனீ?)
'சோ வா?' (அதுக்கு இப்ப என்ன?)
'இக்க நுவ. வாற கில்ச போ டை.' (ஒண்டும் இல்லை. சும்மா அறிமுகம் செய்வதற்கு...)
'தே ஆர் பிறா. மென் டென் மோ இக்க கிண்ட்ர மை.' (அது நல்லது... ஆனா அது எனக்கு இடைஞ்சலாக இருக்கக் கூடாது.)
'நய்... நய்... தேர் இக்க மேனிங்கன்.' (இல்ல... இல்ல... அப்பிடி நான் செய்ய வரேல்ல.)
'ஓகே. காத.'
'காத.'
அவன் விறைத்துப் போய் நின்றான். இரானியப் பெண்கள் ஆண்களுக்கு அதிகம் மரியாதை தருவார்கள். தமிழ்ப் பெண்கள் தேவையோடு மரியாதை தருவார்கள். தேனுகா தென்றலாக வந்து புயலாகப் பாய்ந்துவிட்டுப் போவாள் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. புயலான தேனுகா மீண்டும் தென்றலாக மாறித் தனது காரிற்குள் அடைக்கலமானாள்.

விநாயகம் மாமா வீட்டிற்கு அருகில் வாகனத்தை நிறுத்திவிட்டுத் தேனுகா அவர்கள் வீட்டை நோக்கி நடந்தாள். அப்பொழுது எதிரே வந்த பதின்மூன்று வயது மதிக்கத்தக்க பெண் தேனுகாவைப் பார்த்துச் சிரித்துவிட்டுச் சென்றாள். அந்தப் பெண்ணின் பார்வை உன்னை எனக்குத் தெரியும் என்று சொல்வதாகத் தேனுகாவுக்குப் புரிந்திற்று. அவள் தன்னைத் தொந்தரவு செய்யாது கடந்து சென்றதில் திருப்திப்பட்ட தேனுகா மேற்கொண்டு விநாயகம் மாமா வீட்டை நோக்கி நடந்தாள்.

மனதில் பயம் இல்லாது விநாயகம் மாமா வீட்டில் துள்ளித் திரிந்த காலம் மலையேறி விட்டது. இனம் புரியாத ஒருவகைத் தயக்கம் எப்போதும் ஒட்டி உறவாடுகிறது. எல்லோர் முன்பும் குற்றவாளி ஆகிவிட்ட அந்தரமான உணர்வு தொடர்கிறது. தேனுகா தான் செய்ததில் குற்றம் இல்லை என்று நம்பினாலும் அவளையும் மீறிக் கூனிக் குறுகும் உடலின் தன்னிச்சையான சங்கடம் தரும் பாசையைத் தடுக்க முடிவதில்லை. சொற்கள் மன்னிப்பு கேட்காவிட்டாலும் தோற்றம் மன்னிப்பு யாசிப்பதான தொடர் அவஸ்தை. மனிதன் என்று பிறந்து விட்டால் சமூகம் என்கின்ற இரும்புப் பிடியில் நசிபட வேண்டிய, விடுபட முடியாத யதார்த்தம்.

பிரவீனாவும் இந்த அவஸ்தைகளுக்கு ஒரு வகையில் ஊக்கியாகச் செயற்பட்டாள். அதை யாரிடமும் தேனுகாவால் சொல்ல முடியாது. நாங்கள் செய்யும் காரியத்திற்கு நாங்கள்தான் பொறுப்பு ஏற்க வேண்டும் என்பது அவள் முடிவு. அதுதான் இந்த நாட்டின் கலாச்சாரம். சில வேளைகளில் பிரவீனா தேனுகாவின் குமுறல்களைப் பொறுமையோடு கேட்கும் வடிகாலுமாவாள். அதேவேளை பிள்ளையையும் கிள்ளி தொட்டிலையும் ஆட்டும் மூதாட்டியாக அவள். தனக்கு உலக ஞானம் புரியவில்லையா அல்லது இந்தக்கணமே நிஜம் என்கின்ற ஞானம் புரிந்து அதனால் தெளிந்த நிலையா என்பது புரியாத ஒருவித குழப்பம் தேனுகாவுக்கு.

அழைப்பு மணியை அழுத்திவிட்டுத் தேனுகா காத்திருந்தாள். விநாயகம் மாமா கண்ணைக் கூசிய வண்ணம் வந்து கதவைத் திறந்தார். தலையில் கறுப்பு முடிகளைக் காணமுடியாது வெள்ளி பூசிய தகதகப்பு. உடம்பும் சற்று மெலிந்து போய்விட்டது. முதுமையா?

அவரையும் மீறித் தேனுகாவின் பார்வை அவசரமாக வீட்டிற்குள் சென்று ஏமார்ந்தது. ஒத்த வயதானவர்களோடு இருப்பது ஒரு வித சுகம் என்பது தேனுகாவின் எண்ணம். விநாயகம் மாமா தேனுகாவைப் பார்த்துவிட்டு,
'உள்ள வா.' என்றார்.

அவர் முகத்தில் எந்த உணர்வுகளையும் தேனுகாவால் படிக்க முடியவில்லை. முகத்தின் பிரதிபலிப்புக்கள் மறைக்கப்படும் போது மனதில் ஆயிரம் விவாதங்கள் நடக்கும் என்பதைத் தேனுகா அறிவாள். விநாயகம் மாமா ஏதோ எண்ணுகிறார் என்பது புரிந்தாலும் என்ன எண்ணுகிறார் என்பதை அவளால் புரிந்துகொள்ள முடியவில்லை. பிறமனிதர்களின் மனதின் ஆழம்காணும் போராட்டம் வெற்றி பெறுவதே இல்லையென அவள் எண்ணினாள்.

அவர்கள் வீடு எப்போதும் போலவே உள்ளே அழகாய் காட்சி தந்தது. யன்னலோரம் வைக்கப்பட்டு இருந்த செடிகள் எல்லாம் சடைத்து வேலிகட்டி நின்றன. வெளியில் இருந்து வருகின்ற வெளிச்சத்தை உறிஞ்சுவதில் அவற்றின் இடைவிடாப் போட்டி. பலமுள்ளவன் வாழ்வான் என்பதான இயற்கையைப் புரிந்த தாவரங்களின் வக்கிர முன்னேற்றம். டார்வின் கொள்கையை மீண்டும் நிரூபிக்கும் நிர்வாண உண்மை.
'பிரவீனா இல்லையா மாமா?' கேட்ட வண்ணம் தேனுகா சென்று சோபாவில் அமர்ந்தாள்.

'இல்ல வெளியில போயிட்டாள்.' என்ற வண்ணம் எதிரே போட்டிருந்த சோபாவில் விநாயகம் மாமா வந்து அமர்ந்தார். பின்பு தேனுகாவைப் பார்த்து,
'அவளப் பாக்க வந்தியா?' எனக் கேட்டார்.
'இல்ல மாமா... எல்லாரையும்தான் பாக்க வந்தன்.'
'வீட்ட போயிட்டே வாறா?'
'இல்ல மாமா?'
'ம்...?'
'அப்பா கத்துறார். அவர் மனநிலை குழம்பின மாதிரி இருக்கிறார். நான் போனா நாகத்தைக் கண்ட கீரி மாதிரி சண்டைக்குப் பாயிறார். கோபத்தில கொந்தளிக்கிறார். என்ன கொச்சப்படுத்துற மாதிரி நடந்து கொள்ளுறார். நான் கடைசியாப் போகேக்க அவர்ற்ற நடத்தை படுமோசமாய் இருந்திச்சு மாமா? அப்பா எண்டாக்கூட ஒரு லிமிட் இருக்குது தானே? எனக்கு அங்க போக வேணும் எண்டுதான் ஆசை. ஆனா அவற்ற நிந்தனை தாங்க முடியாமல் இருக்குது. அவர் அப்பா என்கிறதையே மறந்து அநாகரிகமா நடக்கப் பாக்கிறார் மாமா... பெத்த மனசு பித்து எண்டுவினமே? அதுக்கு அவர் புது அர்த்தமே ஏற்படுத்துவார் போல இருக்குது மாமா.'
'ம்... உப்புத் திண்டவன் தண்ணி குடிக்கணும். தப்பு செய்தவன் தண்டனை பெறவேணும்.'
'என்ன மாமா நீங்களுமா என்னக் குத்தம் சொல்லுறியள்? நான் எந்த உப்பைத் திண்டன் மாமா? நான் என்ன அநியாயத்தை யாருக்கு செய்திட்டன் மாமா? நோர்வேயில பிறந்து இருக்கிறன்... நோர்வேயில வளர்ந்து இருக்கிறன்... நுர்மான உணருறன்... நான் செய்தது போலத் தானே என்னோட இருந்தவங்கள் எல்லாரும் செய்தாங்கள். அதுக்காக அவையின்ர தாய் தகப்பன் எல்லாம் எங்கட அப்பா அம்மா போலவா நடந்திருப்பினம்?

எல்லாரும் நோர்வேயிலதானே இருக்கிறம். அவங்களுக்கு ஒரு நீதி. எங்களுக்கு ஒரு நீதி எண்டுறது சரியா மாமா? அவங்களோட எப்பவாவது நிறப்பிரச்சனை வந்தால் தங்களுக்கு அநியாயம் செய்யினம் எண்டு கொந்தளிக்கிறவை எல்லாம் தாங்கள் இங்க இருந்து கொண்டு செய்யிற அநியாயத்தைப் பற்றிக் கொஞ்சமும் யோசிக்கிறேல்ல. எங்கட உரிமையில கைவைக்கிறது அநியாயம் தானே? நாங்கள் இந்த நாட்டுக் கலாச்சாரத்தில வாழ்ந்து இருக்கிறம். இங்க எங்களுக்கு நியாயமாப் படுகிறதை செய்யிறம். முப்பது வருசத்துக்கு முந்தின நாட்டு நினைவுகளில வாழ்ந்தபடி எங்களைக் கட்டுப்படுத்துறதும், கட்டாயப்படுத்துறதும் அநியாயம் இல்லையா மாமா?'

'நியாயங்களும் அநியாயங்களும் ஆளுக்கு ஆள், ஊருக்கு ஊர், மதத்திற்கு மதம், நாட்டிற்கு நாடு எண்டு பல மாதிரி மாறிக்கொள்ளும். உன்னைப் பொறுத்தவரை நீ செய்தது நியாயம். அப்பாவைப் பொறுத்தவரை நீ செய்தது அநியாயம். என்னதான் நீங்கள் நோர்வேயில பிறந்து வளர்ந்தாலும் உங்கட சமுதாய வட்டம் தமிழரோடதான் முதல் தொடங்குது? இந்த யதார்த்தத்தைக் கொஞ்சம் ஞாபகம் வைச்சிருக்க வேணும். அப்பா அம்மா சாகும் வரைக்கும் தமிழராய்த்தான் இருப்பினம். இந்த உண்மையும் எப்போதும் நினைவிருக்கோணும். அவை மனதாலும் செய்கையாலும் தமிழராய் இருக்கிறதால, தங்கட பிள்ளையளும் அப்படி இருக்கோணும் எண்டு எதிர்பார்க்கினம். தாங்கள் கொஞ்சம் விட்டுக்கொடுக்கலாம் எண்டு நினைச்சாலும் சமுதாயத்தைக் கண்டு பயப்பிடுகினம். அவையப் பொறுத்த வரையில மானம் உயிரைப் போல. மானத்திற்காக உயிரை விடலாம் எண்டு நினைக்கிற வளர்ப்பில வளர்ந்தவை. நீங்கள் நவீனம். உங்கட உரிமையை மறுக்க முடியாது. இருந்தாலும் அப்பா அம்மா என்கின்ற பாசப் பிணைப்புக்காக சில விட்டுக்கொடுப்புகள் செய்யத்தான் வேணும். செய்யாமல் விடலாம். சுயநலமா இருக்கலாம். அப்படி இருந்தால் இரண்டு பகுதிக்கும் இரணமாயிருக்கும்.'

'எங்கட வாழ்வு எங்களுக்கு மாமா. நீங்களும் அப்பா அம்மா எண்டுறியள்.'

'அப்பிடி இல்லத் தேனுகா. மனிசன் எங்கையும் தனிச்சிருக்க முடியாது. அப்பிடி எண்டாக் காட்டிலதான் வாழ வேணும். நாட்டில மனிசரோடை இருக்கிறது பிரச்சனையானது. அதுவும் தமிழரோட இருக்கிறம் எண்டது இன்னும் வில்லங்கமானது. வாழ்க்கையைப் விளங்கிக் கொண்டு வெட்டி யோடோணும். இல்லாட்டித் திண்டு கை கழுவுவாங்கள் இந்தச் சனங்கள்.'

'சனம்... சமுதாயம்... எப்ப நாங்கள் எங்களுக்காக வாழப் போறம்? சனம் சமுதாயம் எண்டு அவை தங்கட வாழ்க்கையைப் பொய்யாக்கிச்சினம். யார் யாருக்காகவோ வாழ்ந்திச்சினம். மனதுக்குள்ள அழுதபடி வெளிய சிரிக்கிறதாய் வேசம் போட்டுத் திரிஞ்சிச்சினம். அந்த வாழ்க்கை எங்களுக்கு வேண்டாம் மாமா. அதில நான் நல்ல தெளிவாய் இருக்கிறன். அப்பா அம்மாவில பாசம் இருக்குது. அவைய வெறுக்கேல்லை... அதுக்காகத் தியாகம் எண்டு சொல்லி என்ரை ஆசைகளை எரிச்சுக் கொள்ள விரும்பேல்ல. உலகம் ஆயிரம் கதைக்கும்... அதுக்கெல்லாம் காதுகொடுத்தா நித்தமும் தற்கொலைதான் செய்ய வேணும் மாமா.'

'உன்ர இடத்தில இருந்து நீ சொல்லுறதைப் பிழையெண்டும் சொல்ல இயலாது. உன்ரை அப்பா அம்மா தாங்கள் கொண்டுவந்த விழுமியங்களுக்குள்ள சிறைப்பட்ட வண்ணம் இங்க வாழ நினைக்கிறதும் இயற்கையானது. இப்பிடி ஒரு இக்கட்டான நிலை எங்கட இனத்திற்கு வந்திருக்கக் கூடாது. வந்திட்டுது... இனி என்ன செய்ய முடியும்? பார் பிள்ளையோட கதைச்சபடி இருந்ததில ஒரு ரீ போட்டுத் தரவும் மறந்து போனன். இரு இப்ப நான் ரீ போட்டாறன்.'

என்று கூறிய வண்ணம் விநாயகம் மாமா அவசரமாக எழுந்து அடுக்களைக்குச் சென்றார்.

'மாமா எனக்கு நெஸ்கபே இருந்தாக் கொண்டு வாங்க.' என்றாள் தேனுகா.

'சரி.'

விநாயகம் மாமா சிறிது நேரத்தில் தனக்குத் தேநீரோடும் தேனுகாவுக்குக் கோப்பியோடும் வந்து சேர்ந்தார். தேனுகாவுக்கு அந்தக் கோப்பி வாசம் பிடித்தது. அதுவும் இவர்கள் குடிக்கும் வடித்த கோப்பியின் வாசம் அலாதியானது. அந்தக் கோப்பியோடு ஒரு சிறிய சொக்லேற் கட்டியைக் கடித்துக் கொண்டு குடித்தால் அதன் சுவை இன்னும் அலாதியாக இருக்கும். தேனுகாவுக்கு வடித்த கோப்பிக்கு அடுத்தது நெஸ்கபே பிடிக்கும். அவள் ஆவலோடு வாங்கி ஒரு மிடறு குடித்தாள். பின்பு விநாயகம் மாமாவைப் பார்த்து,

‘சில தமிழ் ஆட்கள் என்னைப் பாக்கிற பார்வையே எனக்குப் பிடிக்கிறேல்ல. நோர்வேகாறர் ஆயிரம் ஆயிரமாய் நிண்டாலும் எந்தக் கூச்சமும் இல்லாமல் போய் வரலாம். ஆனாத் தமிழருக்க போய் வாறது அப்பிடி இல்ல. யாராவது தெரிஞ்ச ஒரு தமிழ் ஆள் நிண்டாலும் ஏதோ மாதிரி இருக்குது. அவையிட பார்வை உலகத்தில பாவப்பட்ட ஜன்மம் ஒண்டப் பாக்கிற மாதிரியா இருக்குது. எனக்கு அப்பிடியான பார்வையைப் பார்க்கவே வயித்துக்க ஏதோ செய்யும். அதுவும் ஆம்பிளையள் எண்டா நடத்தை கெட்டவளைப் பார்க்கிற மாதிரி பாக்கிறாங்கள் மாமா. நான் அப்படி சொன்னதுக்குச் சொறி மாமா. நான் அப்பிடி என்ன செய்துபோட்டன்? நான் எனக்கு விருப்பமான யாரோ ஒருத்தரோட இருந்தது இவங்களுக்கு ஏன் வயித்தெரிச்சலைத் தரோணும்? இந்த சின்னப் புத்தி உள்ளவங்கள் மாதிரியா நுர்மனும் நடக்கிறாங்கள்? இவங்கள் எல்லாம் எப்ப திருந்த போறாங்கள் மாமா?’ என்றாள் தேனுகா.

‘மனதுக்குள்ள யாரும் இராமனோ கண்ணகியோ இல்லை. மனதில் அசிங்கத்தோடை வாழுகிறது தெரியாமல் வெளியால கற்பின் சின்னங்களாய் வேசம் போடுகிறதுதான் தமிழற்ற வாழ்க்கை. அவைக்கு இந்த நாட்டுக்கே உரிய வெளிப்படையான சிந்தனை விளங்காது. அவை அதை விளங்கிக் கொள்ளப் போறதும் இல்லை. எதுவரைக்கும் இந்தப் பார்வை இருக்கும் எண்டுறதும் யாருக்கும் தெரியாது. ஆனா உன்னப் பொறுத்த வரையில அது இன்னும் அதிக காலத்துக்கு இருக்கும். நாலு சுவருக்குள்ளேயே வித்தியாசமான சோடி எண்டால் கூடி மகாநாடு வைக்கிறது தமிழற்ற வழக்கம். நீ எப்பிடி இதைச் சமாளிப்பாயோ தெரியாது.’

‘என் உடம்பு… என் விருப்பம்… நான் எப்பிடியும் எங்கயும் இருப்பன். ஏன் மாமா கண்டவைக்கும் தேவையில்லாத வயித்தெரிச்சல்? அதுவும் வயது போனதுகள் எண்டாலும் பருவாய் இல்ல… இங்க வளந்தவையில சிலருக்கும் அந்தக் குணம் இருக்குது. அதைப்பார்க்கப் பார்க்க எனக்கு பத்திக்கொண்டு வரும். ஒரு நாளைக்கு யாற்றையாவது சட்டையைப் பிடிக்கிறன். அப்ப தெரியும் நான் யார் எண்டு.’ என்றாள் தேனுகா.

‘ஊரில இருந்து வந்து அதே மொட்டாக்கோட வாழ்ற அப்பா அம்மா தானே அவங்களை வளர்க்கிறது. அப்ப அவையிட்ட இருந்து படிக்கிறது இப்பிடித்தான் இருக்கும். நீ முண்டாமல் வெட்டியோடப்பார் தேனுகா. இப்ப தனிச்சுப் போய் இருக்கிறாய். எதுக்கும் அவதானமாய் இருக்கோணும். உனக்கு ஆயிரம் பிரச்சனை இருக்குதெண்டு உனக்கே தெரியும். நான் பிரவீனா எல்லாத்தையும் வெட்டி ஓடுவாள் எண்டு நினைச்சு இருந்தன். ஆனாக் காதல் எண்டுறது எப்ப யார்மேல வரும் எண்டு யாராலும் சொல்ல முடியாது எண்டதை அவளும் நிரூபிச்சுப் போட்டாள். அதுக்காக நான் அவளில கோவிக்கேல்லை. அது நியாயமும் இல்லை. எண்டாலும் நடமுறையில பல நெளிப்புக்களைப் பார்க்க வேண்டித்தான் வரும். அதுக்கு ஒண்டும் செய்ய முடியாதுதானே?’

‘என்ன மாமா புதுக்கதை ஒண்டு சொல்லுறியள்?’ என்றாள் தேனுகா.

‘உனக்குத் தெரியாதே? உனக்குத் தெரிஞ்சிருக்கும்… அவள் சொல்லி இருப்பாள் எண்டு நினைச்சன்.’

‘இல்ல மாமா. பிரவீனா எந்தப் பிரச்சனையிலும் மாட்டாத பிறவி எண்டுதான் நான் இண்டை வரைக்கும் நினைச்சிருந்தன்.’ என்றாள் தேனுகா.

‘பிரவீனா பிரச்சனையில மாட்டினது எண்டு இல்லை. பிரவீனாவும் வித்தியாசமாய்த்தான் சிந்திக்கிறாள். அது இந்த நாட்டு மண்ணுக்கு உரிய குணாதிசயமாக இருக்கோணும். உங்கட சுதந்திரத்தை பற்றிச் சிலவேளை எங்கள மாதிரியான ஆட்களாலேயே மட்டுக்கட்ட முடியிறேல்ல.’

‘அது சரி மாமா… ஏதோ பிரவீனா பற்றிச் சொல்ல வந்தியள். யாரை லவ் பண்ணுறாள்?’ என்றாள் தேனுகா.

‘நீ என்னிட்டக் கதை புடுங்கிறாய் என்ன? அப்பிடி ஒண்டும் பிரச்சனையில்லை. அவள் பாக்கித்தான் ஆட்களை லவ் பண்ணி இருந்தால் மதச்சிக்கல் பெரிய பிரச்சனையா இருந்து இருக்கும். ஆப்பிரிக்கன் ஆட்கள் எண்டாலும் சோடியா போக ஒரு மாதிரிப் பாப்பினம். இவளும் ஒரு வியட்னாம் பெடியனை லவ் பண்ணுறாள்.’

‘என்னுடைய பிறண்ட் இல்லையா அவள்? எண்டாலும் நீங்கள் நல்ல சமாதானம் சொல்லுறியள் மாமா. யார் எண்டாலும் மனிசர்தானே? ஆப்பிரிக்காவா இருந்தால் என்ன? ஆசியாவா இருந்தால் என்ன? மனசுக்குப் பிடிச்சு இருக்க வேணும். அதுதான் முக்கியம் இல்லயா மாமா? இவ்வளவும் தெரிஞ்ச நீங்களே பாகுபாடு பாக்கலாமா?’ என்றாள் தேனுகா.

‘நீ சொல்லுகிறது சரிதான் பிள்ளை. நாங்களும் ஒரே குட்டையில ஊறின மட்டையள் தானே.’

‘எண்டாலும் நீங்கள் மற்றவை சொல்லுறதை விளங்கிக் கொள்ளுறியள். அது உண்மையில பிரவீனாவுக்கு வரப்பிரசாதம். எனக்கு...!’ என்றாள் தேனுகா. அவள் தொடர்ந்து தன்னைக் கட்டுப்படுத்த முடியாது கண்கலங்கினாள்.

‘சரி விடு எல்லாம் நல்லா முடியும்.’

‘மாமா எனக்கு ஒரு உதவி செய்ய வேணும். அதைக் கேட்கிறதுக்குத்தான் இப்ப இங்க வந்தன்.’ என்றாள் தேனுகா.

‘சொல்லு... என்ன செய்ய வேணும்?’

‘ நான் வீட்ட போகேலாது. போனாப் பிரச்சனை. அது தாங்க முடியாத இரணம்.’ என்றாள் தேனுகா.

‘ம்... விளங்குது. நான் என்ன செய்ய வேணும்? அதைச் சொல்லு...’

‘அடிக்கடி அவைய போய் பாத்து வரோணும். நான் போன் பண்ணுறன். ஏதும் பொருட்கள் வேணும் எண்டாலும் நீங்கள் வாங்கி குடுக்கிற மாதிரிக் குடுங்க. நான் வாங்கிக் குடுக்கிறது எண்டா அவை வாங்க மாட்டினம் மாமா. நான் ஏலுமானவரைக்கும் அடிக்கடி இங்க வந்து போறன்.’ என்றாள் தேனுகா.

‘சரி கவலப்படாத. கமலம் எனக்கு எப்பவும் தங்கச்சி. என்னால செய்யக்கூடிய உதவிதானே? செய்யறன்.’

‘தாங்ஸ் மாமா.’ என்றாள் தேனுகா.

‘இதுக்கெல்லாம் நீ தாங்ஸ் சொல்லத் தேவையில்ல தேனுகா. நீயும் எனக்கு ஒரு மகள்தான்.’ என்றார் விநாயகம் மாமா.

தேனுகா மீண்டும் கண் கலங்கினாள். அப்பொழுது பிரவீனாவும் அவளது காதலனும் உள்ளே வந்தார்கள்.

# 8

தேனுகா பலத்த எதிர்பார்ப்புக்களோடு உயர்தரப் பாடசாலை தொடங்கிய நாள் அது. முதல் நாள் படிப்பு என்பதற்குப் பதிலாக அறிமுகத்தில் காலம் காலாவதியாகியது. தேனுகாவுக்கு அது ஒன்றும் கவலைப்படும் கணங்கள் அல்ல. அவள் துள்ளலுடன் அங்கும் இங்கும் வலம் வந்தாள்.‘உங்டம் ஸ்கூல்’ எனப்படும் மேல் நிலைப் பள்ளியில் படிக்கும் பொழுது தேனுகா அதைக் காண்பாள். இருந்தும் அவள் உணர்வுகள் பெட்டிப் பாம்பாக அடங்கிக் கிடந்ததில் அவளுக்கு நிம்மதியாகிற்று. அங்கு சுவருக்குச் சுவர் சோடி சோடியாக நின்று, பிரியாத இறுக்கம் உடலைப் பிணைத்திருக்க, யாரையும் கவனிக்காது சுவைக்கும் முத்தங்களில் சொற்கம் காண்பவர்கள் பலர். சிலவேளை அவளுக்கு அது அசிங்கமாகத் தோன்றுவது உண்டு. ஜெர்மனிக்கு வெள்ளை பேருந்தில் போகும் பொழுது அது மோசமாகப் போயிற்று. பேருந்தில் வந்த பெரியவர்கள் அதைப் பற்றிப் பெரிதாக அலட்டிக் கொள்ளவில்லை. நடப்பதைத் தடுப்பதிலும் அதன் விளைவைத் தடுப்பதுதான் முக்கியம் என்பது பாடசாலையின் கருத்தாக இருந்ததும் தேனுகாவுக்குத் தெரியும். அப்படித்தான் வந்த பெற்றோரும் அதை எடுத்துக் கொண்டார்கள். அந்த ஊக்கத்திலும் அறிவுரையிலும் சில மாணவர்கள் ஆணுறையுடன் வந்திருந்ததும் தேனுகாவுக்குத் தெரியும். தேனுகாவுக்கு அது ஒரு கிளர்ச்சியூட்டும் விடயமாக அப்போது தோன்றவில்லை. எதற்காக இப்படி அவஸ்தைப் படுகிறார்கள்? ஏக்கத்தோடு அலைந்து திரிகிறார்கள் என்பது அப்பொழுது அவளுக்கு முழுமையாகப் புரியவில்லை. முத்தம் சிலவேளை மென்மையான இதழ்களின் தொடுகையாக இருக்குமென அவள் எண்ணுவாள். அதை உடனடியாக அனுபவிக்க வேண்டும் என்றோ அல்லது ஒரு ஆணின் கையைப் பிடித்த வண்ணம் சுற்றித் திரிய வேண்டும் என்றோ அவள் மனதில் அப்பொழுது ஆசை எழுந்ததில்லை. இயற்கையின் அற்புத உணர்வு அவளை தொடாதவரைக்கும் அவள் நிம்மதி சுகித்தாள்.

காலம் வயதுகளை ஏற்றி வருடங்களைத் தன்னுடன் கூட்டிப் போயிற்று. பாடசாலைகள் மாற வேண்டியதாயிற்று. காலத்தின் இழுப்பில் அவளையும் இயற்கை சீண்டத் தொடங்கியது. அதை அவள் இந்தப் பாடசாலை தொடங்கிய முதல் நாளே உணர்ந்தாள். அவனை உணவு விடுதியில் பார்த்தது தொடக்கம் இதயத்தை யாரோ பறித்ததான ஒருவித நிலைகொள்ள முடியாத தவிப்பு. அவனை மீண்டும் மீண்டும் பார்க்க வேண்டும் என்கின்ற பரிதவிப்பு. பார்த்த போதெல்லாம் வயிற்றுக்குள் இனம்புரியாத மர்மப் பிசைவுகளின் அட்டகாசம். உள்ளங்கை முதன் முதலில் குளிராக வியர்த்த விந்தை. கால்கள் சாதுவாக நடுங்கும் புதினம். பக்கத்தில் நின்றவர்கள் என்ன சொன்னார்கள்

என்பதைக்கூடக் கிரகிக்க முடியாது சிதறிய கவனம். அது அவனிடம் தொலைந்த கணங்களின் நீட்சி. பக்கத்தில் நின்றவர்கள் திடீரென தாங்கள் கதைத்ததைப் பற்றி அவிப்பிராயம் கேட்ட போது விளங்காது விழித்த அவஸ்தை. அவனில் கண்டதுதான் என்ன? எதற்காகத் தனது மனது இப்படிப் பதைபதைக்கிறது என்பது தேனுகாவுக்குப் புரியாத குழப்பம் ஆகிற்று. ஏதோ ஒரு உணர்வு. கண்ணும் கண்ணும் கண்டபோது இதயம் கழன்று போனதான உணர்வு. கண்ணில் இருந்து வந்த ஒளி நெஞ்சுக்கூட்டையே கிழித்துப் போட்டதான அவஸ்தை. அவன் பார்வை தோலைக் கிழிக்கவில்லை. அதில் இரத்தக் காயம் இல்லை. என்றாலும் கிழித்ததான அந்தரிப்பு. அது தீராத ஏக்கமாகப் பற்றிக்கொண்டதான தொடர்கதை. நெஞ்சு எல்லாம் வெறுமையாகி நீராவி மட்டும் கொட்டாவியாகிய பரிதவிப்பு. அவன் தனது பார்வையை விலக்குவதாக இல்லை. அப்படியே சில கணங்கள் நிலத்தில் இருந்து விடவேண்டும் என்பது போலத் தேனுகாவுக்குத் தோன்றியது. அவள் இருக்க வில்லை. இருந்தால் ஏதாவது வருத்தமோ என்பதாக விசாரணையோடு சனங்கள் கூடிவிடலாம் என்கின்ற பயம். காதலால் மயங்கி விழுந்தேன் என்று கூறினால் கதைவிடுகிறாயா எனக் கேட்பார்கள் என்கின்ற யதார்த்தம். சீதைக்கும் இராமனுக்கும் இடையில் வந்த காதல் இதுதானா? காதலால் மயக்கம் வரும் என்பது இன்றுவரை தேனுகாவுக்குத் தெரியாது. இன்று காதலால் மயக்கம் வரக்கூடாது என்று அவள் இறைஞ்சாத இறைவன் இல்லை. அவள் இறைஞ்சல்கள் நிராகரிக்கப்பட்டன. அவன் பார்வை அவளது நெஞ்சுக்கூட்டை அறுத்து இதயத்தைக் குற்றி எடுத்துச் சென்றது. தேனுகாவுக்கு மயக்கம் வந்தது.

தேனுகா முடிவு செய்தாள். அவன் பார்வையை விட்டு எங்காவது தப்பிச் சென்றாலே இந்த இரணம் தீரும் என்பதை உணர்ந்தாள். அவள் கண்களை மூடிய வண்ணம் சிறிது தூரம் நடந்தாள். மீண்டும் கண்களைத் திறந்து பார்த்தாள். அவனைப் பார்த்துவிடுவேன் என்கின்ற பயம் அவள் தொண்டையை இறுக்கிப் பிடித்தது. அவள் மீண்டும் கண்களை மூடினாள். சிறிது தூரம் நடந்தாள். கழுத்துத் தானாகத் திரும்பியது. அவன் கண்கள் இவளையே பார்த்தன. மீண்டும் மயக்கம் வருவது போல இருந்தது. தேனுகாவுக்கு அந்த இடத்தை விட்டு அந்தக் கணமே ஓடிவிட வேண்டும் என்பதான வெறி. அப்படி ஓடினால் குழப்பம் ஆகிவிடும் என்பது புரிந்தது. அவள் தட்டுத் தடுமாறி எட்டி எட்டி நடந்தாள்.

வெளியே வந்தபோதுகூட அவளது பதட்டம் தணியவில்லை. இங்கும் வந்துவிட்டால்? அவன் கண்களைப் பார்த்துவிட்டால்? அவளுக்குத் தங்களது வகுப்பறைக்குள் ஒரு மூலையில் இருக்கும் மேசையில் படுத்துக் கொள்ள வேண்டும் போல் தோன்றியது. அவள் விறு விறு என்று வகுப்பறைக்குச் சென்றாள். கடைசியாக இருந்த மேசை ஒன்றில் பையை வைத்தாள். மேசையில் முகத்தை வைத்த வண்ணம் படுத்தாள். அவள் படபடப்புச் சிறிது சிறிதாக அடங்கியது. என்றாலும் அவன் உருவம் கண்ணுக்குள் நின்றது. நினைவு மனதை வருடுவதாக இருந்தது. எதற்காகப் பயந்து ஓடி வந்தேன் என்கின்ற கேள்வி அவளிடம் இப்போது திடீரெனப் பிறந்தது.

நோர்வேயில் பார்த்தவுடன் காதல் வந்தது என்று புல்டா விடமுடியாது. அப்படி எல்லாம் இவர்கள் காதலிப்பதில்லை. இவர்கள் பார்த்து, அறிமுகமாகி, நண்பர்கள் ஆகி, அதன் பின்பு காதலராகி, தெருத்தெருவாய் முத்தம் பொழிந்து, சந்தர்ப்பம் கிடைத்தால் வீட்டினில் சல்லாபத்தில்... உல்லாசத்தில் திளைத்து... இது எங்களுக்கு எட்டாத் தூரமே. பலர் இங்கு விரும்பியே கன்னி கழிவதுண்டு.

கழியாட்டத்திற்குச் சென்று மதுவின் உச்ச மயக்கத்தில் உடலுறவுக்கே நேரடியாகப் போய்விடுவது அவதியான பாய்ச்சல்தான். காதல் வந்து, காமம் கழிப்பது என்பது பொதுவாக மிகவும் நிதானமான அரங்கலாக நடக்கும் விஷயம். தமிழர்கள் இந்த இரண்டிற்கும் இடைப்பட்டவர்கள் என்பது தேனுகாவின் எண்ணம். சமூகத்திற்காய் அடக்கி வைத்திருப்பதும் பின்பு அறிமுகம் இல்லாத மனிதரோடு அவதி அவதியாகத் தணிப்பதுமானது. தன்னுடைய இந்தக் கூற்றில் நிறையவே உண்மை இருக்கிறது என்பது அவள் எண்ணம்.

கண்டதும் காதலா? தேனுகாவுக்குப் புரியவில்லை. அவனில் ஏதோ பிடித்துவிட்டது. என்ன அது? அது புரியாமலே இதயத்தை அறுத்து எறிகிறது. கண்டதும் காதல் என்பது இல்லை என்றால் இதை என்ன வென்று சொல்வது? அவளுக்கு அது விளங்கவில்லை. கண்டதும் காதல் என்பது நகைப்புக்கு உரியது. கண்டதும் காதல் வராது என்பதை நிரூபிக்கவும் முடியாது. சில நடத்தைகள் பலருக்கு நகைப்பு ஆகலாம். பலருக்கு நகைப்பு ஆவதுகூடச் சிலருக்கு யதார்த்தம் ஆகலாம். தேனுகாவுக்கு இப்பொழுது துணிவு வந்தது போல் இருந்தாலும் தானாகப் போய் அவனைப் பார்க்க கால்கள் பின்னடித்தன. தேனுகா அவனை எண்ணிய வண்ணம் மேசையில் படுத்தாள்.

இதமான வாசம் ஒன்று. அது தேவலோகத்து போதை தந்த உணர்வு. எங்கு இருந்து வருகிறது என்பது அவளுக்குப் புரியவில்லை. ஆழமாக அவள் மூச்சை இழுத்து விட்டாள். அவள் கூந்தல் மீது ஒரு கை. குளிரோடு இதம் தந்த சுகமான அனுபவம். மயக்கமா? கனவா? தேனுகாவுக்கு இது கனவாக இருக்க வேண்டும் என்கின்ற எண்ணம். மீண்டும் மீண்டும் வருடிய அந்தக் கை, கனவா? தனது கையை எடுத்து அந்தக் கையைப் பிடித்த போது அது பிடிபட்டு உறவுற்ற நிஜம். தேனுகா அந்தக் கையை தலையில் இருந்து இறக்கி மேசையில் வைத்து உற்றுப் பார்த்தாள். அந்தக்கையின் சொந்தக்காரனைப் பார்த்தாள். தனது கன்னத்தில் கிள்ளிப் பார்த்தாள். அவனேதான். கனவு அல்ல நனவுதான். அவனின் அதே கண்கள். அவனிடம் இருந்து வந்த அதே பார்வை. அதே சுகந்தமான மணம். அவளுக்குச் சுவர்க்கத்தில் இருப்பதான பிரமை தட்டிற்று.

அவன் கண்களைப் பார்த்தவள் அந்த இடம்விட்டு நகர மறந்து மயங்கிக் கிடந்தாள். அவன் அவளைப் பார்த்துச் சிரித்தான். என்னிடம் இருந்து தப்பிவிட முடியுமா என்பது போல இருந்தது அந்தச் சிரிப்பு. பின்பு அவளது கைகளின் மேல் தனது கையை வைத்து வருடினான். தேனுகாவுக்கு உச்சம் தலையில் இன்பமேறியதான ஒரு வகைப் போதை உணர்வு. அவள் அதில் மயங்கித் தவித்தாள்.

அவன் அவளைப் பார்த்து, தனது கையைக் கொடுத்து…'திறாங்' என்று தனது பெயரைச் சொன்னான்.

தேனுகா வியப்போடு அவனைப் பார்த்தாள். பின்பு தானும் கையைக் கொடுத்து'தேனுகா' என அறிமுகம் செய்து கொண்டாள்.

அவன் குறும்பாக அவளை முதலில் பார்த்தான். பின்பு மெதுவாக அவளின் கண்களைப் பார்த்து பாரதியின்'மலரின் ஒளியை' இரசிப்பது போல இரசித்த வண்ணம் பேசினான்.

'ம்… கூர்போர் டு ஆர் சோ றெட்?' (ம்… நீயேன் இவ்வளவு பயப்படுகிறாய்?)
'வெம்? வுர்போர்?' (யார்? எதுக்கு?) தேனுகா அறியாதவள் போலக் கேட்டாள்.
அவன் அந்த பதிலைக் கேட்டு விழுந்து விழுந்து சிரித்தான். தேனுகா சிரிக்கும் அவனைப் பார்த்து வாயடைத்துப் போனாள். தனது சொற்கள் அறிவீனத்தின் விலாசமாகிவிட்டதோ என்கின்ற தவிப்பு அவளிடம். அவள் அதைக் காட்டிக் கொள்ளாது மௌனம் காத்தாள்.
அவன் விடவில்லை… தொடர்ந்தான்.
'டு மோ இக்க வார றெட்.' (நீ பயப்படத் தேவையில்லை.) என்றான்.
'எய்யார் இக்க றெட்.' (நான் பயப்பட வில்லை.) தனது விலாசத்தை மாற்றிக் கொள்ள தேனுகா அவதிப்பட்டாள்.
'தெ ஆர் பிறா.' (அது நல்லது.)
இன்னும் அதிகம் கேட்டு இருப்பான். அவன் கேட்பது சிக்கலைத் தந்தாலும் தேனுகாவுக்கு சினத்தைத் தரவில்லை. சினம் வந்ததாக அவள் காட்டிக் கொண்டாள். வாழ்க்கையில் பலவேளைகளில் நடிக்க வேண்டி இருப்பதாய் எண்ணினாள்.

ஆசிரியர் வந்தார். அவன் அவளைப் பார்ப்பதை நிறுத்திவிட்டு ஆசிரியர் கூறுவதை அவதானிக்கத் தொடங்கினான். தேனுகா அவனைப் பார்க்கும் விழிகளை நகர்த்த முடியாது தவித்தாள். அழகுண்டு. அறிவும் உண்டா? போகப் போகத்தான் தெரியும் என்று எண்ணினாள். அவன் திடீரென அவளை பார்க்கத் தேனுகா அவனைப் பார்க்காது ஆசிரியரைப் பார்ப்பது போலப் பாவனை செய்தாள். தேனுகாவுக்கு அவனைப் பார்க்க வேண்டும் போல் ஆசை தோன்றியது. பார்த்தால் மட்டமாக எண்ணி விடுவான் என்று எண்ணியவள் பார்த்தும் பார்க்காதது போல நாடகமாடுவதில் அல்லாடினாள். அடுத்த நாள் காலை நேரத்தோடு தேனுகா பாடசாலைக்குச் சென்றாள். அந்த உண்மை வகுப்பறை வெறுமையாகக் கிடந்த போதுதான் தேனுகாவுக்கு உறைத்தது. தன்னைத்தானே நொந்த வண்ணம் என்ன செய்வது என்கின்ற யோசனையில் நிற்கும் பொழுது அந்த அதிசயம் நடந்தது. திறாங் தேனுகாவைப் பார்த்துச் சிரித்த வண்ணம் வகுப்பறைக்குள் வந்தான். தேனுகாவுக்குத் தனது மடமை மேலும்

புரிந்தது.'Telepathy'யா என்கின்ற கேள்வி எழுந்தது. இவன் தன்னைத் தப்பாய் நினைத்து விடுவானோ என்கின்ற பயம் மெல்ல முளைத்தது. எதையும் வெளியே காட்டி கொள்ளாதவாறு புன்னகை ஒன்றால் மெல்ல மெழுகிப்பூசப் பார்த்தாள். வந்தவன் சும்மாய் இருக்கவில்லை. அவன் அவளை நோண்டினான். அவள் அசௌகரியத்தில் நெளிந்தாள்.

'ஆர் டூ ஒக்சோ கொம்மத் தீட்லிக்?' (நீயும் வெள்ளனவே வந்திட்டியா?)

தேனுகாவுக்குப் பதில் சொல்ல முடியவில்லை. முதலில் பக்கவாட்டிற்குத் தலையை ஆட்டியவள் பின்பு மேலும் கீழுமாய் தலையை ஆட்டி வழிந்தாள். பின்பு'எய் கார் சத் அலார்ம் பெயில்' (அலார்மைப் பிழையாக வைத்துவிட்டேன்.) என்றாள்.

நானும் அப்படித்தான் என்ற அவனின் பார்வையில் குறும்பும் கேலியும் வழிந்ததைத் தேனுகா பார்த்தாள். அவளுக்கு அவனை அடிக்க வேண்டும் போல் கோபம் வந்தது. தான் கை வைக்க அவன் அதிகமாக உரிமை எடுத்துக் கொள்வானோ என்கின்ற தமிழ் கலாச்சார அச்சம் திடீரென எட்டிப் பார்த்தது. அவள் தன் கையை அவசரமாக தன்னோடு அணைத்துக் கொண்டாள். பூட்டிவைக்க முடியாத பூதம்தான் காதல் என்பதான உணர்வும், உபத்திரபமும் தேனுகாவுக்கு. அதைப் பூட்டிவைக்காவிட்டால் வரப்போகும் தொல்லையை எண்ணிப் பூதத்தை பூட்டும் தொழில்நுட்பம் எது, எது என்று தேடி அலைந்தாள். அந்தத் தேடலில் இணையத்தில் ஒரு சில அறிவுரைகளைப் பொறுக்கினாலும் நடைமுறையில் அவை சாத்தியப்படாது போக நரக வேதனைதான் அவளுக்கு மிஞ்சியது.

பூதம் மனதைவிட்டு வெளியே வருவேன் என்று அடங்காது, துாங்காது போராடியது. வெளியே பூதம் வந்தால் வீட்டிற்குள்ளே போக முடியாது என்பது தேனுகாவுக்குத் தெரியும். இந்நாட்டு மக்கள் யார் யாரைக் காதலித்தாலும் எதுவும் சொல்ல மாட்டார்கள். மனதிற்குள் என்ன எண்ணுகிறார்களோ தெரியாது. அதற்குள் ஆயிரம் நையாண்டிகள் ஒளிந்து இருக்கலாம். வெளியே காட்டாதவரைக்கும் அது நிம்மதியெனத் தேனுகா எண்ணினாள்.

இவர்களில் அனைவரும் அப்பிடி இருந்து விடுவதில்லை என்பதும் தேனுகாவுக்குத் தெரியும். தேனுகாவுக்கு அப்பாவின் நண்பர் ஒருவர் நோர்வேப் பெண்மணியைக் காதலித்ததால் ஏற்பட்ட கஸ்ரங்கள் விளங்கும். அவர் வீட்டிற்கு வந்து அழுவாரைப் போல தன் வேதனைகளைச் சொல்லும் பொழுது தேனுகா அதைச் செவிமடுப்பாள். காதலித்த இருவரும் இணைபிரியாது இருந்தாலும் உறவுக்காரர்களே பிரச்சனையாக இருந்தார்கள். அவர் காதலித்தவளின் அப்பா அவரை எவ்வளவு கேவலமாக நடத்தினார் என்பதை அவர் தேனுகாவின் அப்பாவிடம் சொல்லுவது உண்டு. அதைக் கேட்கும் பொழுது இப்படியும் மனிதர்கள் வன்மம் காட்டுவார்களா என்கின்ற கேள்வி தேனுகாவை அரிப்பது உண்டு. வியட்னாம் காரர்களின் தாய் தகப்பனும் மிகவும் கட்டுப்பாடானவர்கள் என்பது தேனுகாவுக்குத் தெரியும். இவனது தாய் தந்தை எப்படி இருப்பார்கள் என்பது அவளுக்குத் தெரியாது. காதல் என்கின்ற பூதம் புறப்பட்டு வரும் போது பல கலவரங்கள் உண்டாகும் என்கின்ற கலக்கத்தோடு தேனுகா வலம் வந்தாள். எதற்குப் பயப்பட வேண்டும் என்கின்ற கேள்வி அடிமனதில் கனன்றாலும் சூறாவளியான பயம் சிலவேளை அதைத் துரும்பாகச் சுழற்றி அடித்துச் செல்கிறது.

முகம் பல வேளை உள்ளத்தைக் காட்டும் கண்ணாடியாகிறது. அது மனதில் இருப்பதை படம்போட்டுக் காட்டுகிறது. தேனுகா கண்ணாடிக்குக் கறுப்புமை அடிக்க முயன்று தோற்றுப் போனாள். வகுப்பிற்குள் இவர்கள் இருவரது வழியலையும் பார்த்துவிட்டு முதலில் சிலர் கண் சிமிட்டினார்கள். பின்பு தேனுகாவிடம் வந்தே'உனக்கு அவனைப் பிடித்து இருக்கிறதா?' என்று கேட்டார்கள். தேனுகா பேசாது இருக்க அவன்'நான் அவளைக் காதலிக்கிறேன்.' என்று அவர்களுக்குப் பதில் சொன்னான். தேனுகா அவனை'உனக்கு இவ்வளவு துணிவா?' என்று கேட்பது போலப் பார்த்தாள். ஆனால் வாய் திறந்து மறுக்கவில்லை. அவன் அதற்கும் சிரித்தான். தேனுகா இவனை என்ன செய்ய முடியும் என்பதாகத் தலையை ஆட்டினாள். மௌனம் சம்மதம் என்கின்ற கூற்று அவனுக்குப் புரிந்தது.

தேனுகா அதன் பின்பு அவனோடு சேர்ந்து திரிந்தாள். வகுப்பிற்குள்ளும், பாடசாலைக்குள்ளும் இவர்கள் காதல் பழசாகிப் போனாலும் வெளியே அது காலம் குறித்து வைத்த வெடிகுண்டானது. அது வெடிக்கும் நாள் அவள் தலை பறக்கும் நாள் என்பது தேனுகாவுக்குப் புரியும். அவன் சில வேளைகளில் வர்த்தக மையத்திற்குச் செல்ல

அவளை அழைப்பான். தேனுகா அதற்குச் சற்றும் இசைந்து கொடாது முதலில் மறுத்துவிடுவாள். வர்த்தக மையத்திற்குள் சென்றால் யாராவது தன்னை அவனோடு இணைந்து காணலாம். அப்படிக் கண்டால் பதுங்கி இருக்கும் பூதம் கமண்டலம் விட்டு வெளிவரும். பல கலவரங்கள் சரைவெடியாக வெடிக்கும். தனது இருப்பும் நிம்மதியும் கேள்விக் குறியாகும். முதலில் இப்படியெல்லாம் பயந்தவளுக்குப் பின்பு சிறிது சிறிதாக பயம் விட்டுப் போயிற்று. காதல் மோகம் பயத்தின் கண்ணை மூடிற்று. துணிவு மெல்லத் துணிந்து நின்றது. பின்பு அவன் இழுத்த இழுப்பிற்கு எல்லாம் அசைந்து கொடுக்கத் தொடங்கினாள். அதற்கேற்ப அம்மா மீது இருந்த வன்மமும் மெல்லத் தலையெடுத்தது. எதற்காக நான் அம்மா அப்பாவிற்குப் பயப்பட வேண்டும் என்கின்ற கேள்வி விறைப்பாகிற்று.

காலப் போக்கில் வர்த்தக மையத்திற்கு திறாங்குடன் நினைத்த போதெல்லாம் போய் வந்தாள். சில நாட்களில் தனது விடயம் தெரிய வந்து விட்டது என்பதை அறிமுகமான தமிழர்களின் முகத்தைப் பார்த்து அவள் அறிந்து கொண்டாள். அவர்கள் முகத்தில் இருக்கும் கேள்வியோட்டங்கள் அவளுக்கு வயிற்றைப் பிரட்டும் உணர்வைத் தரும். எந்த வெறுப்பையும், உணர்ச்சியையும் காட்டாது அவர்கள் கண்களில் இருந்து விலகி வந்தாள்.

ஊருக்குத் தெரிந்தது வீட்டிற்கும் விரைவில் தெரியவரும் என்பது தேனுகாவுக்கு விளங்கியது. தெரிய வந்து திருவிழா ஆகட்டும் என்று பேசாது விட்டாள். தமிழருக்குக் கண்டதை காவிப் பரப்பாவிட்டால் நிம்மதி இருக்காது. யாரோ தேனுகாவின் அப்பாவின் கடைக்கு இதற்காக தேடிச் சென்று விடயத்தைப் பரப்பி விட்டார்கள். அன்று இரவு தேனுகாவின் அப்பா அக்கினிக் குளம்பான கண்களோடு வீட்டிற்கு வந்தார். வழமையாகவே கடையில் வேலை செய்த களைப்பில் காரணம் இன்றிப் பிரவாகமெடுக்கும் கோபம். அதை ஊளித்தாண்டவம் ஆடச் செய்தது தேனுகாவைப் பற்றி அவர் கேள்விப்பட்ட விடயம். கதவைத் திறந்ததுமே தேனுகா, தேனுகாவென வீடு அதிரும்படி அவர் கத்தினார்.

ஊரில் இருந்து காவி வந்து பக்குவமாய் அடை காத்து வைத்திருக்கும் வன்முறை தேனுகாவின் அப்பாவுக்கு எதற்கும் முந்திரிக் கொட்டையாக நிற்கும். இது தேனுகாவுக்கும் நன்கு தெரியும். அவள் எதிர்பார்த்தபடியே தேனுகாவின் அப்பா தேனுகாவை நோக்கிப் பாய்ந்தார். தேனுகாவுக்கு தன்னைப் பாதுகாக்க வேண்டும் என்பது புரிந்தது. அதற்கு அப்பா பாய முதல் தான் பாய வேண்டுமென எண்ணினாள்.

'என்ன பாயுறியள்? எனக்குப் பதினாறு வயசு முடியுது எண்டது உங்களுக்குத் தெரியும்தானே? இனி நீங்கள் என்னைக் கட்டுப்படுத்தேலாது. அப்பிடிச் செய்தா என்ன நடக்கும் தெரியுமா? உங்களுக்கு நான் மட்டும்தான் இருக்கிறன் எண்டதாவது ஞாபகம் இருக்குதா? சும்மா என்ன வெருட்டாதேங்க. உங்கட வெருட்டெல்லாம் அம்மாவோட... சீ அவகூட உங்களுக்கு எங்க பயப்பிடுவா? அவவின்ர சங்கீதத்துக்குப் பின்னாலா நீங்கள்தான் அலையிறியள். அப்பிடித்தான் எல்லாரும் நக்கலடிப்பினம். இப்ப என்னிட்ட மட்டும் வீரம் காட்டுறியள்.' என்றாள் தேனுகா. அதற்குள் அங்கு வந்த தேனுகாவின் அம்மா.

'வாயப் பொத்தடி பெட்டக் கழுதை. இல்லாட்டி நானே கழுத்தைப் பிடிச்சு வெளிய தள்ளிப் போடுவன். அவர் எனக்குப் பின்னால திரியிறது எண்டு கண்ட நாயளும் சொன்னா அது உண்மையாகிடுமே? பார் பெத்த தேப்பனோட கதைக்கிற வள்ளல. எல்லாம் எங்கட தலையெழுத்து.' என்று கோபத்தில் கத்தினாள்.

'எங்க கழுத்தப் பிடிச்சுத் தள்ளு பாப்பம். சும்மா வெருட்டாத அம்மா. நான் உதுக்கெல்லாம் பயப்பிடமாட்டன்.'

'ஐயோ நான் இதை எங்க சொல்லுறது?'

'நான் சொல்லுறன்.' என்றாள் தேனுகா.

'வாயில போட்டன் எண்டா?'

'அதைப் பிறகு பாப்பம். நான் இங்க இருக்கோணும் எண்டா என்ன எந்தக் குறையும் சொல்லாமல் இருங்கோ. அப்படி இல்லையெண்டு என்னக் குறை சொல்லுறது எண்டா, இல்லாட்டி என்னை வெருட்டினா நான் இந்த வீட்ட விட்டு வெளிய போயிடுவன். உங்களுக்கு பிள்ளை வேணுமா இல்லாட்டி என்னைப் பேச வேணுமா எண்டு முடிவு செய்யுங்கோ.' என்றாள் தேனுகா. அவள் காட்டிய அதிகாரத்தில் அவர்கள் வெல வெலத்துப் போனார்கள். இருக்கும் ஒரு பிள்ளையும் போய்விட்டால் என்கின்ற எண்ணம் உண்மை சின மலைகளை சின்னாபின்னமாகச் சிதறடித்தது.

அவள் குரலில் இருந்த உறுதி அவர்களுக்குப் புரிந்தது. சின மலைகள் சிதறிய பின் எச்சங்களோடு மௌனம் பேசியது. மனது எரிமலையாகக் குமைந்தாலும் வாய் பேச முடியாத மௌனம். பணம், புகழ் என்பதிற்காய் பிள்ளையைப் பலிகொடுத்த சோகத்தில் தேனுகாவைப் பெற்றவர்கள் உத்தரிக்கத் தொடங்கினர். மனதிற்குள் குமுறிய வண்ணம், குரல் இருந்தும் பேச முடியாத ஊமைகளாக, போடமுடியாத வேசத்தைப் போட்டார்கள். ஆட முடியாத ஆட்டத்தை ஆடினார்கள்.

தேனுகா தனது முடிவை, தனது சுதந்திரத்தை நடைமுறைப்படுத்தினாள். எப்பொழுது வெளியே போவாள் எப்பொழுது வீட்டிற்கு வருவாள் என்பதை அவளே முடிவு செய்தாள். கமலம் ஏதாவது கேட்டால்,'நீயும் இப்படித்தானே செய்தாய். நான் அப்பொழுது சிறுபிள்ளையாகத் தேம்பிய போது என்னை யார் கவனித்தார்கள்? நீங்கள் எல்லாம் இப்பொழுது கரைகண்டு விட்டீர்கள். இனிப்பேசாது வீட்டில் இருப்பதை விட்டுவிட்டு என்னை அதிகாரம் செய்ய வேண்டாம். உங்கள் அதிகாரத்திற்கு எல்லாம் நான் இனி கட்டுப்படமாட்டேன்.' என்று பேசுவாள்.

கமலம் தனது மகள் இப்படியெல்லாம் நடப்பாள் என்று இம்மிய அளவும் நினைத்ததில்லை. அவள் அப்படிச் செய்த போது அதைக் கமலத்தால் தாங்க முடியாது போய்விட்டது. கமலத்தின் கவலை அவளது கலையைத் தின்னத் தொடங்கியது. கமலம் வகுப்புகள், கச்சேரிகள் போன்றவற்றிற்கு முழுக்குப் போட்டு விட்டு வீட்டில் இருந்தாள். பலரும் தொலைபேசி செய்து வகுப்பு எடுக்குமாறு தொந்தரவு கொடுத்தாலும் அவள் அதற்கு இணங்க மறுத்தாள். கமலம் என்கின்ற தாரகை வெடித்துச் சிதறி, சிறுத்து, ஒளி இழந்து இருண்டு போயிற்று. காலப் போக்கில் இருண்ட அண்டவெளியில் அது முகம் இழந்து தொலைந்து போயிற்று. குடும்பம் என்பது தொலைந்து போகும் போது கலை என்னும் பூச்சு எவ்வளவு காலம் ஒட்டியிருக்கும்? நிம்மதி இல்லாத இடத்தில் ஞானத்திற்கும், இரசனைக்கும் என்ன வேலை? சுருதிப் பெட்டியிலும், கீர்த்தனைப் புத்தகத்திலும் மெதுவாகத் தூசி ஏறியது. உருவத்திலும், உள்ளத்திலும் வயதும் கவலையும் மலையாக எழுந்து நின்று அழுத்தியது. செய்த பாவத்திற்கு பிராயச்சித்தம் என்ன என்கின்ற தேடலில் தன் சுயத்தை தொலைத்து நிம்மதி காணமுடியுமா என்று பார்த்தாள்.

உழைப்பு இங்கு எவ்வளவு அவசியம் என்பது புரிந்ததால் சண்முகம் தொடர்ந்தும் கடையை நடத்தி வந்தான். இப்போதெல்லாம் முன்பு போன்று தானே தொடர்ந்தும் கடையில் நின்று முறியாது வேறு ஆட்களையும் வேலைக்கு வைத்தான். ஆதாயத்தை அள்ளிக் குவித்து நிம்மதியாய் பெருமூச்சு விடலாம் என்று நிமிர்ந்த போது அவன் நிம்மதி தொலைந்து போயிற்று.

அன்று சனிக்கிழமை. இரவு எட்டுமணி இருக்கும். கோடை காலத்துச் சூரியன் கொட்டக் கொட்ட விழித்திருந்த கணங்கள். பணம் முக்கியம் இல்லை என்ற பின்பு கமலத்திற்கும் சண்முகத்திற்கும் வீடே போதிமரமாகியது. கமலம் மகளுக்காகச் சமைத்து வைத்துக் காத்திருப்பாள். தேனுகா அந்த நேரத்தில்தான் வெளியே திறாங்குடன் எங்காவது சாப்பிட்ட பின்பு வீட்டிற்கு வருவாள். வந்தவுடன் நேராகத் தனது அறைக்குச் செல்வாள். கமலத்திற்கு மனம் எல்லாம் இரணமாக வலிக்கும். ஈன்ற போது வலித்ததைவிட இப்போது கடுமையாக வலிக்கும். ஈன்ற போது உடல் வலித்தது. மனம் உவகை கொண்டது. இப்போது அவளுக்கு உடலும் மனமும் வலித்தன. அந்த வலி தாங்கமுடியாது மௌனமாக மனதிற்குள் அழுவாள். சண்முகம் இருந்தால் இதைப் பார்க்க அவனுக்கும் முகம் இருண்டுவிடும். மனதில் கோபம் அனலான சூறாவளியாக எழுந்து வீசும். என்றாலும் போராடித் தனது மௌனத்தை அவன் தக்கவைப்பான். இந்த வீட்டில் இனிப் பேசப்படும் மொழி மௌனம் என்பதை அவன் நன்கு புரிந்தான். இன்றும் தேனுகா வீட்டிற்கு வந்ததும் இரவுச் சாப்பாடு சாப்பிடுவாளா? அல்லது நேரடியாகத் தனது அறைக்குள் சென்று அடைக்கலமாகிக் கொள்வாளா? என்கின்ற புரியாத புதிரில் கமலம் தவித்தாள். அந்தத் தவிப்பை பார்த்துவிட்டுப் பரிதாபத்தில் சண்முகம் வாய் திறந்தான்.

'என்ன... நீ உந்தப் பாடு படுகிறாய்?'

'நான் சமைச்சு வைச்சிட்டு இருக்கிறன். அவள் வந்து சாப்பிடுவாளோ இல்லையோ தெரியாது. உந்தப் பெட்டை இப்பிடி மாறிப் போச்சுது?'

கமலத்திற்கு அதற்குமேல் கதைக்க முடியாது தொண்டை அடைத்தது. அவள் சண்முகத்தைப் பார்த்து விழித்தாள். சண்முகத்திற்குக் கவலையாகிற்று. அவனது மனதில் தங்கள் வாழ்வு எப்படிப் போகப் போகிறது என்பதான ஒரு

கலக்கம் எழுந்தது. இந்தப் பாடுகள் எல்லாம் விழலுக்கு இறைக்கின்ற நீர் என்கின்ற ஞானம் எழுந்தது. கமலத்தைப் பரிவோடு பார்த்து ஆறுதல் சொல்லத் தொடங்கினான்.

'நீயேன் அவள் சாப்பிடேல்ல எண்டு பாய்ஞ்சு பாய்ஞ்சு மாயிறா? அவள் சாப்பிட்டா என்ன சாப்பிடாட்டி என்ன? பெத்து இராசாத்திமாதிரி வளர்த்தம்... அதுக்கான பலனை பார்த்தியெல்லே? இன்னும் கொஞ்ச நாளிலில எங்கட உடம்பில இருக்கிற தெம்பும் இல்லாமல் போயிடும். அப்ப எங்கயும் சீக்கயேம்மில (முதியோர் இல்லத்தில்) கொண்டுபோய் தள்ளிப்போட்டுத் தன்ர அலுவல் பார்ப்பாள். நாங்கள் எப்பிடிப் பாஞ்சாலும் முடிவு ஒண்டாத்தான் இருக்கப் போகுது. பேசாமல் நாங்கள் சமைச்சுச் சாப்பிடுவம். அவள் தனக்கு வேணும் எண்டா எடுத்துப் போட்டுச் சாப்பிடுவாள்தானே?'

'ம்... அதுவும் சரிதான். எண்டாலும் மனது கேட்கிதில்லையே? பிள்ளை, பிள்ளை எண்டு அது கிடந்து அடிக்குது. அவளுக்குக் கொஞ்சம்கூட அது விளங்கேல்ல.'

'அவள் தனக்கு நாங்கள் தீங்கு செய்த மாதிரியும், அதுக்கு இப்ப தான் பழி வாங்குகிற மாதிரியும் நினைக்கிறாள். உனக்கு அது புரியேல்லயே? சும்மா ஊம்பிக் கொண்டு திரியாத. என்னதான் ஊம்பினாலும் இவள் எங்களுக்கு கடைசிகாலத்தில உதவப் போறேல்ல.'

'கடைசிகாலத்தில உதவாட்டியும் இருக்கிற காலத்திலயாவது மானத்தோட இருக்க வேண்டாமே? அதுக்காவது அவளைக் கெஞ்ச வேண்டிக் கிடக்குது.'

'நல்லா சந்தோசமாய் இருக்கிறதுகளே உதவாதுகள். இவள் பாம்பும் கீரியுமாய் இருக்கிறாள். இவளே உதவப் போறாள்? ம்... நாங்கள் கெஞ்சி ஏதாவது பிரயோசனம் இருக்குதோ பார். அவள் தான் நினைச்சதைத்தான் செய்வாள். அதில எந்த மாற்றமும் இருக்காது. பேசாமல் உன்ர அலுவலைப் பார்.'

'அப்ப என்ன செய்யச் சொல்லுறியள்?'

'பேசாமல் எங்களைப் பற்றிக் கவலைப்படு எண்டுறன்.'

'அது நொஸ்குகளுக்குத்தான் சரியப்பா. எங்களுக்குச் சரிப்பட்டு வராது.'

'அவள் நொஸ்குகள் மாதிரித்தான் செய்வாள். இருந்து பார்... கொஞ்சம் எங்களுக்கு ஏலாது எண்டாப் பிறகு உனக்கு அது விளங்கும்.'

'என்னவோ எல்லாம் சொல்லுறியள். எங்களுக்கு ஏன் இந்த விதியோ தெரியேல்ல.'

சண்முகம் அதற்கு மேல் கதைக்கவில்லை. எட்டுமணியாகியும் கொட்டக் கொட்ட விழித்திருக்கும் சூரியனை பார்த்தான். கோபம் அக்கினிக் குளம்பாய் கொதித்து எழுந்தது. மனிசரை இரவிலும் நித்திரை கொள்ளவிடாத தொல்லை என்பதான எரிச்சல் மேலிட்டது. கலாச்சாரமும், கௌரவமும் நிம்மதி தின்ற பிசாசுகளாக அவனைப் பயமுறுத்தின. இந்த நாட்டுச் சட்டத்தை எண்ணும் பொழுது இன்னும் கொதிப்பு எழும்பியது. அதேவேளை தான் கொதித்து என்ன பிரயோசனம் என்கின்ற கேள்வியும் அவனே நோண்டியது.

தெருவில் எங்கோ சென்ற மோட்டார்ச் சைக்கிளின் சத்தம் இங்குவரை கேட்கிறது. கோடைகாலம் என்றால் இது வேறு ஒரு தொல்லையாக இருக்கிறது. சத்தத்தால் அமைதியைக் கெடுக்கும் சவாரி வண்டியது. அதன் இரைச்சல் அமைதி தின்று அதிர்வு வழங்கிச் செல்லும். தற்போதும் அப்படித்தான் சென்றதாக அவன் நினைத்தான்.

நான்கு சிறிய பிள்ளைகள் பின்னேர விளையாட்டு முடிந்து வீட்டிற்குச் சென்றார்கள். சூரியன் கொட்டக் கொட்ட விழித்தாலும் எட்டுமணி என்பது உடல் இளைப்பின் பிரசவ நேரம் அல்லவா? அது அவர்களுக்குப் புரிந்து இருக்கிறது. தேனுகாவுக்கு நேரம் காலம் என்பது அவள் நினைப்பதைப் பொறுத்ததுதான். அவள் எத்தனை மணிக்கு வந்தாலும் அவளை யாரும் தட்டிக்கேட்க முடியாது. இதை நினைத்த போது சண்முகத்திற்கு மீண்டும் பற்றிக் கொண்டு வந்தது. நேரகாலம் தெரியாது கொட்டக் கொட்ட விழித்திருக்கும் சூரியன் மீது மீண்டும் அவனுக்குக் கோபம் வந்தது. பொன் ஆணிகளைப் போல கதிர்களை அள்ளி வீசிக் கண்ணைக் கெடுப்பதாக அவனைச் சபித்தான். பின்பு வெறுப்போடு வெளியே முறைத்தான். திடீரெனத் தேனுகா வருவது போலத் தெரிந்தது. சண்முகம் உற்றுப் பார்த்தான். அது தேனுகாதான். தேனுகா வேறுயாருடனோ சேர்ந்து வந்தாள். இந்த நேரத்தில் யாருடன் வருகிறாள். பிரவீனா அல்ல. யாரோ பொடியன் போல இருப்பது சண்முகத்திற்குப் பிடிபட்டது. இந்த நேரத்தில் யாருடன் இவள்? அவனுக்குத் தன்னை அறியாமலே கோபம் கொதித்து எழுந்தது. வரட்டும் அவள் என்று கறுவியவனுக்கு வந்த பிறகு தான் என்ன செய்ய முடியும் என்கின்ற எண்ணம் எழுந்தது. அது கவலையாக

வடிந்தது. அந்தக் கவலை பின்பு வெறுப்பாகியது. இருக்கும் ஒரு பிள்ளையும் எம்முடன் பகைத்தால் என்கின்ற எண்ணம் அதட்டியது. இந்த வீட்டில் இனி எப்பொழுதும் மௌனம்தான் பேசமுடியும் என்பது மீண்டும் புரிந்தது.

சண்முகத்திற்கு மானமற்று உயிர் வாழ்வதிலும் மண்ணில் புதைதல் மாண்பெனத் தோன்றியது. நேசமுள்ள கமலத்திற்காய் வாழ வேண்டும் என்கின்ற ஏக்கம் எழுந்தது. அது அவன் எண்ணத்திற்குத் தடை போட்டது. தேனுகா தன் பிழை உணர்வாள் என்கின்ற நம்பிக்கை சீண்டியது. சண்முகம் தனது கோபத்தை அவதி அவதியாக நெஞ்சிற்குள் புதைத்தான்.

அவர்கள் மிகவும் அருகாக வந்தபோது சண்முகத்திற்கு மேலும் அதிர்ச்சியாகியது.'இவள் என்ன ஒரு சப்பட்டையோடு வருகிறாள்? அதுவும் கையைப் பிடித்துக் கொண்டு வருகிறாள்?' சண்முகத்திற்கு மீண்டும் கோபம் வந்தது. காதலித்தாலும் ஒரு தராதரம் வேண்டாமா என்கின்ற கௌரவச் சினம் எழுந்தது. அவன் வெறுப்பாக அவர்களைப் பார்த்தான். எரிக்கும் சக்தி இல்லாத இயலாமை அவனைத் தாக்கியது.

அப்பாவின் நாறல் பூனையின் பார்வை தேனுகாவுக்குத் தெரியும். அதுக்குப் பதிலடி கொடுக்க வேண்டும் என்கின்ற வன்மத்தோடு அப்பாவில் உள்ள கோபத்தை அம்மா மீது திருப்பினாள் தேனுகா. மனதிற்குள் ஆயிரம் பகையோடு உறவுகொள்ளும் மனிதர்கள். வெளியே சிரித்துச் சிரித்து உள்ளே கொதிக்கின்ற உள்ளங்கள். பகையேன் உறவாக வேண்டும்? பாழ்பட்ட கோபமேன் தலைதூக்க வேண்டும்? இந்த எண்ணங்கள் தந்த குற்ற உணர்வை அகங்காரமாய் காலில் போட்டு மிதித்த வண்ணம் அம்மா மீது பாய்ந்தாள் தேனுகா.

'என்னம்மா அப்பிடிப் பாக்கிறா? இவர்தான் என்னுடைய சாரஸ்த (திருமணமாகாது சேர்ந்து வாழும் நண்பர்கள்.) பெயர் திறாங்.' என்று அவனைப் பார்த்து அவள் கூற,'காய்' எனக் கூறிய வண்ணம் அவன் முதுகை நன்கு வளைத்து மூன்று முறை கமலத்திற்கு வணக்கம் கூறினான். கமலம் எதுவும் பேசாது விறைத்துப் போய் இருந்தாள். அதைப் பார்த்த பின்பு சண்முகத்தைக் காட்டி'அவர்தான் என்னுடைய அப்பா.' என்றாள் தேனுகா. அவன் மீண்டும் முதுகு வளைத்து மூன்று முறை வணக்கம் சொன்னான். அவனின் முதுகு வளைப்பைப் பார்த்ததும் சண்முகத்திற்கு திடீரெனக் கோபம் மறைந்து சிரிப்பு வந்தது. அதைச் சண்முகம் ஒருவாறு மறைத்து அவனைப் பார்த்து முறைத்தான்.

'இக்க வெசிம்மிற ஓம் டெம்' (அவையைப் பற்றிக் கவலைப்படாதே.) என்று திறாங்கிடம் கூறியவள் அவனின் கையைப் பிடித்து இழுத்த வண்ணம் சமையல் அறைக்குச் சென்றாள். கையை வெட்ட வேண்டும் என்கின்ற கோபம் சண்முகத்திற்கு. என்றாலும் கல்லாய் அசையாது இருக்கவேண்டிய கட்டாயம். கமலம் இன்று மகளுக்காக நுடில்ஸ் சமைத்து வைத்தது மருமகனுக்கும் வசதியாகப் போய்விட்டது. தேனுகா தனக்கும் அவனுக்கும் சாப்பாடு பரிமாறினாள். பின்பு சமையல் அறையில் உள்ள மேசையில் இருந்து இருவரும் சாப்பிட்டார்கள்.
காதலின் தொடக்கத்தில் நகைப்பு என்பது காரண காரியம் இல்லாது பூப்பதாக இருக்க வேண்டும். காலம் செல்லச் செல்ல அந்த நகைப்பே சினமாவது வேறுகதை. தேனுகாவும் திறாங்கும் சத்தமாக அடிக்கடி சிரித்தார்கள். சண்முகத்திற்கு அவர்களைப் பார்க்க சிலவேளை எரிச்சலாக இருக்கும். கமலத்தைப் பார்க்கும் போதெல்லாம் அவனுக்குப் பரிதாபமாய் இருக்கும்.

அவர்கள் இருவரும் எந்தக் கவலையும் இன்றி நன்கு சாப்பிட்டார்கள். எங்காவது குடித்துவிட்டு வந்து இருக்கலாம் என்கின்ற ஊகம் சண்முகத்திற்கு. அதை தட்டிக் கேட்க முடியாது சினம் அடிக்கடி சண்முகத்தின் பொறுமைக்குச் சவால் விட்டது. சாப்பிட்டு முடிந்த பின்பு தேனுகா அவனையும் இழுத்துக் கொண்டு தனது படுக்கையறைக்குச் சென்றாள். இவ்வளவு நேரமும் பொறுமையாக இருந்த சண்முகத்தால் அதற்கு மேலும் அதைப் பார்த்த வண்ணம் இருக்க முடியவில்லை.

'என்ன நடக்குது தேனுகா?'

'படுக்கப் போறம்.'

'ஓ உனக்கு நித்திர வந்தாப் போய் மேல படு. அவன் தன்ர வீட்ட போய் படுக்கட்டும்.'

‘அவன் தன்ர வீட்ட போகிலி நானும் அவனோட அவன்ர வீட்ட போறன். உங்களுக்கு விளங்கும்தானே இதெல்லாம்? இதுக்கு மேல உங்களுக்கு விளக்கம் சொல்லத் தேவையில்லை எண்டு நினைக்கிறன். இது உங்களுக்கு விளங்காமல் இல்ல. என்ர வாயில இருந்து கிண்டோணும் எண்டுதானே உந்தக் கேள்வி.’

‘வாய மூடடி? உங்க தமிழ் பிள்ளையள் எல்லாம் இப்பிடியே செய்யுதுகள்? அதெல்லாம் ஒழுங்கா நடக்கோணும். சும்மா என்னக் கோவப்படுத்தாத. பிறகு நான் கொலைகாரனா மாறிடுவன்.’

‘தமிழ் பிள்ளையள் என்ன செய்யினம் எண்டு உங்களுக்கு என்னப்பா தெரியும்? அது எனக்கெல்லோ தெரியும். உங்களோட நான் தேவையில்லாமல் தர்கப்பட விரும்பேல்ல. நாங்கள் எங்கட ஸ்ரப்படி இங்க இருக்கேலும் எண்டா இருக்கிறம். இல்லாட்டி வெளிக்கிட்டுப் போறம். எது செய்ய வேணும் எண்டதை மட்டும் நீங்கள் சொல்லுங்கோ?’

‘தேனுகா சொஞ்சம் விளங்கிக்கொள். மற்றவ கண்டமாதிரிக் கதைப்பினம்.’ சண்முகன் வில்லை இழந்த இராவணன் கெஞ்சினால் எப்படி இருக்குமோ அப்படிக் கெஞ்சினான். அற்கும் எந்தப் பயனும் இருக்கவில்லை.

‘சொறியப்பா. நான் மற்றவைக்காக வாழேலாது.’

‘எனக்காகத் தேனுகா.’ சண்முகன் மண்டியிட்டான்.

‘யாருக்காவும் நான் என் வாழ்க்கையை விட்டுக் கொடுக்கேலாது. நாங்கள் மேல அறைக்குப் போகவா இல்லாட்டி வெளியால போகவா?’ என்றாள் தேனுகா எந்தத் தயவு தாட்சணியமும் இன்றி.

‘மேல போங்க.’

கூறிய சண்முகம் கோபமாக வெளியே போனான். வில்லை இழந்த இராவணன் கடலில் வீழ்ந்திருக்க வேண்டும் என்று அவனுக்குத் தோன்றியது. கமலம் சத்தமில்லாது அழுதாள். மேலே காமம் நாணம் மறந்து ஒலித்தது.

# 9

தேனுகா அன்று தனியே வீட்டில் இருந்தாள். திறாங் வந்தால் அவனோடு கதைப்பதில் அவளுக்குப் பொழுது போய்விடும். எத்தனைதான் நண்பர்கள் இருந்தாலும் தனக்கென்ற ஆணோடு தனிமையில் இருப்பது ஆரம்பத்தில் சுவர்க்கத்தில் நிரந்தர குடியமர்த்திய கிரக்கம் தரும். அந்தக் கிரக்கம் நாளையளவில் தேய்பிறையானாலும் அவனைக் காணும் போதெல்லாம் காமமென்னும் ஒளி வீச அவன் மேல் மோகம் கொள்ள வைக்கும். அந்த மோகத்தில் தத்தளித்து, தாவித் தணிந்து… வாழ்வு தமக்குள் ஒளிந்து கிடப்பதான அவளது அசையாத நம்பிக்கை தொடர் கதையாகி… காமத்தின் சுகிப்பே வாழ்வின் உச்சம் என்கின்ற தத்துவத்தை முழுமையாக ஏற்ற ஞானியாகி… அந்த ஞானக் கிறுக்கில் ஞாலம் மறக்க… அருவெருப்பில் நெளியும் அவள் தாய் தந்தையின் அவஸ்தை தொடர்கதையாகிற்று.

ஆணைப் பெண்ணும், பெண்ணை ஆணும் தள்ளி வைத்து இன்று இணையத்திற்குள் வாழ்வைத் தொலைத்தவர்கள் பலர். ஆணுக்குப் பெண் மீது காமம். பெண்ணுக்கு ஆண் மீது காமம். பல நவீன மனிதருக்கு இணையத்தின் மீது காமம். அந்தக் காமத்தில் கண்ணை இழந்த புதிய சமுதாயம் இன்று வழி தெரியாது தடுமாறும் குருடர்கள் ஆகும். தேனுகாவும் தான் அப்படித்தானோ எனச் சிலவேளை எண்ணுவதுண்டு.

சொற்கள் தொலைந்து, பேச்சுவார்த்தை மறைந்து, மௌனத்தில் அந்தரிக்கும் வீடு அது. வாய்க்குப் பூட்டு இட்ட பின்பு அவளுக்கு வாய் பேசாத உறவு ஒன்று தேவைப்பட்டது. தேனுகா இணையத்தின் காமத்திற்குச் சோரம் போகாவிட்டாலும் திறாங் இல்லாத அலுப்பைப் போக்க அந்த உலகில் சஞ்சரிக்கத் தொடங்கினாள். பேசாமல் புரிந்து கொள்வதற்கே கரைகாணா விடயங்கள். பேசிக் கொள்வதற்கும் பல வழிகள். இணையம் எத்தனை உலகை இணைக்கிறது? எத்தனை உறவை உருவாக்குகிறது? எத்தனை உறவைப் பிரிக்கிறது? இணையத்தில் தொலைந்து… உலகத்தை மறந்து, உயிரான உறவுகளைத் தொலைத்தவர்கள் எத்தனைபேர்? காமம் புரியாத பாலகர்கள்கூடக் காமம் பழகும் கலாசாலையாக…. காலால் நடந்த சமுதாயம் திடீரெனத் தலையால் நடக்க…

இணையத்தில் தொலைந்த தேனுவுகாக்குத் திடீரென அது கண்ணில் பட்டது. குழந்தை போல ஆர்வம் எழுந்து ஆர்ப்பரித்தது. அவள் அந்த இணைப்பைச் சொடுக்கினாள். அது நோர்வேயின் பிரசித்தமான தொலைக்காட்சி

நிறுவனத்தின் இணையத்தளத்தில் விரிவாகப் பிரசுரிக்கப்பட்ட ஒரு நிகழ்ச்சியின் விண்ணப்பப் படிவத்திற்குச் சென்றது. காலம் கனிந்து தானும் மேடையேறும் கனவு அவள் முன்னே விரிந்தது. கண்கள் அகன்று கைகள் பரபரத்தன. கணினி சொடுக்கிக் கொள்ளென அவளைப் பார்த்துச் சொல்லாமற்ச் சொல்லிச் சிரித்தது.

அந்த நிகழ்ச்சி நோர்வேயில் வாழும் இளவட்டங்களால் மிகவும் ஆர்வமாகப் பார்க்கப்படும் நிகழ்ச்சி. அப்பா அம்மாவிற்குத் தெரியாது அறைக்குள் இருந்து இணையத்தின் வழியாகப் பார்ப்பவர் அதிகம். அதில் பங்குபற்றிப் பின்பு வெளியே வருபவர்களுக்குத் தமிழ் நாட்டில் சினிமா நடிகர் நடிகைகளுக்கு இருக்கும் வரவேற்பு. இந்த நிகழ்ச்சியின் ஆயுள் நூறு நாட்கள். உள்ளே இருக்கும் பொழுது இருபத்து நான்கு மணிநேரமும் உலகு பார்க்கும் வாழ்க்கை என்றால் வெளியே வந்த பின்பும் அவர்கள் பிரபலங்கள்தான். அந்தப் பிரபலங்களின் புகைப்படங்களைத் தேனுகா பல சஞ்சிகைகளில் பார்த்து இருக்கிறாள். அம்மாவின் புகழ் அத்தோடு ஒப்பிடுகையில் மிகவும் சிறியது என்பது அவளுக்குத் தெரியும். தான் அதைவிட ஆயிரம் மடங்கான இந்தப் புகழை அடைய வேண்டும் என்கின்ற அவா ஊற்றுக் கண்ணாய் திறந்து கரைகள் தாண்டிப் பாயும் ஆறாய் அவள் நெஞ்சில் பெருக்கெடுத்து ஓடியது.

நிகழ்ச்சிக்கு விண்ணப்பம் செய்யுங்கள் என்கின்ற விளம்பரத்தோடு முதல் நடந்த நிகழ்ச்சியில் பங்கு பற்றியவர்களின் புகைப்படங்கள். அதில் ஒரு சில நாணம் மறந்த அரை நிர்வாணப் படங்கள். அதைவிடவும் நாணம் மறந்த, நாணம் மறவாத வேறு புகைப் படங்களும். அந்த விளம்பரம் அவளை பார்த்துச் சிரித்தது. அந்த நிகழ்ச்சி புரட்டாசி கடைசியில் தொடங்கி ஐப்பசி கார்த்திகை எல்லாம் தொடர்ந்து முடிவு காணும். சர்ச்சைக்குரிய இந்த நிகழ்ச்சியில் உன்னால் பங்கு கொள்ள முடியுமா? என்கின்ற கேள்வி இடை நடுவில் சவால்விட்டது. அடைத்து வைக்கப்பட்ட வீட்டில்... நூறு நாட்கள் முகம் தெரியாத மனிதர்களோடு... பால் வேறுபாடு இன்றி... இருபத்தி நான்கு மணி நேரமும், கமரா மூலம் உலகம் பார்க்க... வாழப்போகும் துணிவு உனக்கு உள்ளதாவெனத் திரும்பத் திரும்ப அது சவால் விட்டது. ஆம் என்றால் உடனே விண்ணப்பம் செய்யென மீண்டும் உசுப்பி விட்டது.

காதலன், காதலி, அம்மா, அப்பா, உறவினர்கள், செல்லப் பிராணி, முகப் புத்தகம், இணையம் ஈறாக உலகத்தில் இருந்து தனிமைப் படுத்தப்பட்ட ஒரு வீட்டிற்குள் முகம் தெரியாத மனிதர்களோடு... இருபத்தி நான்கு மணிநேரம் கமராக்கள் குழியல் அறைக்கு உள்ளும் பிரவேசிக்க... வாழும் விளையாட்டா? விளையாட்டான வாழ்வா? உள்ளே சென்று அதைப் பார்த்து... நட்சத்திரமாய் வெளியே வரவேண்டும் என்று ஆர்ப்பரித்தது அவள் மனது.
அடைத்து வைக்கப்பட்ட வாழ்வாய் இருந்தாலும் அனேக குதுகலம் உண்டு. உணவுக்கோ வேறு விதமான செயற்பாடுகளுக்கோ, விளையாட்டுக்கோ குறைவிருக்காது. அத்தோடு அவர்கள் ஒழுங்கு செய்யும் போட்டி நிகழ்ச்சிகள் இருக்கும். இந்த வித்தியாசமான வாழ்வு புகழுக்கும், புது வித நட்பிற்கும் தன்னை இட்டுச் செல்லும் என்கின்ற கனவில் அவள் மிதக்க, நனவான அவள் வாழ்க்கை மெல்ல நழுவி தூரே சென்றது. தேனுகா விண்ணப்பிப்பதற்கான இணைப்பைச் சொடுக்க, விண்ணப்பப் படிவம் முன்னே வந்தது. நிஜம் கரைந்து போயிற்று.
திறாங் தேனுகாவின் வீட்டிற்கு வந்தான். அழைப்பு மணியை அழுத்திய சில கணங்களுக்குப் பின்பு கமலம் தோன்றினாள். கேள்விக் குறியோடு கதவைத் திறந்தாள். அவள் முகத்தில் வளமை போல வெறுப்பு, விரக்தி, கோபம் என்பதான ஒரு கலவையின் வெளிப்பாடான சுளிப்பு. திறாங் அதைப்பற்றிக் கவலைப்படாது 'காய்' என்றுவிட்டு ஜெக்கெற்றைக் கழற்றிக் கொழுவிய பின்பு மேலே சென்றான். அப்படி மேலே செல்லும் பொழுது தொலைக்காட்சி பார்த்துக் கொண்டிருந்த சண்முகத்தைப் பார்த்தான். அவன் பார்வையில் இருந்த வெறுப்புத் திறாங்கைக் கதிகலங்க வைத்தாலும் இதற்காக எல்லாம் தான் விட்டுக் கொடுக்க முடியாது என்று எண்ணிய வண்ணம் அவன் மேலே சென்றான்.

தேனுகா விண்ணப்பித்து முடியவும் திறாங் மேலே வரவும் சரியாயிற்று. அவன் வந்ததும் தேனுகாவை அணைத்து முத்தமிட்டான். பின்பு அவளைப் பார்த்து,
'வா டு ஆர் ஒப்தாத் போ பேசே?' (நீ கணினியில் அப்படி என்ன செய்து கொண்டு இருந்தாய்?)
'தெ ஆர் மின் துறொம்ம...எய் பந் டென்.' (அது என்னுடைய கனவு. அதைக் கண்டு கொண்டேன்.)
'வாடா?' (என்ன அது?)
'எய் கார் சோக்த்த தில் விக்விறதர்.' (நான் விக்விறதருக்கு விண்ணப்பித்து இருக்கிறேன்.) என்றாள்.
திறாங் இந்த அதிர்ச்சியை எதிர்பார்க்கவில்லை. அவன் கண்களும் கன்னங்களும் சிவந்தன. கைகள் நடுங்கின. தேனுகாவின் கழுத்தைப் பிடித்து நெரிக்க வேண்டும் போல் அவன் பரபரத்தான். அவன் கோபத்தில் நிலை குலைந்து

தடுமாறினான். கோபம் அக்கினியாக, அந்த தீயில் எரிவதான துடிப்பில் அந்தரித்தான். அதை எப்படி வெளிப்படுத்துவது என்பது புரியாது தவித்தான். பின்பு தன்னை கட்டுப்படுத்திக் கொண்டு,

'டு துல்ல மே மை? இக்க சாந்?' (நீ என்னோடு பகிடி விடுகிறாய், இல்லையா?) என்றான்.

'நைய். தெ ஆர் சாந்.' (இல்லை. அது உண்மை.)

'அல்றி ஈ லீவ. விஸ்தெ சேர் எய் வில் திறேப்ப டை.' (ஒரு நாளும் நடவாது. அப்பிடி நடந்தால், உன்ன நான் கொலை செய்வன்.)

'வா சினக்கர் டு ஒம். புறவ டு ஸ்கிறம்ம மை?' (நீ என்ன கதைக்கிறா? நீ என்னை வெருட்டப் பாக்கிறியா?)

'நைய், எய் மேனர் டெத்த.' (இல்லை நான் அப்பிடித்தான் கருதுறன்.)

'கோ... கோ உத்... எய் வில் இக்க சீ டை மேர்.' (போ... வெளிய போ... நான் உன்ன இனிமேல் பார்க்க விரும்பேல்ல)

'தொ ஆர் கிறைத். எய் கோர் நு. மென் விஸ் தெ சேர் எய் வில் திறேப்ப டை.' (அது சரி. நான் இப்ப போறன். ஆனா நீ சொல்லுற மாதிரிச் செய்தா நான் உன்னைக் கொலை செய்வன்.)

'வி போர் சே?' (அதையும் பார்ப்பம்)

'வி போர் சே?' (அதையும் பார்ப்பம்)

திறாங் கோபமாகப் புயலைப் போல வெளியே சென்றான்.
மேலே எதற்காகவோ இருவரும் சண்டை பிடிப்பது போலக் கேட்டாலும் எதற்காகச் சண்டை பிடிக்கிறார்கள் என்பது கீழே இருந்தவர்களுக்குப் புரியவில்லை. திறாங் வெளியே கோபமாகச் சென்ற போது அவன் போன போக்கில் ஏதோ பிரச்சனை என்பது மட்டும் அவர்களுக்குப் புரிந்தது. என்ன நடந்தது என்பதைத் தேனுகாவே சொல்ல வேண்டும். கேட்டால் சிலவேளை தன்மேல் சண்டைக்கு வருவாளோ என்கின்ற பயம் கமலத்திற்கு. சண்முகத்திற்கு அவளோடு இப்பொழுது கதைப்பதற்கே மனம் ஏகுவதில்லை. என்ன சண்டை நடந்தால் எனக்கு என்ன என்பது போல அவன் சோபாவில் இருந்து தொலைக்காட்சியைப் பார்த்தான்.

திறாங் அப்படிச் சண்டை பிடித்துவிட்டுச் செல்வான் என்று தேனுகா எதிர்பார்க்கவில்லை. அது அவளுக்கு அதிர்ச்சியாகிற்று. நிகழ்ச்சியில் பங்கு கொள்ளும் விடயத்தை அம்மா அப்பாவிடமும் சொல்ல வேண்டும். சொன்னால் அவர்கள் எதிர்ப்பார்கள் என்பது தேனுகாவுக்குத் தெரியும். அவர்கள் எதிர்த்தாலும் தனது முடிவில் இனி எந்த மாற்றமும் இல்லை என்பதில் அவள் உறுதி பூண்டாள். சிறிது நேரம் அறைக்குள் இருந்தவளுக்கு விசரே பிடித்துவிடும் போலாகிற்று. திறாங்கை போய் சமாதானம் செய்வோமா என்று முதலில் எண்ணினாள். பின்பு தான் எதற்கு அவனைச் சமாதானம் செய்ய வேண்டும் என்கின்ற கேள்வியோடு அந்த எண்ணத்தைக் கைவிட்டாள். அறைக்குள் தொடர்ந்து இருக்க அவளுக்குப் பிடிக்கவில்லை. வெளியே எங்காவது சென்றுவிட்டு வந்தால் நன்றாக இருக்கும் என்பதாய் அவளுக்குத் தோன்றிற்று.

அவள் புறப்பட்டு வெளியே வந்தாள். அப்படி வந்தவளைக் கமலத்தின் பார்வை நிறுத்தியது. அந்தப் பார்வையில் எதற்குச் சண்டை பிடித்தாய் என்பதான கேள்வி தொக்கி நிற்பது தேனுகாவிற்குப் புரிந்திற்று. தேனுகா ஒருகணம் நின்றாள். அவனோடு எதற்காகச் சண்டை பிடித்தேன் என்பதைச் சொல்லவா என்று யோசித்தாள். எப்போதோ ஒரு நாள் சொல்ல வேண்டியதை இப்போதே சொல்லிவிட்டால் என்ன என்பதான துணிவு வந்தது. அப்பாவைப் பார்க்க சற்றுப் பயமாக இருந்தாலும் இப்படி எல்லாம் பயப்பட்டால் தான் தொடங்கிய அலுவல் நடைபெறாது என்பதை எண்ணி அம்மாவைப் பார்த்தாள்.

'என்னம்மா என்ன அப்பிடிப் பாக்கிறா?'

'இல்ல எங்களோடதான் சண்டை பிடிக்கிறா எண்டா அவனோடையும் சண்டையே? மற்ற மனிசரோட கொஞ்சம் அமைதியாப் பேசிப் பழகத் தெரியாதே?'

'ஓ எனக்குத் தெரியாது... நீ இப்ப எனக்கு அதைப் பழக்கப் போறியே?'

'ஏனடி எல்லாத்துக்கும் சண்டைக்கு வாறா? கோபம் சத்திராதியடி. நாங்கள் என்ன கேட்டாலும் இப்ப உனக்கு வில்லங்கமா இருக்குது. உனக்கு அப்பா அம்மா மேல கொஞ்சம்கூட இரக்கமே இல்லையேடி?' என்றாள் கமலம்.

‘எல்லாம் இந்த நாட்டின்ர இராசி. அப்பா அம்மாகூடப் பாரம் எண்ட சுயநலம்.’ சண்முகம் அதற்கு மேலும் வலுச்சேர்த்தான்.

‘நான் உங்களப் பாரம் எண்டு சொன்னனா? நீங்கள் என்னுடைய சொந்த சுதந்திரத்தில தலையிடாமல் இருந்தியள் எண்டா யாரும் யாருக்கும் பாரம் எண்டு நினைக்கத் தேவையில்லை. எங்களுக்கு இடையில எந்தப் பிரச்சனையும் வராது.’

‘உன்னுடைய சொந்தப் பிரச்சனையில நாங்கள் தலை இடாமல் இருக்க வேணும் எண்டா அது எங்கட மானத்தில கை வைக்காமல் இருக்க வேணும். அதுக்கு ஏற்ற மாதிரி நீ நடந்தியென்டா ஒரு பிரச்சனையும் வராது.’ சண்முகம் அமைதியாகக் கமலம் தொடர்ந்து கதைத்தாள்.

‘உங்கட மானம்... உங்கட மானம்? உங்களுக்கு என்ன மானம் இருக்குது? நாட்டவிட்டு அகதியாளா ஓடிவந்து, முகவரியில்லாமல் அலையிற கூட்டம் இல்லையா நீங்கள்? பிறகு மானம் மானம் எண்டு இல்லாததைப் பற்றிக் கதைக்கிறியள்?’

‘அந்தக்கூட்டத்துக்குப் பிறந்தவள்தானேடி நீயும்?’

‘ஓ நானும் அந்தக் கூட்டத்துக்குப் பிறந்தவள்தான். அதுதான் நான் என்னைப் பெரிய கௌரிமானா நினைக்கேல்லை. ஓடுற ஆத்தோடோ சேர்ந்தோடுவம். வாழ்ற கொஞ்ச நாள வாழ்ந்திட்டுப் போயிடுவம் எண்டு நினைக்கிறன். அதுக்கு தடைபோடுறதே உங்கட வேலையா இருக்குது. நிச்சயமா நான் உங்கட கற்பனைக் கௌரவத்திற்காய் என்ர வாழ்பனுவத்தை விட்டுக்குடுக்கப் போறேல்ல. உங்களுக்கு அதைப் பார்க்கச் சகிக்கேல்லை எண்டா நீங்கள் போய் சிறீலங்காவில இருங்க. இனி பென்சன் வரும்தானே? சுகமான வாழ்க்கையாப் போகும்.’

‘பாரடி கமலம்... பெத்து வளத்து ஆளாக்கிவிட, இப்ப எங்களப் போய் சிலோன்ல இருக்கச் சொல்லுறாள். பாச பந்தம் இல்லா சுயநலம் இப்பிடித்தான் இருக்கும். எங்களுக்குப் பென்சன் மட்டுமில்ல சொத்தும் இருக்குது. நீ அன்னக் காவடியாய் அலைய வேண்டி வரும். ஓ சொல்லிப்போட்டன்.’ என்று சண்முகம் குமுறினான்.

‘நான் அன்னக் காவடியா அலைய வேண்டியது இல்லை. என்ர படிப்புக்கு ஏற்ப வேலை எனக்கு எப்பவும் இருக்கும். நீங்கள் திரும்பத் திரும்ப சுயநலம் எண்டு சொல்லாதேங்கோ. இது சுயநலம் இல்லை. என்னுடைய சொந்த வாழ்க்கை. நான் எப்பிடி வாழவேணும் எண்டதை நான் மட்டும்தான் முடிவு செய்வன். அதுக்க யாரும் தலை நீட்ட இடம் கொடுக்கமாட்டன். அப்பாவாய் இருந்தாலும் சரி. திறாங்கா இருந்தாலும் சரி.’

‘அது எங்களுக்குத் தெரிஞ்ச விசயம்தானே? இப்ப அப்பிடித்தானே செய்யிறாய். உந்த ஆட்டம் கொஞ்ச நாளைக்குத்தான். உந்த ஆட்டம் முடிய எங்களிட்ட நீ வருவாய்.’ என்றான் சண்முகம்.
அதுவரையும் பொறுமையாக இருந்த கமலம் மீண்டும் பேசினாள்.

‘அது சரி இப்ப என்னத்துக்கு வந்து உந்தக் கதை. நீ வந்தா அறைக்கு ஓடிப் போவா... இல்லாட்டிச் சாப்பிடுவா? எங்களோட கதைக்க உனக்கு நேரம் இருக்காது. இண்டைக்கு என்ன நடந்தது?’

‘நானே கதைச்சனான்? நீங்கள்தான் திறாங் ஏன் கோவிச்சுக் கொண்டு போறான் எண்டு கேட்டு துளைச்சீங்கள். பிறகு நான் உங்களோட வந்து கதைச்சது எண்டு இப்ப கதை விடுறியள்.’

‘பார் எப்பிடி இருந்தவள் இவள்? இண்டைக்கு அறளை பேந்த கிழவியாட்டம் கதைக்கத் தொடங்கீட்டாள்.’ ஆதங்கப்பட்ட சண்முகம் சோர்ந்து போனான்.

‘அதுக்கு நானே காரணம். உங்கட வாழ்க்கை... அது உங்கட முடிவைப் பொறுத்தது.’

‘சரி என்ன விடுங்கோ... இப்ப அவனேன் கோவிச்சுக் கொண்டு போறான்?’ என்றாள் கமலம் மீண்டும்.

‘அது எங்கட சொந்த விசயம் அம்மா.’

‘ம்...’

‘எண்டாலும் சொல்லுறன். உங்களுக்கும் இது தெரியத்தான் வேணும்.’

‘என்னது?’

‘நான் விக்விறதர் நிகழ்சியில சேரப் போறன்.’
கமலம் திகைத்துப் போனாள். என்ன கதைப்பது என்பது தெரியாது நாப் பிரளாது அமைதியாக இருந்தாள். சண்முகத்தைப் பார்க்கும் துணிவு அவளுக்கு இருக்கவில்லை.

‘இந்தா பிள்ளை! உன்ர சுதந்திரத்துக்கும் அளவு இருக்குது. இப்பிடிச் சொன்னா உன்னைப் பார்த்து ஊரே காறித் துப்பும். அதுதான் அவன் அப்பிடி கோவிச்சுக் கொண்டு ஓடினவனே? சும்மா கதைக்குக்கூட இப்பிடி சொல்லித் திரியாத. சனம் ஒரு மாதிரியாக் கதைக்கும். ஒரு மாதிரியாப் பாக்கும். நான் எப்பிடி இருந்தனான் எண்டு உனக்குத் தெரியும்தானே? என்னத் தயவுசெய்து சித்திரவதை செய்யாத பிள்ளை.’ என்றாள் கமலம்.

‘நான் ஒண்டும் உங்களைச் சித்திரவதை செய்யேல்ல. நீங்கள் அப்பிடி நினைச்சா நான் அதுக்கு ஒண்டும் செய்ய முடியாது. நான் இதை ஒண்டும் விளையாட்டுக்குச் சொல்லேல்ல. சனம் ஆயிரம் ஆயிரமாய் அந்தப் புறோக்கிறாமில பங்கு பற்றினவையச் சுத்தித் திரியுதுகளோ இல்லாட்டி ஒரு மாதிரிக் கதைக்குதுகளோ? நீங்கள் ரீவியப் பார்த்தாத்தானே? எனக்கு யாரைப் பற்றியும் கவலை இல்லை. எனக்குப்பிடிச்சிருக்கு… நான் அந்த நிகழ்ச்சியில சேரப்போறன். அவ்வளவுதான்.’ என்றாள் தேனுகா.

‘பிள்ளை இது வாழ்க்கை… சும்மா விளையாடக் கூடாது. எங்களில கோவம் இருந்தா எங்களுக்கு அடி போடுகிலியும் அடி போடு. இப்பிடி எல்லாம் செய்து எங்கட மானத்தை கப்பலேத்தாத. அப்பிடிச் செய்தா இங்க மாத்திரம் இல்ல சிலோன்ல இருக்கிறவைக்கும் அது அவமானமாய் இருக்கும். தயவு செய்து எங்கட சொல்லக் கேளம்மா. நீ தானே எங்கட உயிர். உனக்காகத்தானே நாங்கள் இப்பிடி எல்லாம் கஸ்ரப்பட்டம். உன்ர நன்மைக்காகத்தானே நாங்கள் இதையெல்லாம் சொல்லுறம். தயவு செய்து உந்த எண்ணத்தை மட்டும் கைவிட்டிடு தேனுகா.’ கமலம் மன்றாடும் தொனியில் கேட்டாள்.

‘என்ர நன்மைக்காக இதை நீங்கள் சொல்லேல்ல. உங்கட கௌரவம் கெட்டுப் போகாமல் இருக்க இப்ப கதைக்கிறியள். என்னைவிடச் சங்கீதம் ஒரு காலத்தில பெரிசாய் இருந்திச்சுது. இப்ப கௌரவம் பெரிசா இருக்குது. எப்பவும் நான் இரண்டாம் பட்சம்தான். இப்ப எனக்கு உங்களைவிட என்னுடைய புகழ்தான் முக்கியம். மற்றது எல்லாம் இப்ப எனக்கு இரண்டாம் பட்சம். விளங்குதா உங்களுக்கு?’ என்றாள் தேனுகா.

அந்த வார்த்தைகள் கமலத்தின் இதயத்தை அறுத்தன. அவள் கண்கள் கண்ணாடி முத்துக்களாய் கண்ணீரை இடையறாது உகுத்தன. அவள் வார்த்தைகள் இன்றி வேதனையில் துடித்தாள். சண்முகம் கோபத்தை கட்டுப்படுத்த முடியாது துடித்தான். கோபம் அவன் நிதானக்கண்களை மூடின. உணர்வும் இரத்தமும் கரை கடந்த அலைகளா வீரிட்டுக் கொப்பளித்தது. அறிவு மயங்கி அங்கங்கள் பரபரத்தன. தலையெல்லாம் வியர்த்தது. பொறுமை என்னும் சங்கிலியால் பிணைத்து வைத்திருந்த கட்டுப்பாடு அறுந்து போனதாக கோபம் உடலில் ஏறி உந்தித் தள்ளியது. கோபம் மதுவை விஞ்சும் வெறி தரும். அறிவை, பொறுமையை, இரக்கத்தை, நற்பண்பை, மொழியின் நளினத்தைத் தொலைத்து தன் வன்மம் தீர்த்துக் கொள்ள அது துடிக்கும். மனிதனாய் உருவம் இருக்க மனதாலும் உடலாலும் மிருகமாய் மாறவைக்கும். அந்தச் சத்திராதி சண்முகத்தைப் பிடித்து ஆட்டியது. சண்முகம் எழுந்தான். அதைப் பார்த்த கமலத்திற்கு இருந்த நிம்மதியும் இல்லாது போயிற்று. கமலம் விரைவாக எழுந்தாள். பாய்ந்து சண்முகத்தின் இருக்கைக்கு அருகே சென்றாள்.

‘என்னத்துக்கு இப்ப எழும்பிறியள்?’ என்று கேட்டாள். சண்முகம் வெறி கொண்ட பேயாக அவளை வெறித்தான். பின்பு ஒரு பெருமூச்சு விட்ட வண்ணம் சோபாவில் சாய்ந்தான்.

‘இப்பிடி எல்லாம் வெருட்டினியள் எண்டா நான் இந்த வீட்டுக்கே வராமல் விட்டிடுவன். இது கடைசி முறையாக இருக்கட்டும்.’ என்றாள் தேனுகா எதற்கும் தான் அஞ்சப் போவதில்லை என்கின்ற தொனியில்.

அதைத் தொடர்ந்து தேனுகா கோபமாக வெளியே சென்றாள். குழந்தையாகப் பிறந்த தென்றல் இன்று புயலாக வெளியே சென்ற பின் ஏற்பட்ட அமைதியில்… வார்த்தை இழந்த அந்தத் தம்பதிகள்.

தேனுகா மீண்டும் வீட்டிற்குத் திரும்பி வரும் போது சூரியன் ஏதோ ஒரு கரையில் நின்று ஆகாயத்திற்கு வெளிச்சம் பாய்ச்சினான். வீடு பனிக் காலத்து இருட்டைப் போல ஒழியிளந்து கிடந்தது. அப்பா அம்மா இருவரும் சோபாவில் இருந்த வண்ணமே தூங்கிப் போனார்கள் என்பதை அவள் கண்டாள். இப்படி அடிக்கடி செய்பவர்கள் தானே என்கிற எண்ணத்தோடு சமையல் அறைக்குள் சென்று என்ன சாப்பாடு இருக்கிறது எனத் தேனுகா பார்த்தாள். எதுவும் சமைத்து இருக்கவில்லை. அவளுக்குச் சற்று எரிச்சல் வந்தது. அவள் பாணை எடுத்து அதற்கு ஜாம் பூசிச் சாப்பிட்டாள். பால் குடித்தாள். தனக்கு மட்டும் தேநீர் தயாரித்தாள். அதை எடுத்துக்கொண்டு மேலே

தனது அறைக்குச் சென்றாள். மேலே செல்லும் போது அப்பா அம்மா அதிக நேரமாய் அழுது இருப்பார்களோ என்கின்ற எண்ணம் அவளது மனச் சாட்சியை ஏளனம் செய்தது. உடனேயே அந்த எண்ணத்தை மாற்றினாள்.'நானா அழச் சொன்னேன்?' என்கின்ற வாதம் அவள் மனதுள் நீதவானாக எழுந்தது.

அடுத்த நாள் தேனுகா வேலைக்குச் சென்றாள். அங்கு தனக்கு விடுப்பு வேண்டும் என்று விண்ணப்பித்த பின்பு பசியோடு வீட்டிற்குத் திரும்பி வந்தாள். கோலில் அப்பா அம்மாவைக் காணவில்லை. சமையல் அறைக்குச் சென்று ஏதாவது சாப்பாடு சமைத்து இருக்கிறதா என்று பார்த்தாள். அவளுக்கு ஏமாற்றம் பதிலாகியது. என்ன பிரச்சனை நடந்தாலும் சாப்பாட்டில் இதுவரை அம்மா குறை வைத்தது இல்லை என்பது தேனுகாவுக்குத் தெரியும். இப்போது திடீரெனச் சமையல் இல்லை, சாப்பாடு இல்லை என்பது சங்கடத்தையும், கோபத்தையும் தந்தது. போய் அம்மாவை ஏன் சமைக்கவில்லை என்று கேட்க வேண்டுமென மேலே சென்றாள். அப்பாவும் அம்மாவும் தங்கள் அறைக்குள் படுத்திருப்பது புரிய மெதுவாகக் கீழே வந்தாள்.

நாட்கள் செல்லச் செல்ல வீட்டில் சாப்பாடு இருக்கும் என்கின்ற நம்பிக்கையோடு தேனுகா வீட்டிற்கு வருவதில்லை. ஒன்றில் வெளியே சாப்பிட்ட பின்பு வருவாள். அல்லது பொதி செய்யப்பட்ட சாப்பாடு வாங்கி வந்து சூடாக்கிச் சாப்பிடுவாள். சில வேளைகளில் பீச்சா அல்லது நுடில்ஸ் செய்து சாப்பிடுவாள். அப்பா, அம்மா சாப்பிடுகிறார்களா இல்லையா என்பதான கவலை அவள் மனதை மெல்ல அரிக்கத் தொடங்கினாலும் அதையே ஒரு ஆயுதமாக அவர்கள் பாவிப்பார்கள் என்பது அவர்கள் மேல் அவளுக்கு எரிச்சலை உண்டு பண்ணியது. அந்த எரிச்சலில் அவர்கள் சாப்பிடும் பொழுது சாப்பிடட்டும் என்பதாகக் கண்டும் காணாமலும் இருந்து வந்தாள்.

காலமும் பசியும் மீதமிருந்த இளமையையும் அரித்துத் தின்றன.

தொலைபேசி துண்டிக்கப்பட்டு... வீட்டிற்கு வருபவர்களுக்குக் கதவு திறக்கப்படாது... தொடர்பு அறுந்து... கமலத்தின் சங்கீத இராச்சியம் தரைமட்டமாகியது. அவள் உடற் பசியாலும், மனது ஞானப் பசியாலும் வாட... அதைத் தீர்க்க முடியாது, தீர்த்துக் கொள்ள விரும்பாது, புத்திர சோகத்தில், தசரதன் போல் வாடாது, இக்கணமே மடிந்து போனால் என்ன என்கின்ற ஏக்கத்தில் அவள் பேதலித்தாள்.
சண்முகம் கடையை விலை பேசி விற்றான். மருத்துவரிடம் சென்று மனநிலை சரியில்லை என்பதற்கான அத்தாட்சிப் பத்திரம் வாங்கினான்.

இசைக்காக மீண்டும் மீண்டும் வந்து வாசலில் நின்றவர்களும் கமலத்தால் திருப்பி அனுப்பப்பட்டார்கள்.

கமலத்தின் பகுதி நேர வேலையும் வீடும் எனத் தங்களைச் சுற்றிச் சிறை ஒன்றை அமைத்த தம்பதிகளின் சுய தண்டனை தொடர்ந்தது.

# 10

மனித வாழ்க்கை ஒரு முடிவில்லாப் போராட்டம். தனது விருப்பிற்குப் படியாத அத்தனை நிகழ்வும் அவனை எதிர்த்துப் போராடும். மூர்க்கமாக மல்லுக்கட்டும். காலை தொடங்கி மாலை வரையும் மனிதன் வாழ்வதற்காய், சாவில் இருந்து தப்பித்துக் கொள்வதற்காய், செல்வம் சேர்ப்பதற்காய், சிறப்புடையோனாய் உயர்வதற்காய், கல்வி கற்பதற்காய், கலை ஞானம் பெறுவதற்காய், தேடலில் இறங்கியதால், தேவையை நிறைவேற்றிக் கொள்வதற்காய், பெண்ணை வெல்வதற்காய், மண்ணை வெல்வதற்காய், பகைவனை வெல்வதற்காய் என்பதாக எண்ணில் அடங்காப் போராட்டத்தின் சுழலில் அகப்பட்ட இயற்கை வயப்பட்ட மிருகமாவான். ஒவ்வொரு கணமும் போராட்டமான வாழ்வில் அவனது மனம் ஒரு கணமும் ஓய்ந்திருப்பது இல்லை. அந்த ஓயாத மனது உறங்காது போராடும். புது வழி கண்டு பவனியை ஆளும் கற்பனை உலகில் எப்போதும் சஞ்சரிக்கும்.

வாழ்க்கையின் ஒவ்வொரு அசைவுகளோடும் போராடிக் கொள்ள வேண்டிய மனிதனுக்குச் சமுதாயமும் அதன் பார்வையும் நித்தமும் சவால் விடுகிறது. அந்தச் சவால்களை முறியடித்து முன்னேறுபவர்கள் சிலரே. சமுதாயத்தின்

சவால்களிடம் தோற்றுத் தங்களுக்குத் தாங்களே சிறை அமைப்பவர்கள் பலர். தேனுகாவால் அம்மா அப்பாவை அப்படித்தான் பார்க்க முடிந்தது. சமுதாயத்திற்குப் பயந்து, வீட்டையே சிறையாக்கித் தங்களைத் தொலைக்க முயற்சிக்கும் கோளைகளாக அவர்கள் தோன்றினார்கள். இந்தக் கோளைகளுக்காக தனது இலட்சியத்தை விட்டுக்கொடுக்கும் தியாகம் என்னும் போலி யாகத்தை அவள் நம்பவில்லை. போராட்டங்களுக்குள் குதித்துப் போராடி வாழ்வதுதான் வாழ்வை வாழ்ந்ததற்கான அர்த்தம் தருமென அவள் நம்பினாள். சமுதாயத்திற்காக முக்காடு போட்டுக் கொள்ளும் சந்தர்ப்ப வாதத்தை விடத் தனது ஆசைகளை நிறைவேற்றும் சுய நலப் போராட்டம் உத்தமமானது என்பதில் அவள் உறுதியானாள்.

எதிர்ப்பு மலையாக இடை மறிக்கும். தனி மனிதனின் சுதந்திரத்தைப் பறிக்கும் கட்டுப்பாடுகள் பண்பாடாய் மதில் அமைக்கும். அதை மீறியவன் சமுதாயத்தின் எதிரியாக நோக்கப்படுவான். அவன் தமிழர்களின் துரோகியாவான். எது உனக்குப் பிடிக்கிறது என்பது முக்கியம் இல்லை. எதில் நீ சந்தோசிக்கிறாய் என்பதும் பொருட்டல்ல. சமுதாயம் கீறிய கோட்டைத் தாண்டாத வரைக்கும் உன்னை மதிப்பதாக அவர்கள் காட்டிக் கொள்வார்கள். அதைத் தாண்டிவிட்டால் நீ அவர்களின் கொள்கையை களங்கப்படுத்திய கோடாலிக்காம்பாய் பார்க்கப்படுவாய். பார்க்கட்டும். பார்த்தால் என்ன? வக்கிரமாய் பார்ப்பவனுக்காக என் சுதந்திரத்தை அடைவு வைத்துவிட்டு நான் முகத்திரை போட்டுக் கொள்ள முடியுமா? வக்கிரமாய் பார்ப்பது அநாகரிகம் என்பதை அவன் புரிய வேண்டும். சமூக வக்கிரத்திற்காய் நான் முகமூடி போட்டால் அது எனது வாழ்க்கையை நான் தொலைத்தது போல் ஆகிவிடும். நான் முக்காடு போடப் போவதில்லை. யாருக்காகவும் எனது உரிமையை விட்டுக் கொடுக்கப் போவதில்லை. என்பதாக தேனுகா ஒரு முடிவுக்கு வந்தாள்.

தேனுகா தனது உடுப்புகள் அடங்கிய பெட்டியோடு கீழே இறங்கினாள். கமலம் இடியே விழுந்ததாக ஒடுங்கிப் போய் சோபாவில் இருந்து விழித்தாள். அவள் கைகள் நடுங்கின. அதரங்கள் துடித்தன. இதயம் படபடவெனத் துள்ளியது. பேச்சு வராது கண்கள் சிவந்து கனன்றன. கண்ணீர் நிறைந்து வழிந்தது. சண்முகம் பசி கொண்ட ஓநாயாகத் தேனுகாவை விழித்தான். தேனுகா அதைப் பொருட்படுத்தாதவள் போலக் கீழே இறங்கினாள். சண்முகம் துள்ளி எழுந்தான். அவனுக்குக் கை கால் ஈறாக அனைத்து அங்கங்களும் கோபத்தில் நடுங்கின. அவன் மூச்சைப் பெரிது பெரிதாக அவதியாக இழுத்து விட்டான். அவன் அவதியாக மூச்சு இழுத்து விடும் சத்தம் தேனுகாவுக்கும் கேட்டது. அவனது கோபம் கட்டுக்கடங்காது தலைவிரித்து ஆடியது. அவன் மூர்க்கமாகத் தேனுகாவைப் பார்த்த வண்ணம் அவளை நெருங்கினான்.

'தேனுகா! மருந்துக்குப் பெய் எண்டா மண்ணுக்குப் பெய்யிறேல்ல?' என்றான் சண்முகம்.

'என்ன?' அவள் புரியாது விழித்தாள்.

'இப்ப எங்க வெளிக்கிடுகிறாய்?'

'அதுதானே சொன்னான்... புறோக்கிறாமுக்குப் போக நேரமாகுது.'

'எல்லாத்துக்கும் ஒரு அளவு இருக்குது தேனுகா.'

'சும்மா வெருட்டாதேங்க அப்பா. என் வாழ்க்கை... என் சுதந்திரம்... யாருக்கும் அதில தலையிட உரிமையில்லை. நான் யாருக்கும் அந்த உரிமையைக் கொடுக்கமாட்டன். அப்பா! நோர்வேயில இருந்தா நூர்மன் போல இருக்கோணும். இல்லாட்டிச் சிறிலங்காவுக்குப் போயிடோணும். இரண்டும் கெட்டானாக மற்றவையத் தொந்தரவு செய்யக் கூடாது.' என்றாள் தேனுகா.

'தேனுகா... மானம் மரியாதை எல்லாம் போயிடும். தயவு செய்து அப்பா சொல்லுறதைக் கேள்.'

'மானம் மரியாதை எண்டு தமிழாக்கள் விடுகிற புல்டாவை நீங்களும் விடாதேங்க அப்பா. உந்த றாமாவை விட்டிட்டுப் பேசாமல் இருந்தியள் எண்டா உங்களுக்கும் நிம்மதியாய் இருக்கும், எனக்கும் நிம்மதியாய் இருக்கும்.' என்றாள் தேனுகா.

'அப்பிடி இல்லை. மானம் எண்டுறது எங்களுக்கு உயிர் மாதிரி. நீ இண்டைக்கு என்னத் தாண்டி வெளிய போக முடியாது. அது நான் உயிரோட இருக்கும் வரைக்கும் நடக்காது.' என்றான் சண்முகம் உறுதியோடு.

'அப்பிடியா? ஒரு போன் பண்ணினா பொலிசோட கமராக்காரனும் வருவான். அது வேணுமே அப்பா? உங்கட மானம் ரீவியில பறக்கும். இந்த நாடே உங்களைக் காட்டானாய் பார்க்கும்.' என்றாள் தேனுகா.

இப்படித் தேனுகா சொல்வாள் என்று சண்முகம் எதிர்பார்க்கவில்லை. அவன் பித்துப் பிடித்தவன் உலகை மறந்து நிற்பது போல் நின்றான்.

'அடி பெத்து வளத்ததுக்கு நீ செய்யிற கைமாறேடி இது? நீ இப்ப போனா நாங்கள் நஞ்சக் குடிச்சுச் சாவம். வந்து வாய்க்கரிசி போடடி.' என்று கமலம் பொறுமை இழந்து கத்தினாள்.

'சும்மா வெருட்டாத அம்மா. உதையே எடுத்ததுக்கு எல்லாம் சொல்லு.'

'சரி நான் சும்மா சொல்லுறன். எல்லாம் எங்கடை தலை விதி. ஐயோ நானும் பெத்து வளத்து...' கமலம் வாய் விட்டுப் பெரிதாக அழுதாள்.
சண்முகம் தேனுகாவை நோக்கி வந்தான். அதைப் பார்த்த தேனுகா கோபமாக அவனைப் பார்த்து முறைத்ததோடு அலைபேசியை அவசரமாக எடுத்தாள்.

'நீங்க அவளை விட்டிட்டு இஞ்சால வாங்க. இருக்கிற மானமும் போகப் போகுது.' என்று கமலம் அவனைத் தடுத்தாள்.

'எல்லாம் உன்னாலையடி. நீயும் உன்ர சங்கீதமும். பார் இப்ப என்னவா ஆடுது எண்டு.' என்று சண்முகம் அவளில் பாய்ந்தான்.

'நான் செத்தா எல்லாருக்கும் நிம்மதி.' என்றாள் கமலம் இயலாமையில்.

சண்முகம் சோபாவில் இருந்தான். முகத்தை முழங்காலுக்குள் புகுத்தினான். உலகமே தன்னைச்சுற்றி நின்று கேலி செய்வதாக அவனுக்குத் தோன்றியது. இதில் இருந்து எப்படித் தப்புவது என்பது அவனுக்குப் புரியவில்லை. வீடு ஒரு சிறையானது. வாழ்க்கை அதைவிடப் பெரிய சிறையானது. உலகம் ஓடி ஒளிய முடியாத சிறையானது. இந்தச் சிறைகளில் இருந்து விடுதலை எப்படிப் பெறுவது? அவன் மனது வெளிச்சத்தைக்காண இருண்ட குகைக்குள் அலைந்தது. இருண்ட குகை முடிவிலியாக நீண்டு கொண்டே சென்றது.

மனிதனும் ஒரு மிருகம். உண்டு, உறங்கி, புணர்ந்து, பெருகி, மடிந்து மண்ணோடு உக்கிப் போகும் மிருகத்தில் ஒன்று. இந்த மிருகங்களைக் கூட்டில் அடைத்து, உண்டு, உறங்கி, புணர்ந்து வாழ்வதான அந்தரங்கங்களைப் படம் பிடித்துத் தொலைக்காட்சியிலும் கணினியிலும் வயது வித்தியாசம் இன்றி அன்னியர் இரசிப்பதற்கு, மற்றையவர்களின் அந்தரங்கத்தில் பொழுது போக்குவதற்கு, உருவாக்கப்பட்ட நிகழ்ச்சி விக்பிறதர். அதில் தேனுகா சேரப்போகிறாள் என்பது அவமானமாக, அன்னியமாக, அசிங்கமாகத் தோன்றியது சண்முகத்திற்கு. இருந்தும் என்ன செய்வது என்பது மட்டும் புரியாது அவன் கதிகலங்கினான். அப்பா அம்மாவைப் பார்த்தும் பாராதவளாய் தனது கனக்கும் சூட்கேஸ் பெட்டியை இழுத்த வண்ணம் தேனுகா வெளியே காத்து நின்ற வாடகைக் காரிக்குச் சென்றாள். கனத்த இதயங்களோடு அசைய மறந்த சண்முகமும் கமலமும் உயிருள்ள சிலைகளாகப் போகும் மகளைப் பார்த்து, போகாத உயிரைச் சபித்து வருந்தினர்.

*

விக்பிறதர் முதல் நாள் நிகழ்ச்சியில் அறிமுகங்கள் நடந்தன. திறாங் என்ன நடக்கிறது என்கின்ற ஆவலோடு அதைப் பார்த்தான். தேனுகாவை அலுவலகத்தில் வைத்து எடுத்த அறிமுகப் படமே அதில் காட்டப்பட்டது. நிச்சயம் அவளது பெற்றோர்கள் வீட்டில் எடுப்பதற்குச் சம்மதிக்க மாட்டார்கள் என்பதால்தான் அவள் அப்படிச் செய்து இருக்கிறாள் என்பது அவனுக்கு நன்கு புரிந்தது. தன்னைப் பற்றி என்ன சொல்கிறாள் என்பதைப் பார்ப்பதற்கு திறாங் மிகவும் ஆவலோடு இருந்தான். தேனுகா அதில் தனக்கு ஒரு காதலன் இருக்கிறான் என்பதைச் சொல்லாது விட்டிருந்தது அவனுக்குப் பெரும் ஏமாற்றமாய், அவமானமாய் அவன் தன்மானத்தைக் கூறுபோட்டது. இவளைக் கொலை செய்ய வேண்டும் என்கின்ற எண்ணம் அவன் மனம் எல்லாம் விஷமாகப் பரவியது.

சண்முகத்திற்கு எந்த அலைவரிசையில் பிக்பிறதர் நிகழ்ச்சி போகிறது என்பது தெரிந்தாலும் அந்த அலைவரிசைக்கு மாற்றவோ அந்த நிகழ்ச்சியைப் பார்க்கவோ மனம் இல்லாது அப்படியே சோபாவில் அசையாது இருந்தான். கமலம் தலையில் கைவைத்த வண்ணம் தொடர்ந்தும் அழுதாள்.

பல மனங்களின் வேதனையைப் பொருட்படுத்தாது தேனுகா புது வித அனுபவத்தில் மூள்கினாள். அவள் மனதில் என் வாழ்வை நான் வாழ்கிறேன் என்கின்ற பிடிவாதமான சுய நலம் முழுமையாக ஆக்கிரமித்து இருந்தது. அது சுய நலம் அல்ல தனது உரிமை என்பது அவள் தீர்க்கமான முடிவாகியது.

# 11

விக்பிறதர் வீட்டில் அந்தரங்கம் பறிக்கப்பட்ட அரை நிர்வாண மனிதர்களின் செயல்கள், பேச்சுக்கள், அன்னியருக்குக் கேளிக்கை விருந்தாகியது. எங்கும் கமராக்கள் கண்களைத் திறந்தபடி ஆவலாய் அந்தரங்கம் பகிர்வதற்காய் காவல் நின்றன. குளியலறை, மலசலகூடம் ஈறாக அதன் அத்து மீறிய பிரவேசம். அதைவிட எங்கும் ஒலிவாங்கிகள் பொருத்தப்பட்டு என்ன கதைத்தாலும் எல்லோருக்கும் விருந்தாகும் ஏற்பாடு. இரவில் விளக்குகள் அணைத்தாலும் இருட்டில் படம் எடுக்கும் திறன் கொண்ட கமராக்களின் தொழில்நுட்பம். வேவு பார்த்தலா? அந்தரங்க அவஸ்தைகளைப் படம்பிடிப்பதா? ஒரு மனிதனின் அந்தரங்கம் மற்றைய மனிதருக்கு எப்படிச் சுவாரசியமாகிறது? நவீன உலகில் எல்லாம் மனிதருக்குச் சுவாரசியம் ஆகிறது. அப்படி சுவாரசியம் ஆனதால்தான் இந்த நிகழ்ச்சியே பிரபலமாகியது. அந்தப் பிரபலத்தில் அது பல நாடுகளுக்குப் பரவியது. அதை நோர்வேயும் வரித்துக் கொண்டது.

முதல் நாள் நிகழ்ச்சி தொடங்கியவுடன் வீட்டைப் பற்றிய அறிமுகத்தை அறிவிப்பாளர் விளாசித் தள்ளினார். எத்தனை கமராக்கள், எத்தனை ஒலி வாங்கிகள் என்பதோடு வீட்டின் சில பகுதிகளும் காட்டப்பட்டன. அதில் உள்ள சொகுசு வசதிகள்... அதற்காக அவர்கள் போட்டியிட வேண்டிய விதிமுறைகள் பற்றியும் மேலோட்டமான ஒரு அறிமுகம் நிகழ்ந்தது.

இந்தப் போட்டியில் யார் கடைசியாக அந்த வீட்டில் இருக்கிறார்களோ அவர்களுக்கு ஒரு மில்லியன் குரோணர்கள் கொடுக்கப்படும். யார் கடைசியாக இருப்பது? மற்றவர்களை எப்படி வெளியேற்றுவது? சுருங்கச் சொன்னால் எப்படி மற்றவரை வீழ்த்தக் குழி பறிப்பது... அதுதான் போட்டியாளர்களின் சிந்தனையும் செயலுமாக இருக்கும். வில்லனாய் வாழ்ந்து கதாநாயகனாக வெளியே வரும் படம் இது. நவீன உலகின் இணைப்புக்களில் ஆர்ப்பரிக்கும் இரசிகர் கூட்டம் அதற்கு. அறிவிப்பாளரின் அறிமுகத்தைத் தொடர்ந்து போட்டியாளர்கள் ஒவ்வொருவரும் தங்களைப் பற்றி அறிமுகம் செய்தார்கள். அதில் சிலரின் தாய் தந்தையரை, மனைவியை, பிள்ளைகளை, சகோதரர்களைக் காட்டினார்கள். தேனுகாவின் முறையும் அதில் வந்து போனது. அவள் தன்னைப் பற்றி சுருக்கமாகக் கூறியிருந்தாள். அப்பா அம்மாவைப் பற்றியோ அல்லது காதலனைப் பற்றியோ அவள் வாய் திறக்கவில்லை. இந்த நிகழ்ச்சியைப் பார்த்த திறாங்கிற்கு அவளைக் கொல்ல வேண்டும் என்கின்ற ஆத்திரம் மீண்டும் பொங்கியது. அவன் கைகளை ஓங்கி மேசையில் குத்தித் தனது ஆத்திரத்திற்கு வடிகால் கண்டான். காலம் மனிதருக்குச் சோதனை தருவதற்காய் காத்திருக்கிறது என்று சமாதானப்பட்டான்.

அந்த அறிமுகத்திற்குப் பின்பு போட்டியாளர்கள் ஒவ்வொருவராக உள்ளே பிரவேசித்தனர். அவர்கள் ஆர்வமாக ஆளையாள் பார்த்தார்கள். அறிமுகமாகினர். பின்பு இரண்டு ஆணையும் இரண்டு பெண்ணையும் அவர்கள் வாழும் அறைக்குள் பிரவேசிக்க அனுமதித்து, அவர்களுக்கான படுக்கையைத் தெரிவு செய்து கொள்ளும்படி அறிவிப்பாளர் கூறினார். அவர்களும் ஆர்வமாகச் சென்று தமது படுக்கையைத் தெரிவு செய்தார்கள். அதைப் போலவே மற்றைய குழுவும் தெரிவு செய்தது.

உள்ளே சென்று படுக்கையைத் தெரிவு செய்த பின்பு கோலுக்குள் வந்தார்கள். ஒருவரோடு ஒருவர் கதைத்தபடி அவர்களுக்கு வைக்கப்பட்டிருந்த சம்பெயினை திறந்து பருகத் தொடங்கினார்கள். மேற்கொண்டு தங்களைப் பற்றிய விரிவான அறிமுகம் செய்தார்கள். திறாங் எதிர்பார்த்தது முற்றிலும் சரியாகிற்று. தேனுகா முழுப் பூசனிக்காயைச் சோற்றில் புதைத்தாள். அவன் மனது முதலில் புகைந்தது. பின்பு எரிமலையாக வெடித்துச் சிதறியது. கொலை செய்ய வேண்டும் என்கின்ற வெறி மெல்ல மெல்ல உடலின் ஒவ்வொரு கலத்திலும் கருக்கட்டியது. அவன் மீண்டும் ஆத்திரத்தோடு ஓங்கி மேசையில் குற்றினான். இந்த நிகழ்ச்சிகளைப் பார்க்காமல் மகள் இப்படிப் போய்விட்டாளே என்கின்ற கவலையில் மட்டும் சண்முகமும், கமலமும் திக்குப்பிரமை பிடித்தது போல இருந்தனர். அவர்கள் உலகத்திற்கு நீக்க முடியாத திரையிட்டனர். உலகம் அவர்களை வம்பு பேச வேட்கையோடு தேடியது.

அன்னிய ஆணிற்கும் பெண்ணிற்கும் இருக்கும் எல்லைகள் கரைந்து, ஆதிகால மனிதராய் கமேராக்களுக்குள் காமத்திற்குப் பலியாவது அவமானமா? அல்லது அசிங்கமா? என்பதைப் பலராலும் சிந்திக்க முடியாத நிலையிலேயே அந்த வீட்டில் அன்னியராய் வந்து, அறிமுகமாகி, அந்தரங்கம் பகிரும் அளவிற்கு அவர்கள் அன்னியம் கரைந்து, காமத்தைச் சுகிக்கும் வேட்கையில், வெட்கம் மறந்து, பற்றிக்கொள்ளும் பஞ்சாக நெருப்போடு சோடி சேர்ந்து கொண்ட அவஸ்தையில் போட்டியாளர்கள், நாட்களை நகர்த்துவதற்கான நெளிவு சுளிவுகளை ஆராய்ந்தனர். சிலருக்கு வெற்றி. சிலருக்குத் தோல்வி என்பது உலகத்தின் நியதி ஆகும். சரண்சிங்கின் அப்பா அம்மா பஞ்சாபைப் பிறப்பிடமாகக் கொண்டவர்கள். சரண்சிங் ஒஸ்லோவில் பிறந்தான். அத்தால் அவன் நூர்மனைப் போலக் கொண்டை இல்லாது சிங்காக வளர்ந்தான். இல்லை அந்தச் சுதந்திரத்தைச் சிறுவனாக இருக்கும் போதே போராடிப் பெற்றுக் கொண்டான். அவன் பிறந்த காலம் தொடக்கம் வரித்துக் கொண்ட மார்க்கம் புரட்சி. இதுவும் அவனது புரட்சியில் ஒன்று.

சில நாட்களிலேயே விக்விறதர் வீட்டிற்குள் தேனுகாவோடு அவன் அந்தரங்கம் பகிர்ந்தான். பற்றிக் கொள்ளும் பஞ்சாக இயற்கையின் அவஸ்தையான காமத்தில் தவித்தான். அவனின் உள்மனதில் தானே இந்த வீட்டில் இருந்து கடைசியாக வெளியேறும் ஆளாக இருப்பதோடு பரிசுப் பணத்தையும் அள்ளிச் செல்லும் ஆளாகவும் இருக்க வேண்டும் என்று எண்ணினான். அவன் ஆவல் பூதமாய் அடிமனதில் பதுங்கிக் கிடந்தது. அவன் காமம் அதையும் மீறி அறிவை மயக்கியது. உடலை முறுக்கியது. அவன் தேனுகாவோடு பின்னிப் பிணைந்து சோடியாக எங்கும் அவளைப் பின்தொடர்ந்தான். தேனுகாவுக்கும் அந்த பின்தொடரல் பிடித்துக் கொண்டது. அவள் அப்பா, அம்மா, ஊர், உலகம், திறாங், யாவரையும் மறந்து அந்த மாய உலகத்தைச் சுவர்க்கமாக, நிரந்தரமாக, நினைத்துத் தன்னைச் சிங்கோடு இணைத்துப் பார்த்து, துன்பத்திற்கு முன்பான இன்பத்திற்குத் தயாராகினாள்.
அன்று மதியம் வீட்டிற்கு வெளியே உள்ள இருக்கையில் அமர்ந்திருக்கும் பொழுதுதான் சிங் அவளிடம் அதைக் கூறியிருந்தான். தனக்குத் தேனுகாவை நன்கு பிடித்துள்ளதாகவும், தன்னால் அவளில்லாது இருக்க முடியாது என்றும் கூறினான். அதற்குத் தேனுகா அப்படியா என்று கேட்டு நகைத்தாலும் அவளுக்கும் உள்மனதில் சிங்கை தவிர்க்க வேண்டும் என்கின்ற நினைப்பே இருந்தது இல்லை. அவன் அருகாமையை அவள் வேட்கையோடு விரும்பினாள். அதற்காக உள்மனதில் தவமியற்றினாள். திறாங்கை எண்ணும் பொழுது அவளுக்கு ஒருவித நடுக்கம் உண்டாகும். என்றாலும் பயத்தை காமம் வென்றது. கண்கள் நாணம் மறந்து சிங்கையே பார்த்தன. நாறல் மீனைப் பூனை பார்ப்பது போலப் பார்க்கப் போகின்ற மனிதர்களின் பயம் இயற்கையின் வீரியத்தில் மறந்து போயிற்று. அன்று மதியமும் அவளுக்கு அவனையே பார்த்தபடி இருக்க வேண்டும் போன்ற ஒருவித அவஸ்தையான உணர்வு. மதியச் சாப்பாடு முடிந்த பின்பு வெளியே இருவரும் போகும் போது சிங் தேனுகாவின் கையைத் தனது கையோடு கோர்த்தான். இருவரும் கையைக் கோர்த்த வண்ணம் அதிக நேரம் வெளியே நின்றார்கள். தேனுகாவுக்கு அவன் மேல் இருந்த ஆசையை அடக்க முடியவில்லை. அவள் திரும்பி அவனது கண்களைப் பார்த்தாள். அதைப் புரிந்து கொண்ட சிங் அவளை தன்னோடு அணைத்து முதல் முத்தம் கொடுத்தான்.

இந்த நிகழ்வு தொலைக்காட்சியில் பிரபலமாகியது. இணையத்தில் அதிக முறை அது பார்க்கப்பட்டது. அப்படிப் பார்த்தவர்கள் தேனுகாவிடமும் சிங்கிடமும் பல கேள்விகள் கேட்டார்கள். தமிழர்களுக்கு, இந்தியர்களுக்கு, பாகிஸ்தானியர்களுக்கு, இவர்கள் இருவரும் தெற்காசியக் கலாச்சாரத்தைக் காலில் போட்டு மிதிப்பதாகத் தோன்றியது. அதனால் எழுந்த குமுறல்கள், வெறுப்புகள், கொலை வெறிகள் அவர்களிடம் நிறைந்து கிடந்தன. அவர்கள் இந்த நாட்டுக் கலாச்சாரத்தை ஏற்று வாழ்வதாக ஒப்புக்குச் சொல்வார்கள். காலாகாலமாக அவர்கள் நினைவுகள் தாய்நாட்டைப் போலவே மாறாது இருக்கிறது. வேலைக்கான விட்டுக் கொடுப்பைத் தவிர கலாச்சாரத்தில் சரிவு வருவதை அவர்கள் விரும்புவதில்லை. அவர்களை இந்த நிகழ்வு கொதி கொள்ள வைத்தது.

ஞானிகளாற்கூட வெல்ல முடியாத காமம் என்னும் பிணி. அது போதனைகளுக்கு அடங்காது ஏமாற்றும் சண்டித்தனக் குதிரை. கட்டுப்பாடு என்னும் சங்கிலியால் அதைப் பிணைத்துவிட்டதாக நாங்கள் மண் குதிரையில் ஏறும் போது காமம் கட்டறுத்து இச்சை தீர்க்க எங்கோ ஓடிவிடும். உன்னை, என்னை எமது உணர்வை எல்லாம் ஏமாற்றிவிட்டு இயற்கையின் நியதியை, மனிதனுள் மறைந்து கிடக்கும் மிருகத்தின் தேவையை, இனவிருத்தியின் அவசியத்தை அது நிறைவேற்றிக் கொள்கிறது. இருந்தாலும் இதில் என்ன தப்பு? இன்றிருக்கும் மிருகமான மனிதன் நாளை இல்லாது போய்விடலாம். வந்த வேலையை முடிக்க வேண்டும் என்பது இயற்கை அவனுக்கு இட்ட மாற்ற முடியாத கட்டளை. இன்றிருப்பவன் நாளைக்கான சந்ததியை உருவாக்குவது இயற்கையின் இயல்பாகும். ஒவ்வொரு மனிதனின் மூச்சுக் காற்றிருக்கும் மட்டும் பெயர் சொல்லும் உலகம் அது நின்றதும் சவம்

என்று சில முழம் தள்ளி நின்று பார்க்கும். பெற்ற மகனும் புரண்டு படுத்தவளும் எட்டி நின்றே மூக்குறுஞ்சுவர். அனுபவித்தாலும் அடங்கிக் கிடந்தாலும் காற்றுப் போன பின்பு சவம் என்பது மாறுமா? கரைந்து போகும் நாளையும், மறைந்து போகும் இளமையையும் கண்டு கொள்ளாது வாழ்வைக் காலாவதியாக்குவது காற்றிருக்கும் பொழுதே சவமாக வாழ்வது போல் அல்லவா?. இன்று... இந்தக் கணங்கள்.. எம்மை விட்டுத் தொலைந்து போகும் கணங்கள்... இனி மீண்டும் வருமா? கால இயந்திரத்தில் ஏறிப் பயணம் செய்யும் காலம் இன்னும் வரவில்லை. இந்த உண்மை புரிந்த பொழுது எதற்காக நான் தயங்க வேண்டுமெனத் தேனுகா எண்ணினாள்.

காமத்தை கமேராக்கள் இமைப்படுத்தினாலும் ஆசையை, அது தரும் வேதனையைக் கொன்றுவிட முடியாது. வசை கேட்கும் யாகத்திற்கும், காமதாகம் தீர்ப்பதற்கும் தேனுகா மனதளவில் தயாராகினாள்.

அன்று படுக்கைக்குப் போகும் முதலே சிங் தேனுகாவை இழுத்து ஆழமாக முத்தம் கொடுத்தான். அவளின் பின்புறத்தில் தனது கைகளை இறுக்கமாகப் பரவவிட்டான். தடுக்கும் மனமின்றி விழிக்கும் கமராக்களை பார்த்து விழி பிதுங்கினாள் தேனுகா. பின்பு மயக்கத்தில் நடப்பது நடக்கட்டுமென அவனோடு அணைந்தாள்.

அன்றிரவு அரைகுறை ஆடையுடன் போர்வைக்கு கீழே படுத்திருந்த தேனுகாவைப் பார்த்து'நானும் வந்து படுக்கட்டுமா?" என்று சிங் கேட்டான். தேனுகா பேசவில்லை. சிங் வந்து கட்டிலில் இருந்தான். தேனுகாவின் வதனத்தைத் திருப்பி முத்தம் கொடுத்தான்.'வரட்டா?" என்று மீண்டும் கேட்டான். தேனுகா தன்னை இழந்தவளாய்'வாவேன்.' என்றாள். போர்வையைக் கிளப்பி இடம் கொடுத்தாள். அவளோடு சேர்ந்து படுத்துக் கொண்ட சிங் முதலில் முத்தத்தோடு தொடங்கினான். பின்பு தங்களை மறந்த காமத்தில் சத்தத்தோடு இயங்கிப் பலரது நித்திரையையும் கெடுத்தார்கள். கமராக்களுக்கும், காமத்தை விரும்பும் அன்னியருக்கும் அவர்கள் விருந்தானார்கள். காட்சித் தணிப்பில்லாத காமப் படத்தில் நேரடியக நடித்தனர்.

*

அன்று யாரோ சண்முகத்தைத் தொலை பேசியில் அழைத்து'உன்ர மகளின்ர ஆட்டத்தை இரவைக்குப் பார்.' என்றுவிட்டுத் தொலைபேசியைத் துண்டித்து விட்டான். சண்முகத்திற்கு அதில் இருந்து இரத்த அழுத்தத்தில் மண்டையோடு வெடித்துவிடும் என்பதான அவஸ்தை.

போனில் கதைத்த பின்பு உருவேறி நிற்கும் மனிசனைக் கமலம் பார்க்க மனம் இல்லாதவளாய் மெதுவாகச் சென்று படுத்தாள். சந்தோசமாய் இருந்த வாழ்வு சாவீடாய் மர்மங்களோடு மல்லுக் கட்டுவதை அவளால் தாங்க முடியவில்லை. தேனுகாவுக்காக இல்லாவிட்டாலும் இந்த மனுசனுக்காய் காலத்தை ஓட்ட வேண்டும் என்பது அவள் நினைவு. ஏதாவது சமைப்பதும், சிறிது நேரம் ஆறுதலாய் இருப்பதும், மீதி நேரத்தில் படுப்பதுமாய் அவள் தன் காலத்தைப் போக்கினாள். சுர வரிசையும், சுருதிப் பெட்டியும் நிரந்தரமாய் மரணித்து விட்டன. சண்முகம் என்ன நடந்தது என்கின்ற தலை வெடிப்போடு நிகழ்ச்சிக்காக முதன்முதல் காத்திருந்தான்.

நிகழ்ச்சி ஆரம்பமானது. அறிவிப்பாளரின் அந்த வார்த்தைகள், சொந்த மகளின் அசிங்கமான சத்தங்கள், இயக்கங்கள்... அவனால் அதற்கு மேல்த் தாங்க முடியவில்லை. பக்கத்தில் இருந்த பூச்சாடியை எடுத்து தொலைக்காட்சிமேல் எறிந்தான். அது புகைந்து எரிந்தது. கோபத்தோடு தீயணைக்கும் கருவியை எடுத்து அதன்மேல் பவுடரை அடித்துவிட்டு மின்சாரத்தைத் துண்டித்தான். மானம் மரியாதை போன பின்பு மனிதர்கள் இல்லாத உலகம் என்பது ஒன்றிருந்தால் அங்கேயாவது தனக்கு நிம்மதி கிடைக்குமா என்கின்ற ஆதங்கத்தோடு, அப்படி ஒரு இடம் கிடையாதோ என்கிற ஏக்கத்தோடு, வீட்டையே இருட்டாக்கிவிட்டுத் தனது படுக்கையில் சண்முகம் விழுந்தான். கமலம் அப்போதும் நித்திரையின்றி முழித்திருந்தாள். அவள் கண்களில் இருந்து கண்ணீர் மணிகளாய் உருண்டு துணிகளில் புரண்டு உள்ளே சங்கமமாகியது.

சண்முகம் இப்படியே செத்து விடுவானோ என்கின்ற பயம் கமலத்தைப் பிடித்து உலுக்கியது. யாரைக் கூப்பிட்டு அவருக்குச் சமாதானம் சொல்வது என்பதும் அவளுக்குச் சற்றும் புரியவில்லை. அன்று படுத்தவன் நான்கு நாட்களாயும் படுக்கையால் எழவில்லை. தேநீர் குடிப்பதோடு அவனது ஆகாரம் அடங்கிவிட்டது. கமலம் ஒவ்வொரு

நாளும் சமைத்து, பின்பு அதை குப்பைப் பையில் கட்டிப் போட வேண்டியதாகிற்று. இன்றும் சண்முகம் சாப்பிடாவிட்டால், எழுந்து இருக்காவிட்டால் யாரையாவது கூப்பிட்டுச் சமாதானம் செய்ய வேண்டும் என்பது அவள் எண்ணம். யாரைக் கூப்பிடுவது என்பது மட்டும் அவளுக்குப் புரியவில்லை. யாரைக் கூப்பிட்டாலும் ஏற்கனவே இருக்கும் கதையோடு இதுவும் சேர்ந்து கொள்ளும் என்பதும் அவளுக்குத் தெரியும். ஊரறியச் சங்கேனம். ஓடி ஒழிய இனி ஒதுக்கிடம் இல்லை. அதற்காக இந்த மனிசனை இப்படியே சாகவிட முடியுமா என்கின்ற கேள்வி அவளை அரித்தது. அவரை வற்புறுத்தும் துணிவும் அவளிடம் இல்லை. சண்முகம் வற்புறுத்தலுக்கும் வளைபவன் அல்ல என்பதும் அவளுக்குத் தெரியும்.

அன்று சமைத்து முடித்துவிட்டு இனி என்ன செய்வது என்கின்ற யோசனையோடு கமலம் அங்கும் இங்கும் நடைபோட்டாள். சாய்ந்த சங்கீத சாம்பிராச்சியத்தைவிடத் தனது மாங்கலியத்திற்குக் கேடு வருவது அவளைக் கதி கலங்க வைத்தது. அவள் கலங்கியிருக்கும் பொழுதே காலம் காயத்திற்கு மருந்து தடவிச் சென்றது. அது புண்களை மெதுவாக நிரவி கவலைகளை மெதுவாக அழித்து, சோகத்தில் தேங்கி நிற்காது, உந்தி உலக இயக்கத்திற்குள் தள்ளிவிட்டது. இப்படியான காலத்தின் வைத்தியம் இல்லாவிட்டால் உலகத்தின் தோற்றமே கோரமாய் திரிபு பட்டிருக்கும். கோரம் வேண்டாம் என்பது போலச் சண்முகம் சாப்பிடுவதற்காய் அன்று மதியம் எழுந்து வந்தான். கமலத்திற்கு இரண்டாவது வாழ்வு கிடைத்ததான மகிழ்வு தட்டிற்று.

# 12

விக்விறதர் நிகழ்ச்சி தொலைக்காட்சியில் தொடராக… பல மனிதர்கள் அதில் தொலைந்து போயினர். அதுவும் போதாதென இணையத்திலும் பார்ப்பதற்கு வசதி செய்யப்பட்டிருந்தது. கமலத்திற்கும், சண்முகத்திற்கும் மரண வலி தொடர்ந்தது. நிம்மதி என்பதைக் கனவிலும் ஒண்டாது காவு கொடுத்தது போல் ஆகிற்று. நரகத்தில் கிடந்து நாட்களைக் கழிப்பதாய் அவர்கள் வேதனையில், அவமானத்தில், வெட்கத்தில் துடித்தார்கள். காலம் காயத்திற்கு மருந்திட்டுச் செல்கிறதா? காலம் காயத்தை வடுவாக்கிச் செல்கிறதா? தத்துவங்களை அலசும் மனநிலையில் அவர்கள் இல்லை. மனவலியின் வேதனையை அதனோடு போராடுபவர்கள் மட்டும்தான் நன்கு உணர்வார்கள். அந்த வலி மாத்திரம் நிஜம் என்பதை அவர்கள் நித்தம் அணுவணுவாய் அனுபவித்தனர். மனிதர்களோடு மனிதர்கள் வாழ்வதுதான் மாகா இம்சையென அவர்கள் உணர்ந்தனர். சுதேசிகளும் அவர்கள் கலாச்சாரமும் விக்விறதரை ஒரு நிகழ்ச்சியாகவே பார்த்தது. பண்பாடு என்கின்ற பார்வையில் அவர்களிலும் ஒரு சிலர் விமர்சனம் செய்தார்கள். அதுவும் நிகழ்ச்சியை மட்டும் விமர்சித்தனர். அல்லது அதில் பங்கு கொள்கிறவர்களை மட்டும் என்று மட்டுப்படுத்தினர். எல்லைகளை நன்கு அறிந்த மனிதர்கள் அவர்கள். பண்பாடு மீறிப் பண்பாட்டிற்காகவேனும் எல்லை தாண்டி விமர்சனம் செய்யும் தர்மம் அவர்கள் பயில்வதில்லை. தமிழர்களுக்கு இந்த எல்லைகள் புரிவதில்லை. பலர் புரிந்து கொள்ள முயல்வதில்லை. புரிந்தவர்களும் அதை மதிப்பதில்லை. தமிழர்கள் தண்டிப்பது உறவினரை என்பது போல நிகழ்வுகள் நடந்தன. அவர்கள் வேந்து போய் இருந்த புண்ணில் வேல் பாய்ச்சுவதாக சண்முகத்தையும், கமலத்தையும் மேலும் துடிக்க வைத்தார்கள்.

சண்முகத்திற்கும், கமலத்திற்கும் வாழ்க்கை என்பது முடிவில்லாத நரகமாகியது. வாழ்க்கை நரகமாகியது என்பதற்காகத் தற்கொலை செய்து கொள்ள முடியாது. தற்கொலை செய்ய முயற்சிப்பது சட்டப்படி குற்றம் என்பது அவர்களுக்குத் தெரியும். இரணமான வாழ்க்கையை வாழ வேண்டிய அவஸ்தையில் அவர்களின் வாழ்வின் நகர்வு. வருங்காலத்தில் மரணத்திற்கு உதவும் மருத்துவம் வரவேண்டும் என்பது அவர்கள் விருப்பம். தேனுகா அந்த நிகழ்ச்சியில் பங்குபற்றிய பின்பு தேனும் பாலுமாகப் பழகிய பலர் தொலைபேசி எடுப்பதில்லை. அறியாத சிலரிடம் இருந்து பயமுறுத்தலான அனாமோதயத் தொலைபேசி தொல்லையாக வந்திற்று. அதில் அசிங்கமான அவர்களின் வார்த்தைகள் சண்முகத்தின் அத்தனை ரோச நரம்புகளையும் சுண்டியிழுத்தது. தொலைந்து போன மனிதர்கள் போல அவர்கள் இருப்பு இல்லாது போயிற்று. தமிழரின் மட்டமான குணங்களில் இது முதன்மையானது. நேரே பேசுவதற்கு நெஞ்சுரமின்றிய கோழைகள். சண்முகமும் கோபம் வந்தால் வாய்க்கு வந்தது எல்லாம் பேசுவான். கடைசியில் கோபமாகத் தொலைபேசியைத் துண்டித்துக் கொள்வான். மூச்சிறைக்க, மூச்சிறைக்க கமலத்தைப் பார்ப்பான். கமலம் காதைப் பொத்திய வண்ணம் இருப்பாள். கண்களில் என்றும் அடங்காத கண்ணாடி முத்துக்களாய் கண்ணீர் வடியும். காலம் சோதனைக்குள் தங்களை நிரந்தரமாகச் சிறை வைத்ததாக அவள் புழுங்குவாள்.

தெரிந்த மனிதர்கள், சங்கீதம் கற்பதற்காய் வந்த மனிதர்கள், சிறுவர்கள் யாரும் இப்போது வீட்டிற்கு வருவதில்லை. கமலம்தான் முதலில் அதை வேண்டாம் என்றாள். இப்போது அவர்கள் வேண்டாம் என்கிறார்கள். பாவிகளான இவர்கள் இருவரும் வாழும் வீட்டுப் பக்கம் பார்ப்பதே பாவம் என்பது போல அவர்களின் புறக்கணிப்பு. இதையெல்லாம் எண்ணும் பொழுது சண்முகத்திற்கு வேதனை நெஞ்சை மதம் கொண்ட யானையாகத் துவசம் செய்யும். வாழ்க்கை என்பது சந்தோசத்தின் முதுகில் மட்டும் சவாரி செய்வதல்ல என்பது சண்முகத்திற்குப் புரியும். புரிந்தாலும் வாழ்க்கை என்பது துக்கம், வேதனை, கவலை என்கின்ற நரகத்தில் தொடர்ந்து துவள்வதுதானா என்பதை அவனால் பொறுக்க முடியவில்லை. இதற்கு மாற்று வழி என்ன என்பது அவனுக்குப் புரியவில்லை. எல்லாவற்றையும் விற்று விட்டு இலங்கைக்குப் போய்ச்சேர்ந்தால் நல்லது என்பதாக எண்ணினான். கடைசிக் காலத்தில் பணம் இருந்தாலும் பார்ப்பதற்கு ஆள் இல்லாத அந்த நாட்டை எண்ண அவனுக்கு நடுக்கமெடுத்தது. இக்கரைக்கு அக்கரைப் பச்சை என்பது பழமொழி. எக்கரை பார்த்தாலும் ஆபத்தாய் தோன்றுவது அவன் அனுபவ மொழி.

யார்மீதும் நேசம் வைக்கக் கூடாது. அதுவும் அளவு கடந்த நேசம் வைக்கக் கூடாது. வைத்தால் அது ஒரு நாள் நெஞ்சை இரணமாக்கும். உயிரைப் பலி கேட்கும். நேசத்தின் அளவிற்கேற்ப துடிப்பும் வேதனையும் வர்க்கமூலமாகும். அது மனிதரைத் தசரதனாய் தவிக்க வைக்கும். சோகத்தில் மாய்ந்த பின்பு சொர்க்கம் அனுப்பும். தசரதனைத் தவிர அவன் வலியை யாராலும் முழுமையாக உணர்ந்திருக்க முடியாது. உன் வலி உனக்கு மட்டும்தான் சொந்தம். அதை உன்னால் மட்டுமே உணர முடியும். என் வலி எனக்கு மட்டும்தான் சொந்தம். அதை என்னால் மட்டும்தான் முழுமையாக உணரமுடியும். சோகங்களைச் சொந்தமாக அனுபவிக்க வேண்டும். புழுவாகத் துடிப்பது அப்பொழுதுதான் புரியும். சண்முகம் அதை அணுவணுவாக அனுபவித்தான். வலி என்கின்ற வாக்கியத்தின் வலிமையைப் பூரணமாக உணர்ந்தான். இரணம் நெஞ்சை அறுக்க, கணங்கள் யுகங்களாக, காலத்தோடு போராடினான்.

மானம், கௌரவம் என்பதும் அப்படித்தான். சாதுவாகத் தொட்டுக் கொள்ள வைத்துக் கொள்ளலாம். மார்க்கமாக அல்லது வேதமாக எடுத்துக் கொண்டால் அதுவே மரணத்திற்கு வழி காட்டிவிடும். நல்ல நினைவுகள் வாழலாம். வாழாவிட்டாலும் பருவாய் இல்லை. கூடாத நினைவுகள் அழிந்து போய்விட வேண்டும். கனவுகள்கூட அதை ஞாபகப்படுத்தக் கூடாது. கவலைகளை மறக்காத பொழுது அது எம்மை அழித்துவிட்டுப் போய்விடும். இத்தனையும் புரிந்தாலும் அவனால் அந்தக் கவலைகளில் இருந்து மீள முடியவில்லை. போராடிப் போராடித் தோற்ற பொழுது புரிந்து கொள்ள முடியாதவாறு கவலைகள் இன்னும் அதிகமாகின.

*

அன்று சனிக்கிழமை. பொருட்கள் வாங்குவதற்காய் அருகில் இருந்த வர்த்தக மையத்திற்குச் சண்முகமும் கமலமும் சென்றார்கள். வீட்டில் இருந்து என்ன செய்வது என்கின்ற அங்கலாயிப்போடு ஆறுதலாக ஆற அமரத் தமக்குத் தேவையான பொருட்களை வாங்கினார்கள். தமிழரைக் கண்டால் பேசாது விலகிச் சென்றார்கள். அப்படியும் சிலர் வந்து 'நீங்கள் தானே தேனுகாவின்ர அம்மா அப்பா?' என்று நக்கலாகக் கேட்டார்கள். அப்பொழுது சண்முகத்தின் கைகால் நடுங்குவதைப் பார்க்க கமலத்திற்கு மடியில் நெருப்பைக் கட்டியதான அவஸ்தை உண்டாகும். அந்த விசாரிப்புகள் சண்முகத்தின் பார்வையின் உக்கிரத்தால் தடைப்பட, ஒருவாறு அவர்கள் தங்கள் அலுவல்களை மேற்கொண்டு செய்யக்கூடியதாகிற்று.

பொருட்கள் வாங்கிய பின்பு அங்குள்ள உணவகத்திற்குச் சென்று கேக்கும் கோப்பியும் வாங்கிச் சாப்பிட்டார்கள். காசைக் கணக்குப் பார்ப்பவர்கள் இங்கு வரமாட்டார்கள் என்கின்ற நிம்மதியும் துணிவும் அவர்களுக்கு. பின்பும் சிறிது நேரம் அங்கிருந்து பராக்குப் பார்த்தார்கள்.

பராக்குப் பார்ப்பது அலுப்படிக்க இருவருமாய் புறப்பட்டு வீட்டிற்கு வந்தார்கள். சண்முகம் முன்பு போல் இப்பொழுது காரை வேகமாக ஓட்டுவதில்லை. ஓட்ட வேண்டிய வேகத்தைவிடக் குறைவாக ஓட்டியதால் பின்னால் வந்த ஒருவன் கோண் அடித்துவிட்டு விலத்திச் சென்றான். அதைப் பார்த்தவுடன் சண்முகத்திற்குக் கோபத்தில்

முகம் வீங்கிப் போய்விட்டது. முன்பு என்றால் அந்தக் காரைக் கலைத்துச் சென்றிருப்பான். இப்பொழுது அந்தத் துணிவு வரவில்லை. வீடு அண்மிக்க சண்முகம் தமது ஒழுங்கைக்குள் காரைத் திருப்பினான்.

வீட்டை நெருங்கவும் எங்கோ அலார்ம் சத்தம் கேட்டது. காரில் இருந்து வரும் சத்தம் போல அது இருக்கவில்லை. யாருடைய வீட்டில் இருந்தோ அந்தச் சத்தம் வந்தது. யார் வீடாக இருக்கும் என்பது புரியாத நிலையில் கார் சண்முகத்தின் வீட்டை மேலும் நெருங்கியது. அப்பொழுதுதான் அது தங்கள் வீட்டில் இருந்து வருவதை இருவராலும் புரிந்து கொள்ள முடிந்தது. அது அவர்களுக்குப் பெரும் திகைப்பானது. காரை நிறுத்திவிட்டு ஓடிப் போய் வீட்டைப் பார்த்தார்கள். யாரோ கோல் ஜன்னல் கண்ணாடியை உடைத்து விட்டார்கள். வீட்டிற்குள் பெரிய கல் ஒன்று விழுந்து கிடந்தது. யார் உடைத்தார்கள் என்பது புரியாவிட்டாலும் எதற்கு உடைத்து இருக்கிறார்கள் என்பது சண்முகத்திற்குப் புரிந்தது. உள்ளே போய் பார்ப்பதா அல்லது செக்குறிதாஸ் (காவல் நிறுவனம்) வரும் வரை காத்திருப்பதா என்கின்ற குழப்பம் அவனுக்கு. எதற்கும் காத்திருப்பது நன்கு என்கின்ற ஆலோசனையோடு திரும்பிச்சென்று காருக்குள் காத்திருந்தார்கள். சிறிது நேரத்தில் செக்குறிதாஸ் என்னும் காவல் நிறுவனத்தினர் வந்தார்கள். சண்முகம் இறங்கிச் சென்று தன்னை அறிமுகம் செய்தான். அவர்களும் சம்பிரதாயப்படி தங்களை அறிமுகம் செய்தனர். பின்பு சண்முகம் கதவைத் திறந்தான். சண்முகம் கதவைத் திறக்க இதுவரையும் சத்தமிட்ட அலார்ம் அமைதியாகியது.

யன்னல் கண்ணாடிக்கு எறிந்த கல் செய்யாத குற்றத்தை ஏற்றுக்கொண்ட குற்றவாளியாகக் கோலுக்குள் பரிதாபமாய் கிடந்தது. அந்தக் கல்லை சுற்றி ஒரு கடிதம் ஒட்டப்பட்டிருந்தது. அதை அவர்கள் கயுறை அணிந்து அப்புறப்படுத்தி ஒரு பிளாஸ்ரிக் உறைக்குள் போட்டுச் சண்முகத்திடம் கொடுத்தார்கள். அந்தக் கடிதத்தைப் பொலிசில் ஒப்படைத்து, முறைப்பாடு செய்ய வேண்டியது சண்முகத்தின் பொறுப்பாகியது.

அந்தக்கடிதம் கணினியில் எழுதிப் பிறின்ற் எடுக்கப்பட்டிருந்தது. அதில் எழுதி இருந்ததை வாசித்த போது சண்முகத்திற்குக் கைகால் எல்லாம் நடுங்கின. எழுதியவன் முன்னே நின்று இருந்தால் சண்முகம் அவனைக் கொலை செய்திருப்பான்.

இதைக் கவனித்த அந்தச் செக்குறிதாஸ் பணியாளர்கள்,

'வா டீ கார் ஸ்கிறிவத்?' (என்ன எழுதி இருக்கினம்?) என்று கேட்டனர்.

'டீ துருவா மை.' (அவை என்ன மிரட்டுகினம்) என்று மாத்திரம் சண்முகம் பதில் கூறினான். அதைவிட அசிங்கமாக அதில் எழுதி இருந்ததை அவர்களிடம் சொல்லுவதற்கு அவன் தன்மானம் இடம் கொடுக்கவில்லை. அதை எட்டிப் பார்த்த கமலம் வாயைக் கையால் பொத்திப் பிடித்த வண்ணம் சமையல் அறைக்குள் சென்றாள். அந்தக் கவலையிலும் வந்தவர்களுக்குக் கோப்பி தயாரிக்கத் தொடங்கினாள்.

கமலம் கோப்பி தயாரிப்பதைப் பார்த்த அவர்கள் தங்களுக்கு அவசரமாகப் போக வேண்டிய அலுவல் இருப்பதாகக் கூறிவிட்டு வெளியே சென்றார்கள். அப்படி வெளியே செல்லும் பொழுது மறக்காது பொலிசுக்குப் போகுமாறு கூறிவிட்டுச் சென்றார்கள்.

அன்று கமலத்தாலும் சண்முகத்தாலும் நிம்மதியாகச் சமைத்துச் சாப்பிட முடியாது போயிற்று. அதன் பின்பு சண்முகமும் கமலமும் பொலிசுக்குப் போய் வந்தார்கள். காப்புறுதி நிறுவனத்தில் இருந்து பணம் எடுப்பது என்றால் பொலிசுக்குப் போய் வரவேண்டியது அவசியமாகும்.

அந்த அலுவல்கள் எல்லாம் முடிந்த பின்பு அவர்களுக்குச் சமைத்துச் சாப்பிட மனம் வரவில்லை. வெளியே போன போது தடித்த பிளாஸ்ரிக் உறை வாங்கி வந்தார்கள். அதை யன்னலுக்கு ஒட்டி காற்றுக் கிளப்பி விடாது அலுமாரி ஒன்றை அணை கொடுத்தனர். யன்னல் கண்ணாடி மாற்ற வேண்டும் என்பது இருந்த தலையிடியோடு இன்னும் ஒரு தலையிடியாகியது. பொலிஸ் உடைத்தவர்களைக் கண்டு பிடிக்குமா என்பது லொத்தர் விழும் கதைதான் என்பது சண்முகத்திற்கு நன்கு தெரியும். அதை நினைக்க அவனையும் மீறி ஒரு பெருமூச்சுக் கிளம்பியது.

# 13

தேனுகா அன்று விநாயகம் மாமா வீட்டிற்கு வந்த பொழுது அத்தி பூத்தாற் போல் பிரவீனா மாத்திரம் வீட்டில் நின்றாள். நட்பின் தனிமை இதமான கணம் என்பது அவள் அவிப்பிராயம். அந்தக் கணங்கள் அவளுக்கு பெரும் நிம்மதி தருவதாயிற்று. ஒத்த வயதுடைய நண்பர்களோடு கதைப்பது அலாதியானது. அதில் இருக்கும் சுதந்திரம் நிபந்தனை அற்றது. இது அவளுடைய அனுபவத்திலான எண்ணமும் முடிவுமாகும். சிறு வயதில் இருந்தே அப்பாவைப் போலப் பார்த்துப் பழகிய விநாயகம் மாமாவோடு கதைப்பதற்கு நிச்சயம் எல்லைகள் உண்டு. எத்தனை அரங்கேறி வந்தாலும் அந்த எல்லைகள் அழியாதிருப்பதாய் தேனுகா உணர்ந்தாள். உணர்ச்சியின் உச்சத்தில், காமத்தின் நச்சரிப்பில் எல்லைகளை மறந்து, உலகுகிற்கு விருந்தாக, உடல் இன்பத்தை அனுபவித்த அந்த அவதியான கணங்களை அவள் எண்ணினாள். அன்று அவதி அவதியாக இனித்த அந்தக் கணங்கள் இன்று கசக்கும் மருந்தான உணர்வு. கசந்தாலும் அது தனது உரிமை என்கின்ற எண்ணம் இன்றும் சாகாது அடிமனதில் தொண்டை அடைத்தவன் குரலாக கமறுகிறது. காமத்தை அனுபவிப்பது தப்பில்லை என்பது அவள் கட்சி. அரங்கில் அனுபவித்ததால் ஏற்பட்ட அவஸ்தையை அவள் உணர்வாள். அது தனிமனித சுதந்திரம் என்கின்ற எண்ணம் அவளிடம். மற்றவர்களின் தனிமனித சுதந்திரத்தைப் பொறுக்க முடியாத மனிதர்கள் மேல் அவளுக்கு அடங்கா வெறுப்பு.

பிரவீனாவால் புரிந்து கொள்ள முடியும். இந்த நாடு, இந்த நாட்டில் வாழும் மனிதர்களின் கலாச்சாரம், அவர்கள் உடலுறவைப் பார்க்கும் முறை, இங்கு வாழும் தமிழர்கள், அவர்கள் பாலுறவைப் பார்க்கும் முறை என்பன அவளுக்கு நன்கு புரியும். அது மட்டும் இல்லாமல் தமிழர்களுக்குப் பிறந்த பிள்ளைகள் அன்னிய நாடான ஆசியாவில் இருக்கும் ஒரு நாட்டின் கலாச்சார விழுமியங்களை... அது சொந்த நாட்டிலேயே நலிந்து கிடப்பதைக்கூடக் கண்டு கொள்ளாது, ஐரோப்பியக் குடிகளாக தங்களை உணர்ந்து கொள்பவர்கள்மேல் திணிக்கும் தமது தாய் தந்தையரை வெட்டவும் முடியாது, ஒட்டவும் முடியாது, இரு கலாச்சாரத்திலும் ஒவ்வொரு காலை வைத்தது போலத் தெண்டாடும் அவதி அவளுக்குப் புரியும். ஊரோடு ஒத்தோடு என்பதை ஐரோப்பாவின் வந்தேறு குடிகள் புறக்கணித்து, தமது பிள்ளைகளின்மேல் சுமக்க இயலாத சுமையை தமக்குப் பிறந்த ஒரே குற்றத்திற்காக கழுதைகளாக்கிச் சுமத்த முற்படுவதும் அவளுக்குப் புரியும். அவளோடு கதைப்பது மனச்சுமையைத் தணிக்கும் என்கின்ற சிந்தனையோடே தேனுகா சென்று சோபாவில் அமர்ந்தாள். அதைப் பார்த்த பிரவீனா தேனுகாவுக்குப் பக்கத்தில் வந்து இருந்தாள். பின்பு அவளைப் பார்த்து,

'என்ன தேனுகா... டள்ளா இருக்கிறா?' என்று பிரவீனா தொடங்கினாள்.

'இல்ல நாங்கள் சிறுபிராயத்தில இருந்து கற்ற கலாச்சாரம் இந்த நாட்டுக்குச் சொந்தமானது. இல்லையா?'

'ம்.' என்று அவள் தலையை ஆட்டினாள்.

'நாங்கள் இந்த நாட்டிற்குச் சொந்தமானவர்கள். எங்கள் உணர்வுகள் இந்த நாட்டு மண்ணையும் மனிதர்களையும் கலாச்சாரத்தையும் நேசிப்பவை.' என்றாள் தேனுகா.

'நீ சொல்லுறது சரி... அதுக்கு இப்ப என்ன வந்திட்டிது? ஏதும் அரசியல் கட்சியில சேரப்போறியா?' சிரிக்காமல் கதைத்தாள் பிரவீனா.

'எங்கயோ இருக்கிற நாடு சிறீலங்கா. அங்க யாழ்ப்பணத்தில துடை தெரியாமல் ஸ்கேட்டன் பிளவுஸ் போடுறதுதான் கலாச்சாரம் எண்டா அதை நாங்கள் எப்பிடி இங்கையும் பின்பற்ற முடியும்? பண்பான மனிதர்கள் மற்றைய மனிதர்களின் முகத்தைத்தானே பார்க்க வேணும்? பார்க்கிற பார்வையே எப்பொழுதும் காமத்தோடதான் பார்க்கப்படும் என்றால் மூடிக்கட்டத்தான் வேணும். அப்படி என்றால் அந்த யாழ்ப்பாணக்கலாச்சாரம் எதை எங்களுக்குச் சொல்கிறது? மனிதன் எப்போதும் காமத்தோடு அலைகிறான் என்பதா அதன் அர்த்தம்? உடலை சற்றுத் திறந்து காட்டினால் மிருக குணத்தோடு காமம்கொண்டு வல்லுறவுக்குப் பாயவேண்டும் என்பதா? யாழ்ப்பாணத்தில் வாழும் ஆண்கள் எல்லாம் அப்படிக் காம இச்சை கொண்ட மிருகங்களா? அவர்கள் பாய்வார்கள் என்று நாங்கள் போர்த்துக்கொள்ள வேண்டுமா?' என்றாள் தேனுகா.

'மூடிக்கட்டுவது காமத்தைக் குறைக்கிறதென நினைக்கலாம்.' என்றாள் பிரவீனா.

‘அதற்கான ஆதாரங்கள் உண்டா? இங்கு நடப்பதைவிட இப்போது அங்கு வல்லுறவுகள் குறைவா? நீ விட்டால் இஸ்லாமியத் தீவிரவாதிகளையும் ஆதரித்துக் கதைப்பாய் போல இருக்கிறதே?’ என்றாள் தேனுகா.

‘அப்படியெல்லாம் செய்வேனா நான் தேனுகா? இந்த நாட்டில் வாழும் எங்களுக்கு வேண்டியது இந்த நாட்டுக் கலாச்சாரம். கனவு உலகமான அவர்களின் தாய் நாட்டைப் பற்றிய நினைவோடு எங்களை இம்சிப்பது அநியாயம்தான். உன்பக்கம் என் ஆதரவு எப்போதும் இருக்கும்.’ என்றாள் பிரவீனா.

‘என்னுடைய கருத்தும் அதுதான். எங்கள் நாடு இந்த நாடே. இந்த நாட்டில் எங்களுக்குச் சரியென்பதை நாங்கள் செய்ய வேண்டும். இங்கு வந்த பின்பும் யாழ்ப்பாணத்தில் வாழும் தமிழர்களைப் போல் வாழ வேண்டும் என்பது விழுந்தாலும் மீசையில் மண் ஒட்டவில்லை என்கின்ற வறட்டுக் கௌரவம் அல்லவா? இந்தப் பிடிவாதம் தமிழர்களிடம் இருந்து மாறவேண்டும். அல்லது அவர்கள் இடத்தை மாற்ற வேண்டும்.’ என்றாள் தேனுகா.

‘உண்மை. தமிழர்கள் உறவு என்பதை இருட்டில் நடக்கும் இரகசிய நாடகமாய் நினைக்கிறார்கள். அதை ஒளித்து மறைத்து நாலு சுவருக்குள் மட்டும் ஆடை அரைவாசி, நிர்வாணம் அரைவாசியாக நடத்துகிறார்கள். அதை மீறி நடப்பது அவமானமாக நினைக்கிறார்கள். உறவு என்பது நாலுசுவருக்கு வெளியே நடப்பது அவமானம்தான். நாலு சுவருக்குள் என்றாலும் நிம்மதியாகச், சுதந்திரமாக நடக்காவிட்டால் அது உறவாகவும் இருக்க முடியாது அல்லவா?’ என்றாள் பிரவீனா.

‘எங்கு என்றாலும் உறவு என்பது நாலுசுவருக்குள் மட்டும்தான் நடக்க வேண்டுமா? அதை மீறினால் அது அவமானமா?’ என்றாள் தேனுகா.

‘எங்கே என்றாலும் நாலு சுவருக்குள் நடப்பதுதான் நாகரிகம். உறவை அனுபவிப்பதில் வித்தியாசம் இருக்கிறது. உறவை அனுபவிக்கும் பொழுது என் உணர்வுகளை நாலு சுவருக்குள்ளும் நான் கட்டுப்படுத்த வேண்டும் என்பது அவசியம் இல்லை. சில கலாச்சாரங்கள் அதையும் வேண்டி நிற்கிறது. யாழ்ப்பாணத்தில் உறவு கொள்ளும் பொழுது ஏதாவது சத்தம் வெளியே கேட்டால் அதை எப்படி எடுத்துக் கொள்வார்கள்? இங்கு அதை எப்படி எடுத்துக் கொள்வார்கள்? ஆனால் உறவு என்பது அரங்கத்தில் நடந்தால் இங்கும் அதிர்ச்சி தரும் நிகழ்வாகத்தான் இருக்கிறது. அங்கும் அதிர்ச்சி தரும் நிகழ்வாகத்தான் இருக்கும். அதற்கு உதாரணங்கள் உண்டு. உன்னையே உதாரணம் ஆக்கலாம். அந்த உறவுக் காட்சி. அது முழு நிர்வாணமான காட்சி அல்ல. அது இவர்களை பொறுத்தவரையில் கிளுகிளுப்பான நிகழ்ச்சி. சிலருக்கு அதுகூட அதிர்ச்சி தந்திருக்கலாம். தமிழர்களைப் பொறுத்தவரை அது மறக்க முடியாத அவமானம். அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சி. நீ இந்த நாட்டவளாய் முழுமையாக உணர்ந்தால் தமிழர்கள் என்ன எண்ணுவார்கள் என்று எண்ணிக் கவலைப்படக் கூடாது. தமிழர்களைப் பற்றி எண்ணுவதாய் இருந்தால் அந்த நிகழிச்சிக்கே போயிருக்கக் கூடாது. விளங்குகிறதா உனக்கு?’ என்றாள் பிரவீனா.

‘உறவை அனுபவிக்கிறதில என்ன தப்பு இருக்கு?’

‘தப்பில்லை. எங்கே எப்பிடி அனுபவிக்கிறது என்பதிலே வெவ்வேறு கருத்து உண்டு. ஒவ்வொரு சமுதாயத்திற்கு ஏற்பவும் அது மாறும். நாங்கள் தமிழரா? நொர்வேஜியர்களா? இந்த அடையாள நிச்சயமின்மை நாங்கள் எப்படி நடக்க வேண்டும் என்பதையும் தடுமாற வைக்கிறது. நாங்கள் யார்? இந்தக் கேள்விக்கான விடை எங்கள் தெரிவா? எங்களைத் தங்கள் தெரிவாக்கியது அப்பா, அம்மாவின் தெரிவா?’ என்றாள் பிரவீனா.

‘எங்கள் வாழ்க்கை எங்கள் தெரிவாக இருக்க வேண்டும். சரி நான் பிக்விறதர்ஸ் கவுசுக்குப் போனவுடன என்னுடைய மூளையில் உடலுறவு பற்றின எண்ணமே செத்துப் போகுமா? இரத்தமும் சதையும் உள்ள மனிதர்கள்தானே நாங்கள்? ஒரு நாளைக்கு எத்தனை முறை அந்த எண்ணம் வந்து போகும்? சில நேரங்களில் அதை ஞானிகளாலேயே அடக்க முடியாமல் போகுமாம். சாதாரண மனிதர்களான நாங்கள் அனுபவிக்க வேண்டிய உணர்வுகளைக் கட்டுப்படுத்தி யாருக்கு என்ன இலாபம்? நாங்கள் உலகத்தில் சாகாவரம் பெற்றா வாழப் போகிறோம்? பிறக்கும் போதே இறக்கும் நாளும் குறிக்கப்பட்டாகிற்று. இந்த உடல் இருக்கும் வரைக்கும் அனுபவிக்கிறதில என்ன தப்பு இருக்குது?’ என்றாள் தேனுகா.

‘அழிவு இல்லாமல் எதுவும் இல்லை. நாளை என்பதும் கற்பனைதான். என்றாலும் மனிதர்கள் நாளை வரும் என்று முழுமையாக நம்புகிறார்கள். அதைப் போல தங்களுக்குச் சரி என்பதை மட்டும் மிகவும் ஆழமாக நம்புகிறார்கள். அவர்கள் நம்புவதைவிட மற்றவற்றை தப்புத் தாளங்களாகப் பார்க்கிறார்கள். மனிதர்களுக்கு இடையேயான உடலுறவு இரகசியமானது. அது மீறப்படுவது எங்கும் குற்றமாகிறது.’ என்றாள் பிரவீனா.

‘இரகசியமாக எல்லா அசிங்கத்தையும் செய்யும் மனிதனுக்குச் சில அழகான உணர்வுகளை, அதற்கான சுதந்திரத்தோடு அனுபவிப்பதற்கு எப்போதும் தயக்கம். அதுவே பண்பாடு, கலாச்சாரம் என்கின்ற பசப்பாக முகத்திற்கும், உணர்வுக்கும் திரையிடப்படுகிறது.’ என்றாள் தேனுகா.

‘பொதுவாக அது மீறப்படும் பொழுது மனிதனுக்கும் மிருகத்திற்குமான வித்தியாசம் இல்லாது போய்விடுகிறது என நம்பப்படுகிறது. பிக்பிறதர் தமிழரைப் பொறுத்த வரையில் அந்த எல்லையைத் உடைக்கும் விசயம்.’ என்றாள் பிரவீனா.

‘யார் சொன்னது மனிதருக்கும் மிருகத்திற்கும் வித்தியாசம் உள்ளது என்று?. மனிதனும் ஒரு மிருகம்தான். அவன் அறிவுள்ள மிருகம். உணர்வு என்பது மிருகத்திற்கு இருப்பதைப் போலத்தான் மனிதனுக்கும் இருக்கிறது. அறிவு அவனைக் காலத்தோடு முன்னும் பின்னுமாக சிந்திக்க வைக்கிறது. சில மிருகங்களும் அப்படிச் சிந்திக்கின்றன. காமம், உறவு, இனப்பெருக்கம் எல்லா மிருகத்திற்கும் பொதுவானவை தானே? மிருகம் மறைவு தேடுவதில்லை. மனிதன் மறைக்காமல் கூடுவதில்லை.’ என்றாள் தேனுகா.

‘தேனுகா நீ தனித்துக் காட்டில் வாழவில்லை. நீ மனித சமுதாயத்தோடு வாழ்கிறாய். இந்தச் சமுதாய விலங்குகளோடு வாழும் பொழுது விரும்பியோ விரும்பாமலோ அதன் கட்டுப்பாடுகளை ஏற்றுக் கொண்டுதான் வாழ வேண்டும். அல்லது இடர்ப்படுவதைத் தவிர்க்க முடியாது.’ என்றாள் பிரவீனா.

‘அதை நான் அநியாயமான கட்டுப்பாடுகள் என்று எண்ணுகிறேன்.’ என்றாள் தேனுகா.

‘பலருக்கும் அப்படித் தோன்றலாம். வெளியே சொல்ல யாரும் முன்வருவதில்லை.’ என்றாள் பிரவீனா.

‘இந்த ஐரோப்பாவிலுமா?’

‘உலகத்தின் எல்லா இடத்திலும் இதே தோற்றம்தான். அதன் அளவுகள்தான் இடத்திற்கு இடம் வித்தியாசப்படுகிறது.’ என்றாள் பிரவீனா.

இருவரும் கதைத்துக் கொண்டு இருக்கும் பொழுது விநாயகம் மாமா உள்ளே வந்தார். அதைப் பார்த்த தேனுகா, ‘என்ன மாமா சுகமா இருக்கிறியளே?’ என்பதோடு அந்தக் கதைக்கு முற்றுப்புள்ளி வைத்தாள்.

# 14

வீட்டிற்கு நேரடியாகச் சென்று அப்பா அம்மாவைப் பார்க்க முடியாது. விநாயகம் மாமாவிற்குத் தொலைபேசியில் தொடர்பு கொண்டு என்ன நடந்தது என்று விசாரிக்கலாம். அந்த விசாரிப்பில் தேனுகாவுக்குத் திருப்தி ஏற்படுவதில்லை. விநாயகம் மாமா வீட்டிற்குப் போகும் பொழுது தங்கள் வீட்டைக் கடந்து செல்லும் நேரத்தில் அப்பா அம்மாவைக் காணலாம் என்கின்ற நப்பாசையை இப்போது அவளால் அடக்க முடிவதில்லை. அதற்காகவே தொலைபேசியில் முடியும் அலுவலுக்கு ஒரு மணித்தியால பயணம் செய்து அவள் விநாயகம் மாமா வீட்டிற்கு வருவது உண்டு. இன்றும் நலம் விசாரிப்பதோடு நப்பாசையையும் நிறைவேற்ற விநாயகம் மாமா வீட்டிற்குப் புறப்பட்டாள்.

வாகனத்தைக் கொண்டு வந்தால் அதற்கு எரிபொருள் செலவோடு இரண்டு வரிப்பணமும் கட்ட வேண்டும். அந்தச் செய்கையில் எந்தப் பொருளாதார ஆதாயமும் இல்லை என்பதை உணர்ந்தவள் மறுபடியும் பேருந்தில் புறப்பட்டாள். அவள் ஏறிய பேருந்து ஊரெல்லாம் வலம் வந்து மத்திய சுரங்கரத நிலையத்தை ஒருவாறு வந்தடைந்தது. இனி சுரங்கரதத்திற்கு மாறவேண்டும் என்கின்ற சலிப்போடு அவள் அதைவிட்டு இறங்கி மத்திய சுரங்கரத நிலையத்திற்குள் புகுந்தாள்.

மத்திய சுரங்கரத நிலையத்தை சுற்றிப் பகல் வேளைகளில் எப்பொழுதும் பரபரப்பாய் இருக்கும். மத்திய புகையிரத நிலையமும் மத்திய சுரங்கரத நிலையமும் அருகருகாய் உள்ளன. அதன் மேற்தளங்களில் மக்களைத் தேனீகளாய் கவரும் கடைகள் நிறைய உண்டு. ஓஸ்லோவின் பிரபலமான நவீன அங்காடி அங்கு உள்ளது. மத்திய புகையிரதத்திற்கு முன்புள்ள தெருவோரத்தில் போதைப் பொருள் பாவிப்பவர்கள் கூட்டம் கூட்டமாக நிற்பதைத் தேனுகா கண்டாள். இதில் ஒன்றும் புதுமை இல்லை என்பது அவளுக்குத் தெரியும். அதில் வயோதிபர்கள் தொடக்கம் பதின் நான்கு பதின் ஐந்து வயது உடைய பதின்ம வயதினரும் நின்றார்கள். யாரையும் பற்றிக்

கவலைப்படாது அவர்கள் தங்களது கொடுக்கல் வாங்கல்களைச் செய்தார்கள். போதைப் பொருள் பாவித்தவர்கள் ஆங்காங்கு தூங்கி வழிந்தார்கள். தங்களுக்குள் சிரிப்பதும் கதைப்பதுமாய் உலகை மறந்து போதையில் மிதந்தார்கள். பிள்ளைகளுடன் வந்தவர்கள் அவர்களைக் கண்டு பதைபதைப்புடன் விலத்திச் சென்றார்கள். காக்கைக்கும் தன்குஞ்சு பொன்குஞ்சு என்பதற்கமைய தெரிந்தும் கெட்டதைப் பார்க்க விடுவதற்கு அவர்கள் தயாராக இல்லை. அறிந்தும் தவற்றில் இருந்து விடுபட முடியாத மனிதர்கள் அப்பாவிகளாய் இருந்தாலும் ஆபத்தாய் தோன்றினார்கள். கெட்டதைப் பார்ப்பதே கெட்டதைச் சுவைக்கும் எண்ணத்தை உண்டு பண்ணிவிடும் என்கின்ற பரிதவிப்பு அந்தப் பெற்றோரிடம். அவர்கள் தங்கள் பிள்ளைகளை இழுத்த வண்ணம் விரைவாக அந்த இடத்தைவிட்டு மறைந்தனர்.

பொருட்கள் கொள்முதல் செய்யப் புறப்பட்டால் சுற்றியலையலாம். அது நேரத்தோடு பணமும் விரயமாகும் பொழுது போக்கு என்பது தேனுகாவுக்குப் புரியும். அத்தோடு வர்த்தக மையங்களுக்குள் யாராவது அடையாளம் கண்டு கொண்டால் அவர்களுக்கு வேறு பதில் சொல்ல வேண்டும். பேசாது விறுவிறு எனச் சுரங்கரதத்தில் ஏற வேண்டும் என்கின்ற அவசரத்தோடு தேனுகா சுரங்கரத வாயிலுக்குள் நுழைந்தாள். தப்பி ஓடுவதே சில வேளைகளில் வாழ்க்கை ஆகிவிடுகிறது என்கின்ற வெறுப்பு அவளுக்கு. அது எவ்வளவு அவஸ்தையானது என்பதை சில காலங்களாகத் தேனுகா வேதனையோடு அனுபவிக்கிறாள்.

இந்தச் சுரங்கரத நிலையத்திற்குப் பல வாயில்கள் உண்டு. அவள் பேருந்தால் இறங்கி மருந்துக் கடைக்குப் பக்கத்தில் இருந்த வாயலால் நுழைய எண்ணி அதை நோக்கி நடந்தாள். அது நிலத்திற்குக் கீழ் சுரங்கம் போல் நீண்டு கதவைத் தொடும் பாதை. தேனுகா இறங்கிக் கதவை நோக்கி விறுவிறு என்று நடந்தாள். அப்பொழுதுதான் கதவோடு கூட்டமாக நின்ற அவர்களைக் கவனித்தாள். திரும்பிச் சென்று வேறு பாதையால் உள்ளே நுழைவோமோ என்பதாக ஒரு கணம் எண்ணினாள். அதற்குள் நிலைமை மாறி விட்டது. அவளை முதலில் கவனிக்காது கதைத்தபடி நின்றவர்களின் கதை திடீரென தடைப்பட்டது. எல்லோரது கண்களும் இவளையே துளைத்தெடுத்தன. இந்தச் சந்தர்ப்பங்களையே தேனுகா அடியோடு வெறுத்தாள். அவள் வெறுப்பது மற்றவர்களுக்குப் புரியுமா? புரிந்தாலும் விடுவார்களா? அவளது தன்மானத்தின் மேல் ஏற்படும் வன்புணர்வு அடிக்கடி நடைபெற்றது.

இனித் திரும்பிச் சென்றால் பயந்து ஓடுவதாய் பின்னால் நின்று கத்துவார்கள். அது தேனுகாவுக்கு நன்கு தெரியும். அவள் துணிவை வரவழைத்தாள். வீம்போடு அவர்களை நோக்கி நடந்தாள். அப்பொழுது நல்ல உடம்பான, உயரமான சுதேசி ஒருவன் அவசரமாக சுரங்கரதத்திற்குச் செல்வதற்காய் வந்தான். தேனுகா அவனுக்குப் பின்னால் விறு விறுவென நடந்தாள். இப்படியே அவனோடு சென்றுவிட்டால் இந்த உபத்திரபத்தில் இருந்து தப்பிக்கலாம் என்பது அவள் கணக்கு.

அவளின் அந்தக் கணக்கு அவர்களுக்குப் புரிந்திருக்க வேண்டும். ஒருவன் மறுகரைக்கு வேகமாக மாறினான். அந்தச் சுதேசிக்கும் அவளுக்கும் இடையே இரண்டு கைகள் திடீரென இரண்டு பக்கத்திலும் இருந்து நீண்டன. தேனுகா தட்டிவிடுமுன் அவை அவளை இடைமறித்துக் குறுக்காகப் பின்னிப் பிணைந்தன.
தேனுகாவுக்கு வழி மறிக்கப்பட்டதில் ஏகப்பட்ட எரிச்சல். அவள் அந்தக் கைகளின் மேல் பட்டுவிடாது நின்றாள். ஒரு முறை இதைத் திரும்பிப் பார்த்த சுதேசி எதுவும் நடக்காதது போலச் சென்றது தேனுகாவுக்குப் பெரும் ஏமாற்றமாகியது. என்ன மனிதன் அவன் என்கின்ற சலிப்பு வந்தது.

அதில் உயரமாக நின்றவனுக்குப் பெயர் அரண். அவனோடு கையை கோர்த்து வழி மறித்தவனுக்குப் பெயர் ஆதித்தியன். மற்றைய ஒருத்தனுக்கு விக்னேஸ் பெயர். நான்காமவனுக்கு தரன் பெயர். நான்குபேரும் தேனுகாவை இப்பொழுது சூழ்ந்து கொண்டார்கள். தேனுகாவுக்குத் தப்பியோட வழியில்லாது போயிற்று. அவர்கள் தன்னைவிட வயதில் குறைவாக இருப்பது புரிந்தாலும் அதில் பலர் தன்னைவிட வளர்த்தி ஆகவும், உடம்பாகவும் இருந்தமை உடல்ரீதியாகத் தன்னால் சண்டித்தனம் காட்ட முடியாது என்கின்ற எண்ணத்தை அவளுக்கு உண்டு பண்ணியது. ஆண்கள் ஏன் இப்படி தடியர்களாய் மாறிவிடுகிறார்கள்? இயற்கை ஏன் பெண்களை பலவீனப்படுத்தியது? அவளால் அதற்கு மேல் அதைப் பற்றி சிந்திக்க முடியவில்லை. அவள் எண்ணம் எல்லாம் எப்படி இவர்களிடம் இருந்து தப்பிப்பது என்பதிலேயே குறியாகிற்று. அவள் முதலில் தன்மையாக கதைத்துப் பார்க்க எண்ணினாள்.

'தயவு செய்து வழிய விடுங்கோ…' என்றாள்.

‘விடுறம்… முதல் அந்த விக்விறதர் கவுசுக்க என்ன என்ன செய்தியள் எண்டு எங்களுக்குக் கொஞ்சம் சொல்லுங்கோ. நீங்கள் சொல்லி முடிச்சவுடன உங்கள விடுறம்.’ என்றான் தரன். அவன் ஏதோ பகிடி விட்டதாய் எண்ணி எல்லோரும் சிரித்தார்கள்.

தேனுகாவுக்குக் கோபம் கோபமாக வந்தது. அவமானமாக இருந்தது. ஐயோ என்று கத்த வேண்டும் போல் தோன்றியது. அவள் கத்தவில்லை. அத்தனையும் தன்னைப் பலவீனமாக காட்டும் என்கின்ற யோசனையோடு அந்த எண்ணங்களை அடக்கிய வண்ணம் அவள் அவர்களைப் பார்த்து முறைத்தாள்.

‘இப்பிடி வழி மறிக்கிறது சட்டப்படி குற்றம் தெரியுமா?’ என்றாள்.

‘ம்… நாங்கள் என்ன கொலையா செய்தம்?’ என்றான் தரன்.

‘போறவைய மறிச்சுத் தொந்தரவு செய்யிறதும் குற்றம்தான்.’ என்றாள் தேனுகா.

‘அந்தக் குற்றத்திற்கு தண்டனை வாற நேரம் பாப்பம். இப்ப விக்விறதர் கவுசைப்பற்றிச் சொல்லுங்கோ.’ என்றான் தரன்.

‘வயசு வரவிட்டி நீங்களே போய் பார்த்துக்கொண்டு வாங்க.’ என்றாள் தேனுகா.

‘அதுக்கு நாள் இருக்குது. வயது வந்தாலும் எங்கட அப்பா அம்மா விடமாட்டினம்.’ என்றான் தரன்.

‘நோர்வேயில வாழ்றியள்… உங்களை அப்பா அம்மா விடமாட்டினம் எண்டு சொல்ல வெட்கம் இல்லையா?’ என்றாள் தேனுகா.

‘தமிழருக்கு எண்டு ஒரு கட்டுப்பாடு இருக்குதுதானே?’ என்றான் தரன். தரன் அவர்களுக்குத் தலைமை தாங்குவதை தேனுகா அவதானித்தாள்.

‘ஓ அப்ப நீங்கள் நுர்மன் இல்லை?’ என்றாள் தேனுகா எள்ளலாக.

‘இல்ல. நீங்கள் நுர்மனா?’ என்றான் தரன்.

‘ஓ… நுறுவீதம்.’ என்றாள் தேனுகா.

‘உங்கட தோல் கறுப்பு. கண் கறுப்பு… உங்களை நுர்மன் எண்டு நீங்கள் சொன்னாலும் அவங்கள் சொல்லுவாங்களா?’ தரன் தனது ஐயத்தை எழுப்பினான்.

‘யார் சொன்னா என்ன சொல்லாட்டி என்ன? சட்டம் சொல்லும்தானே? அதுதான் எனக்கு முக்கியம். சட்டம் சொல்லுறதுதான் செல்லுபடியாகிற நடமுறை.’ என்றாள் தேனுகா.

‘சரி அதை விடுங்க. நாங்கள் கேட்டதுக்குப் பதில் சொல்லுங்க.’ என்றான் தரன்.

‘அதுக்கெல்லாம் பதில் சொல்லேலாது. இப்ப மரியாதையா வழி விடுங்க.’ என்றாள் தேனுகா.

‘பதில் சொன்னாத்தான் வழிவிடலாம்.’

‘அடே தரன் உன்ர மாமாவடா.’ என்றான் ஆதித்தியன். தரன் அதற்குப் பின்பு ஒரு கணம்கூட தாமதியாது கதவைத் திறந்து கொண்டு சுரங்கரத நிலையத்திற்குள் ஓடினான். அவன் பின்னே மற்றவர்களும் வாலாக ஓடி மறைந்தனர்.

தேனுகாவுக்குத் தனது சுதந்திரம் மீண்டும் கிடைத்த நிம்மதி. பயம் இருந்தாலும் அதே சுரங்கரத நிலையத்திற்குள் தயக்கத்தோடு அவர்கள் பின்னால் சென்றாள்.

நல்ல வேளையாக அவர்களைப் நடைமேடையில் காண முடியவில்லை. அப்படியே சிலவேளை ஒஸ்லோசிற்றிக்குச் சென்றிருப்பார்களோ என எண்ணினாள்.

தரனின் மாமா நடைமேடையில் சுரங்கரதம் வருகிறதா என்று பார்த்த வண்ணம் நின்றார். தேனுகா நிம்மதியைச் சுவாசித்தாள்.

# 15

நியாயங்களும் அநியாயங்களும் அதை ஒப்பீடு செய்யும் மனித அனுபவத்திற்கு ஏற்ப வடிவம் எடுத்துக் கொள்ளும். ஒரு நிகழ்வை அல்லது நடத்தையை அவரவர் பார்க்கும் கோணத்தில் அதன் நியாய அநியாயங்கள் உருப்பெற்று உறுமிக் கொள்ளும். சிலரை அதற்கு ஒத்துப் போக வைக்கும். சிலரை அதற்கு எதிராக போர்க் கொடி தூக்க

வைக்கும். அந்த எதிர்ப்புச் சிலவேளை வன்முறையாக வெடிக்கும். சிலவேளை அந்த நிகழ்வு பலருக்கு ஞானத்தை தந்துவிட்டுச் செல்லும்.

தான் செய்தவை யாவும் தேனுகாவுக்குச் சரியாகவே தோன்றியது. அவள் தான் ஒரு நோர்வேப் பிரஜை என்கின்ற நினைவோடு வாழ்கிறாள். அவர்கள் கலாச்சாரத்தை தன் கலாச்சாரமாகவே எண்ணுகிறாள். அவர்கள் நியாய அநியாயங்களை தனதாக்கிக் கொள்கிறாள். அத்தால் அவள் நிறுவை அவள் பக்கமாகியது. அவள் பக்க நியாயங்கள் வலுவாக நிமிர்ந்து நின்றன. அவள் தான் செய்தவற்றிற்காக வெட்கப்படவோ, சமுதாயத்தில் இருந்து ஒதுங்கிக் கொள்ளவோ விரும்பவில்லை. தனது உரிமையையும் சுதந்திரத்தையும் முழுமையாக வரித்து உலாவர விரும்பினாள். நோர்வேயப் பெரும் சமுதாயம் அவளுக்கு இடையூறாக இருக்கவில்லை. அவர்கள் அந்த நிகழ்ச்சியையே மறந்து போயிருப்பார்கள். தமிழர் மத்தியில் நடமாடுவது பலவித சங்கடங்களை அவளுக்குத் தொடர்ந்தும் தந்தன. இந்த அற்பத்தனங்களை வெல்ல வேண்டும் என்கின்ற வெறியோடு அவள் தன்னை வழமைக்குத் தயார்படுத்தினாள்.

அந்த சனிக் கிழமை ஒஸ்லோவில் இருந்த முக்கிய மண்டபம் ஒன்றில் பரதநாட்டிய நிகழ்வு நடைபெறுவதாக அறிந்தாள். தேனுகாவுக்கு அங்கு செல்ல வேண்டும் என்கின்ற எண்ணம் எழுந்தது. அந்த இடத்திற்குச் செல்வதென்றால் ஒரே பேருந்தில் சென்று வரலாம். அப்படிப்பட்ட மத்திய பகுதியில் அந்த மண்டபம் அமைந்திருந்தது. ஒஸ்லோவின் மையப் பகுதியில் அமைந்திருக்கும் அந்த மண்டபத்திற்கு காரில் சென்றால் தரிப்பிடம் பெரும் பிரச்சனையாகும் அல்லது செலவாகிவிடும். பேருந்தில் செல்வது அந்த சிக்கல்களைத் தவிர்த்த சுதந்திரமான போக்குவரத்தாகும். தேனுகா அந்த நிகழ்வுக்குப் பேருந்தில் செல்வதாக முடிவு செய்தாள்.

வெள்ளி மாலை ஆறு மணிக்கு அந்த நிகழ்வு தொடங்கும் என்றிருந்தது. ஆறு மணிக்கு என்று தமிழர்கள் விளம்பரம் செய்தால் அது சில வேளைகளில் ஏழு மணிக்கும் ஆரம்பிக்காமல் இழுபடும் என்பது தேனுகாவின் அனுபவம். எதற்கும் தான் பிந்திப் போவதே நல்லதென முடிவு செய்தாள். பிந்திச் சென்றால் நிகழ்ச்சி தொடங்கி இருக்கும். விடுப்புப் பார்க்கும் சனங்களின் கவனம் மேடையை நோக்கி இருக்கும். தன்மீது வரவிருக்கும் தேவையில்லாத கவன ஈர்ப்புகளைத் தவிர்த்துக் கொள்ளலாம் என்பது அவள் கணிப்பாகியது. தமிழர்களுக்கு யானையின் ஞாபகம். கெட்டதை மாத்திரம் தூக்கிப் பிடிப்பதில் பன்னாடைகளாக அதீத கரிசனை. அத்தால் அவர்கள் இன்னும் தன்னை மறக்கவில்லை என்பது அவள் மனதை அடிக்கடி அரிக்கும் வேதனை. அதற்குத் தன்னால் என்ன செய்ய முடியும் என்பது மட்டும் அவளுக்குப் புரிவதில்லை.

தேனுகா மண்டபத்தை அடையும் பொழுது நேரம் ஆறு ஐம்பது ஆகிவிட்டது. கோடை கடந்து குளிர் காலடி எடுத்து வைத்த காலமது. மாலை வேளைக்குரிய அட்டகாசத்துடன் குளிர் மெதுவாக உரசிச் சென்றது. வீட்டிற்குத் திரும்பிப் போகும் பொழுது இன்னும் அதிகமான குளிராக இருக்குமெனத் தேனுகா எண்ணினாள். குளிருக்குச் சவால்விடும் மனிதர்கள்தான் இங்கு வாழ முடியும். வாழ்கிறார்கள். பனியும், பனிநிறைந்த காடும் அவர்கள் சொர்க்கம். தமிழர்களுக்குத் தொலைக்காட்சியும் தொலைபேசியும் சொர்க்கம் என்பது தேனுகாவுக்கு தெரியும். எப்போதாவது கலை நிகழ்ச்சிகள். இலக்கியம் எம்மவருக்கு எட்டாதத் தொலை. தொலைக்காட்சியில், திரைப்படத்தில், தொலைந்து போன இனத்திற்கு வாசிப்பிற்கு எங்கு நேரம்? தேனுகா தமிழ் வாசிப்பதில்லை. வாசித்தாலும் முழுமையாகப் புரிந்து கொள்ள முடிவதில்லை. நோர்வே மொழியில் வந்த பல நாவல்களை அவள் வாசித்திருக்கிறாள். அது அவளது முக்கிய பொழுது போக்கு.

வெள்ளிக் கிழமைக்குரிய கேளிக்கை நாடும் சனங்களின் நடமாட்டம் தெருவில் களைக்கட்டிவிட்டது. வெள்ளிக் கிழமை ஐரோப்பியரின் திருவிழா நாள். இங்கு பிறந்த பிள்ளைகளுக்கும் அது திருவிழா நாள். அதைக் கொண்டாடும் துணிவு பலருக்கு இருப்பதில்லை. ஐரோப்பாவில் வாழ்ந்தாலும் பழைய பிடிமானங்கள் எப்பொழுதும் கழுத்தை இறுக்கிக் கொண்டே இருக்கும். அதை மீறுவதற்கு தேனுகா பல முறை போராடி இருக்கிறாள். அதில் தோல்வி கண்டிருக்கிறாள். சிலவேளைகளின் அதை மீறித் தனது விருப்பை நிறைவேற்றிப், பின்பு வீட்டில் அன்னியர் போல உலாவியிருக்கிறாள். கழுத்தை நெரிக்கும் பிடிமானங்கள் கண்டங்கள் கடந்தும், பரம்பரைகள் தாண்டியும், செழிப்புடன் தழைக்கின்றன. நேரம் செல்லச் செல்ல விடுதிகளும் கழியாட்டநிலையங்களும் களைகட்டத் தொடங்கும் என்பது அவளுக்கு நன்கு புரியும். பனிகொட்டாத வசதிக்கு ஏற்ப பாதணிகள் அணிந்திருந்தாலும் குளிரிடம் இருந்து தப்பிக்கொள்ள மேலங்கியோடே தேனுகா நிகழ்ச்சிக்கு வந்தாள்.

மண்டபத்தை அடையும் வரைக்கும் தன்னை யாரும் உற்றுப் பார்ப்பதான உறுத்தல் இல்லாமலே தேனுகா சென்றாள். சுதேசிகள் உற்றுப் பார்க்க மாட்டார்கள். அவர்கள் வாழ் நாள் முழுவதும் உற்றுப் பார்ப்பது போல தேனுகா எதுவும் செய்துவிடவில்லை. தமிழர்கள்... சில வெளிநாட்டவர்கள்... அவர்களை மாற்ற முடியாது. தேனுகாவுக்கு அதை எண்ண வெறுப்பாக, கோபமாக... திடீரென உடம்பு முழுவதும் சூடேறுவது போல உணர்ந்தாள். குளிரிலும் தேகம் சூடேறியது. இதயம் அவசரமாகப் படபடத்தது. எதுவும் இலகுவில் மாறிவிடுவதில்லை. எண்ணங்களுக்கும், உணர்ச்சிகளுக்கும் தடைபோடவும் முடிவதில்லை. மண்டப வாசலில் சில தமிழர்கள் நின்றார்கள். அதுவும் அரட்டை அடிக்கும் தமிழர்களும், புகை பிடிக்கும் தமிழர்களும், சில்லறை விடயங்களை அலசும் கண்களோடு தன்னைப் பார்ப்பதை அவள் கவனித்தாள். இதற்கெல்லாம் அஞ்சுபவள் நான் அல்ல என்கின்ற துணிவோடு தேனுகா மண்டப வாசலை நோக்கி நடந்தாள்.
அதில் வயது போன ஒருவர் கழுகுக் கண்களோடு அவளைப் பார்த்தார். அவரை தேனுகா இதற்கு முன்பும் சில நிகழ்ச்சிகளில் கண்டிருக்கிறாள். அவருக்கு அப்பாவின் வயது அல்லது அதைவிட வயது கூடவாக இருக்க வேண்டும் என்பது அவள் கணிப்பு. தாடி மீசை தொடக்கம் தலைமயிரெல்லாம் வெள்ளி முலாம் பூசியதாய் மினுமினுத்தன. கையில் ஒரு சிகரட்டு பேயின் கண் போல அரைவாசியாகப் புகைந்தது. அவர் மற்றவர்களைப் பற்றி விமர்சிப்பதையும் தேனுகா கேட்டிருக்கிறாள். இப்பொழுது அவரது முழுப் பார்வையும் தன்மீது விழுவது அவளுக்கு அசௌகரியத்தை உண்டு பண்ணியது. அவர் விமர்சனம் என்கின்ற போர்வையில் அசிங்கமான வக்கிரத்தைக் கொட்டப்போகிறார் என்பது அவளுக்குப் புரிந்தது. அவர் பார்வை அவள் மீது விள அவர் மீது மற்றவர்களின் பார்வை விழுந்தது. கூத்துப் பார்க்கும் குழந்தைகளின் ஆர்வம் அவர்கள் கண்களில். நடிப்பு அல்ல இது நிஜ வாழ்க்கை. உணர்ச்சிகளோடு எரியும் மனிதனின் வேதனை எரிபவனுக்குத்தான் புரியும். எங்கள் சமுதாயம் மற்றைய மனிதரின் உணர்ச்சிகளைப் புரிந்து கொள்ள முயலாத சமுதாயத்தின் நீட்சி. மற்றவர் நிலையில் தன்னை வைத்து அவர்படும் வேதனையை எண்ண முயலாத சுயநலம்... சோம்பேறித்தனம். வக்கிரத்தை வெட்கமில்லாது கொட்டித்தள்ளும் வழக்கம். அந்த வதையைப் பார்த்து இரசிக்கும் குரூரம்.

தேனுகாவுக்கு நிலைமை புரிந்தது. நாடகம் பார்க்கும் இரசிகர்கள் அவரைப் பார்ப்பதும் தன்னைப் பார்ப்பதும் புரிந்தது. அவர் வாய் திறந்தால் ஊமைப்படம் பேசும் படமாகும். குரூரமான சொற்கள் கொண்டு இரசிகர்களைக் குளிர்விப்பார். தேனுகாவுக்கு அவர் ஏதாவது சொன்னால் எதிர்த்துக் கதைப்பதா அல்லது பேசாது போவதா என்பதில் போராட்டமாகியது. எதற்கும் பொறுமை முதன்மையானது. பொறுமை இளக்கும் சந்தர்ப்பம் வந்தால் அப்பொழுது பார்த்துக் கொள்வோம் என்கின்ற முடிவோடு அவள் சிங்கத்தின் குகைக்குள் போவதான ஒரு உணர்வுடன் மண்டபத்தை நோக்கி நடந்தாள். சிங்கங்கள் அணிவகுத்து நிற்க அந்த அணிவகுப்பின் நடுவே புள்ளிமானான தான் நடப்பதான உணர்வு அவளுக்கு. வீரசிங்கங்கள் அல்ல இவர்கள். வெட்கம் கெட்ட விவஸ்தை இல்லாத குரூர கிழட்டுச் சிங்கங்களென அவள் எண்ணினாள். சுயமாகக் கொன்று தின்னும் மனவலிமை இல்லாதவர்கள்.

அவள் கடக்கும் வரையும் அந்த மனிதர்கள் அவளை விழுங்குவது போலப் பார்த்தார்கள். விக்பிறதரில் சிங்கோடு கொண்ட உறவை இங்கே வைத்துக் கொண்டால் என்ன என்பது போல இருந்தது அவர்கள் பார்வை. என்றாலும் அவர்கள் எதுவும் சொல்லவில்லை. அது தேனுகாவுக்கு ஒருவகையில் நிம்மதியாகியது. நேருக்கு நேரே சொல்லும் பொழுது வாயை மூடிக்கொண்டு போவதற்கு அசுரப் பிரயத்தனம் செய்ய வேண்டும். அப்படி ஒரு இக்கட்டு வராதது அவளுக்கு மகிழ்ச்சியாகிற்று. அந்த மகிழ்ச்சி அடுத்தகணம் தொலைந்து போயிற்று.

'உள்ள என்ன பரதநாட்டியம் நடக்க போகுதோ இல்லாட்டி வேற ஏதும் சோ நடக்கப் போகுதோ?' என்றார் அவர்.
'பிக்பிறதர் அண்ண பிக்பிறதர். இண்டைக்கு நல்ல சோக்கா இருக்கும்.' யாரோ ஒருத்தன் சொன்னான்.
தேனுகாவுக்கு அந்த வசனங்கள் லேசராய் காதுகளைத் துளைத்தன. அவள் தேகம் கோபத்தால் சூடேறியது. திரும்பிச் சென்று அந்த கிழவருக்குக் கன்னத்தைப் பொத்தி அறைய வேண்டும் போல் ஆத்திரம் எழுந்தது. நடையின் வேகம் குறைந்தது. கால்கள் நடக்க மறுத்துத் துவண்டன. கோபம், இயலாமையால் உந்தப்பட்டுச்'செலுட்டு நாய்கள்.' என்கின்ற சொல்லே அவள் வாயில் வந்தது. அவள் அதை வெளியே உமிழாது, அவர்களைத் திரும்பிப் பாராது உள்ளே நடந்தாள்.

ஒட்டு மொத்தமாய் சிரிப்பது கேட்டது. உடல் கூசியது. இதயம் வெடிப்பதாய் வேதனை நெஞ்சைப் பிளந்தது.'இந்த சமூகத்தோடான உறவு உனக்கு வேண்டுமா?' என்று அவளது மனது மீண்டும் மீண்டும் அவளைக் கேட்டது. சந்தோசம் போய்விட்டது. அவமானம், அலமலக்கம் தொடர்ந்தது. முன்னே வைத்த காலைப் பின்னே வைக்க விரும்பாதவளாய் உள்ளே சென்றாள்.

தேனுகா எதிர் பார்த்தது போல நிகழ்ச்சி தொடங்கவில்லை. நிகழ்ச்சி தொடங்கும் தறுவாயில் இருந்தது. இவளை யார் முதலில் கண்டார்களோ தெரியாது. தேனீக்கள் பாடுவது போல அவள் வரவு பரவியது. எல்லோர் பார்வையும் இப்பொழுது மேடைக்கு எதிர்த்திசையில் திரும்பியது. தேனுகா இதை எதிர்பார்க்கவில்லை. இவ்வளவு மட்டமான மனிதர்களாய் இருப்பார்கள் என்று அவள் எண்ணவில்லை. சில கணங்களில் பார்வை திரும்பிவிடும் என்கின்ற அவள் கணிப்புப் பலிக்கவில்லை. சலசலப்பு அடங்கவில்லை. அறிவிப்பாளர் மேடையை நோக்குமாறு பார்வையாளர்களைக் கேட்டுப் பார்த்தார். யாரும் அதைக் கேட்கவில்லை. தலைகள் திரும்பவில்லை. சிலர் கதிரைகளையே பின்புறமாகத் திருப்பிப் போட்டுவிட்டு அவளைப் பார்த்தனர்.

நிகழ்ச்சி ஒழுங்கு செய்தவர்கள் தேனுகாவை நோக்கி வந்தார்கள். தேனுகாவுக்குப் புரிந்தது. அவள் எழுந்தாள். யாரையும் பார்க்காது வெளியே நடந்தாள். வெளியே வந்த பொழுது விஷ ஜந்துக்களிடம் இருந்து விடுதலை பெற்றதான உணர்வு. என்றாலும் அடிமனதில் அடங்காது வலித்தது. அவமானம் அவளைத் தின்றது. நிம்மதி வேண்டுமென எண்ணியவள் எதிரே இருந்த பொப்பிற்குள் புகுந்தாள்.

# 16

வெண் முகில்கள் ஓடி ஒளியச் சூரியன் நிர்வாணமாக உச்சியில் ஆண்மையோடு வந்து நின்றான். அவன் ஆண்மையில் திமிறிய பொன்கதிர்களை அவன் காதலியான பூமி மடந்தையை நோக்கி வீரியத்தோடு செலுத்தினான். ஆண்களும் பெண்களும் பூங்காக்களில் மல்லாந்து படுத்தபடி அவன் ஆண்மையின் தழுவலை ஆற அமர அனுபவித்தனர். ஆதவன் சூரியச்சத்தைத் தந்து, தோலின் நிறத்தை மாற்றி, கதகதப்பை மேனிக்கு ஊட்டுகிறான் என்பது அவர்கள் சுகிப்பு. சிலருக்குத் தோல் புற்று நோயையும் அவன் தருவான் என்கின்ற உண்மை சிலவேளை உறைப்பதில்லை. சூரியனின் சீற்றம் சுடும். அழிவைத்தரும். மனிதனின் சீற்றத்திலும் நிதானம் பறிபோகும். கடும் சொற்கள் கக்கப்படும். வன்மம் தீர்க்கப்படும். வன்முறையாக அது வெடிக்கும். உறவுகள் முறிந்து போகும். பின்பு அதை எண்ணிப் பலருக்கும் உள்ளம் துடிக்கும். கோபமும் காமமும் மனிதன் அடக்க நினைப்பவை. ஆண்மை கொண்ட ஆதவக்கதிர்களாய் அடங்க மறுப்பவை. மனித இனம் தோன்றியதில் இருந்து தொடரும் போராட்டமிது. வென்றவர்கள் சரித்திரங்களாக... வெல்லாதவர்கள் சராசரியாக...

தேனுகா வேலை முடித்து வெளியே வரும் பொழுது அவளையும் கதகதப்பு தழுவிச் சென்றது. அந்தக் கதகதப்பை அனுபவித்தால் நல்லது என்கின்ற எண்ணம் வந்தாலும் பசி வயிற்றைக் கிள்ள அந்த எண்ணத்தைக் கைவிட்டாள். கடைகளில் சாப்பிடுவது இப்பொழுது அவளுக்குப் பிடிப்பதில்லை. இயலுமான அளவிற்கு உடன் மரக்கறி, மீன் போன்றவற்றை வாங்கிச் சமைப்பது அவள் வழமையாகிற்று. அவள்'மெனி' என்னும் கடையில் மீன் வாங்கினாள். பின்பு தான் செல்ல வேண்டிய பேருந்தில் ஏறி அமர்ந்தாள்.

பஸ்சிற்குள் ஏர்கொன்டிசன் வேலை செய்தது. அது அவளுக்கு மிகவும் இதம் தந்திற்று. ஆசனத்தில் அமர்ந்த பின்பு வெளியே பராக்குப் பார்த்தாள். தேனுகா அவனை எதிர்பார்க்கவில்லை. அவள் ஒரு கணம் திடுக்குற்றுப் போனாள். அவன் தன்னைக் காணவில்லை என்பது அவளுக்கு நிம்மதியாகிற்று. எங்கே இவ்வளவு அவசரமாகச் செல்கிறான் என்பது அவளுக்குப் புரியவில்லை. அவனைப் பார்க்க வேண்டும் போல் ஒரு உந்தல். அதேவேளை அவன் பார்த்தால் வில்லங்கம் என்பதும் புரிந்தது. அவன் அவசரமாகச் சென்று ஒரு கட்டடத்திற்குள் புகுந்தான். அவன் கண் முன்பு இல்லாவிட்டாலும் அவனைப் பற்றிய நினைவுகள் மட்டும் அவளை சுற்றிச் சுழன்றன. அவனுக்கும் அவளுக்கும் இருந்த உறவு அவள் நிகழ்ச்சியில் பங்கு பெறப் போகிறாள் என்றவுடனேயே விரிசல் கண்டு விட்டது. சிங்கோடு நடந்த அந்த நிகழ்வு அவர்கள் உறவுக்கு முற்றுப்புள்ளி வைத்தது. உறவு முறிந்ததை ஏற்க முடியாது அவன் கொலை வெறியோடு அலைவான் என்பது தேனுகாவுக்கு தெரியும். அவன் அப்படிப்பட்ட இரகத்தில்

ஒருவன். நோர்வேயின் சட்டங்கள், நடைமுறைகள், தனிமனித சுதந்திரத்தை பாதுகாப்பவை. அதை மதித்துப் பெரும்பான்மையானவர்கள் நடந்தாலும் சிலர் புறநடையாக இருப்பதுண்டு. அதில் இவனும் ஒருவன் என்பது தேனுகாவுக்கு கலக்கம் தரும் உண்மையாக இருந்தது.

அவனும் இங்கே பிறந்து வளர்ந்தவனே. நிச்சயம் எல்லைகள் அவனுக்குத் தெரியும். அவன் அதை இதுவரை மீறியது இல்லை. இனியும் அவன் மீறமாட்டானெனத் தன்னை வலுவிற்குச் சமாதானப்படுத்த முயன்றாள். என்றாலும் அவனை நேருக்கு நேரே பார்க்கும் துணிவு தேனுகாவுக்கு இல்லை. துரோகம் இல்லாவிட்டாலும் துரோகம் செய்ததான உணர்வு அவளைத் தள்ளி மிதித்தது. இனி ஆளையாள் சந்திக்கக் கூடாது என்பதே அவள் விருப்பம். அது நடந்துவிடுமோ என்கின்ற பயமும் இடையிடையே மனதில் எழுந்து இறுமும். சிறிது நேரம் அவனைப் பற்றிய சிந்தனையில் இருந்தவள் பின்பு தனது கைப்பையில் இருந்த ஒரு நாவலை எடுத்து வாசித்தாள். கதையை வாசித்த பொழுதுகூட அவன் நினைவு இடையிடையே எட்டிப் பார்த்தது. அந்த உறவு முறிந்தமைக்குத் தானே முழுப் பொறுப்பும் ஏற்றுக் கொள்ள வேண்டுமென தேனுகா எண்ணினாள். தான் செய்தவை தன்னைப் பொறுத்தளவில் சரியே. அதற்காகத் தான் இனி ஒரு போதும் கவலைப்பட முடியாதெனத் தேனுகா சமாதானமாக நினைத்தாள். மீண்டும் நாவலில் தனது கவனத்தைச் செலுத்தினாள். பேருந்து புறப்பட்டது.

வீட்டிற்கு வந்து சேர்ந்த பொழுது பசி வயிற்றைப் பிறாண்டியது. தேனுகா அனேகமாக நோர்வேஜிஜன் சாப்பாடு சமைப்பாள். எப்போதாவது ஆசை வந்தால் தமிழ்ச் சாப்பாடு செய்வாள். இன்று அவளுக்குத் தமிழ்ச் சாப்பாடு செய்ய வேண்டும் என்கின்ற ஆசை எழுந்தது. மீன் குளம்பு, பருப்பு, கீரை, ஆகிய கறி வைப்பதென முடிவு செய்துவிட்டுச் சமையலில் இறங்கினாள்.

சமையலில் இறங்கிய பின்பு தன்னைச் சுற்றிய கவலைகளைத் தேனுகா மறந்து போய்விட்டாள். அவளுக்குச் சமைத்து முடிப்பதற்கு அதிக நேரம் பிடிக்கவில்லை. நான்கு அடுப்பும் இரண்டு கைகளும் சேரும் பொழுது நிமிட கணக்கில் சமையலை முடித்துக் கொள்ளலாம். அப்படி முடித்துக் கொள்ளும் திறமை அவளிடம் இருந்தது.

தேனுகா சமைத்து முடிந்ததும் சாப்பிட்டாள். பின்பு அந்த நாவலைத் தொடர்ந்து வாசித்தாள். அதன் முடிவு எப்படி இருக்கப் போகிறது என்கின்ற பரபரப்பு அவளை அலைக் கழித்தது. என்னதான் பரபரப்பு என்றாலும் தேனுகா ஆற அமர இரசித்து இரசித்து வாசிப்பாள். அதில்தான் அவளால் முழுமையை உணர முடியும். நாவல் வாசிக்கும் பொழுது தன்னைச் சுற்றி என்ன நடக்கிறது என்பதை உணர முடியாதவளாய் நாவலில் ஒன்றிப் போவாள். அவளது அந்த ஒன்றலைக் கெடுப்பது போல அழைப்பு மணி அலறியது? யாராக இருக்கும் என்கின்ற கேள்வியோடு நாவலை வைத்துவிட்டுப் போய் கதவை முன்யோசனை இன்றித் திறந்தாள்.

அவள் அதிர்ந்து போய்விட்டாள். கதவைத் திறந்திருக்கக் கூடாது. ஓட்டையால் பார்த்துவிட்டுத் திறந்திருக்கலாம். எந்த முன்யோசனையும் இல்லாது கதவைத் திறந்தது முட்டாள்த்தனம் என்பது தேனுகாவுக்குக் காலம் கடந்து புரிந்தது. அவள் உள்ளே வாவென்று சொல்லும் வரையும் அவன் அங்கு நிற்கவில்லை. கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே வந்தான். அவனுக்கும் தமிழ்ச் சாப்பாடு பிடிக்கும். உறைப்பும் சாப்பிடுவான். மீன்குழம்பு வாசத்தை முகர்ந்தவன் சமையல் அறைக்குச் சென்றான். தேனுகா கதவைச் சாத்தினாள். அது முழுமையாக மூடாதவாறு இடைவெளி இருக்க விட்டாள். திறாங்கை இப்பொழுது நம்ப முடியாது என்று அவள் அடிமனது சொல்லியது. எதுவும் செய்ய முடியாதவளாய் அவனைப் பின்தொடர்ந்தாள்.

சமையல் அறைக்குச் சென்றவன் ஒவ்வொரு பாத்திரமாய் திறந்து பார்த்துவிட்டு தட்டு எடுத்துச் சாப்பாடு போட்டான். இதையெல்லாம் பார்த்த தேனுகாவுக்கு அதிசயமாக இருந்தது. இவன் பழைய திறாங் இல்லை என்பது புரிந்தது. உள்ளே விட்டாகிற்று. இனி மெதுவாக இவனை வெளியேற்றுவதுதான் புத்தியென எண்ணினாள். சாப்பிடட்டும். சாப்பிட்ட பின்பு கதைக்கலாமென முடிவு செய்தாள். அவன் சாப்பிடும் வரைக்கும் நாவல் வாசிப்போமென எண்ணியவள் பின்பு அந்த எண்ணத்தை மாற்றிக் கொண்டு தொலைக்காட்சியை இயக்கினாள். சோபாவில் அமர்ந்தாள். அவன் சாப்பாட்டைத் தட்டில் போட்டு எடுத்துக் கொண்டு கோலுக்கு வந்தான். நின்றபடியே கையால் சாப்பிட்டான். திறாங் முன்பெல்லாம் குச்சியால் சாப்பிடுவான். தேனுகாவோடு சேர்ந்த தொடக்க காலங்களில் அதைக் கடுமையாகக் கடைப்பிடித்தான். பின்பு கரண்டியால் சாப்பிட்டான். அதன் பின்பு தேனுகாவோடு சேர்ந்து கையால் சாப்பிடத் தொடங்கினான். இப்பொழுது சோறு என்றால் கையால் சாப்பிடுகிறான். தேனுகாவுக்குத்

தமிழ்ச்சாப்பாடு கையால் சாப்பிட்டால்தான் பத்தியப்படும் என்கின்ற விசித்திர எண்ணம். தட்டோடு கோலுக்குள் வந்தவன் வெறுப்பாகத் தேனுகாவைப் பார்த்தான். திறாங் தேனுகாவுக்குப் பின்பக்கமாக நின்றான். இருந்து சாப்பிடும் பொறுமை அவனிடம் இல்லை. சோபாவில் இருந்த தேனுகாவால் அவன் பார்வையை பார்க்க முடியாவிட்டாலும் அவன் கோபமாய் உள்ளான் என்பதைக் கற்பனை செய்ய முடிந்தது.

அவன் கோலை ஒரு முறை சுற்றிப் பார்த்தான். இந்த வீட்டிற்கு முதன் முதல் இன்றுதான் வந்திருக்கிறான். கோலில் விதம் விதமான பரதநாட்டியப் படங்கள் தொங்கின. அவை அவனைச் சாந்தமாக்கின. அதை நாசம் செய்வது போல மறுகரையில் தொங்கிய விக்விறதர் படங்கள் அவனை எரியவைத்தன. அவன் பார்வை எங்கெல்லாம் ஊசலாடுகிறது என்பதைப் பார்க்க முடியாதவளாய் தேனுகா தொலைக்காட்சியைப் பார்த்தாள். திறாங் ஒரு உருண்டை சோற்றை வாய்க்குள் திணித்துச் சுவைத்தான். அவனுக்குத் தேனுகாவைப் பிடிக்காவிட்டாலும் அவள் சமைத்த சாப்பாடு பிடித்தது. நோர்வே மக்கள் காரம் நிறைந்த சாப்பாடு சாப்பிடுவதில்லை. காரம் இல்லாத சாப்பாடு சாப்பிடுவது ஆசியர்களுக்கு பச்சைத் தண்ணியை சுவைப்பது போல.

மீண்டும் ஒரு உருண்டையை வாய்க்குள் தள்ளியவனுக்கு திடீரெனக் கோபம் வந்தது.'இவள் ஒரு தமிழ் பெண் இல்லை. இவள் ஒரு ஆசியப் பெண் இல்லை. இவள் ஒரு ஐரோப்பியப் பெண்கூட இல்லை. ஐரோப்பியப் பெண்களிலும் எத்தனைபேர் அரங்கத்தில் உறவு கொள்வார்கள்? இவள் எப்படியான ஒரு பெண்? இவளைக் கொன்றால்கூட அதில் நியாயம் இருக்கிறது.' எனத் தனக்குள் எண்ணினான்.'இப்படியே இவள் கழுத்தை நெரித்துக் கொலை செய்துவிட்டுப் போனால் என்ன?' என்று அவன் மீண்டும் நினைத்தான்.

தேனுகாவுக்குப் பயமாக இருந்தாலும் அதை காட்டிக் கொள்ளாது தொலைக்காட்சியைப் பார்ப்பதாய் பாவனை செய்தாள். ஆபத்தென்றால் வெளியே தப்பி ஓடிவிட வேண்டுமென அவள் திட்டம் தீட்டினாள். அவனோடு எதிர்த்துப் போராடுவது புத்தியல்ல என்பது அவள் எண்ணம். கதவு திறந்து கிடப்பது அதற்கு வசதியாகிற்று. வெளியே சென்று கத்தினால் யாராவது உதவிக்கு வருவார்கள். தேனுகா தன்னை அதற்குத் தயார் செய்தாள்.

மூன்றாவது உருண்டையை வாயருகே கொண்டு சென்ற திறாங் அதைச் சாப்பிடாது தட்டில் போட்டான். அவனுக்குக் கோபத்தில் கைகள் நடுங்கின. தட்டைப் பக்கத்தில் இருந்த அலுமாரியில் வைத்துவிட்டுத் தேனுகாவின் பின்னால் சோபாவில் ஒட்டியபடி வந்து நின்றான். பின்பு கோபமாக,

'ஆர் டு தமிழ் யென்தா?' நீ ஒரு தமிழ் பெண்ணா?

'நைய்.' இல்லை.

'ஆர் டு ஆசியாதிஸ்க் யென்தா?' நீ ஒரு ஆசியப்பெண்ணா?

'வெத் இக்க.' தெரியாது.

'ஆர் டு நொர்க்ஸ் யென்தா?' நீ நோர்வேஜிஜ பெண்ணா?

'யா. எய் போலர் மை செல்வ் நொர்ஸ்க் யென்தா.' ஓ நான் நொர்வெஜிஜ பெண்ணாகத்தான் உணருகிறேன்.

'கார்டு செத் ஒன்டிலி நொர்ஸ்க்க யென்தா கட்ட செக்ஸ் இ சென?' ஒழுங்கான நொர்வெஜிஜ பெண் அரங்கத்தில உடலுறவு கொண்டதை நீ பார்த்து இருக்கிறியா?

'வா டு திறென்கர் நு?' உனக்கு இப்ப என்ன வேணும்?

'எய் திறென்கர் எத் ஸ்வார்.' எனக்கு ஒரு பதில் வேணும்.

'எய் கான் இக்க ஸ்வாற பொதெ.' என்னால இதுக்குப் பதில் சொல்ல முடியாது.

'யா. டு கார் ஒப்போற்ற இ சென சொம் என் கூற. வுர்டன் டு கான் ஸ்வாற போதெ? டு கார் இக்க நுவ ஸ்கம் பொலல்ச' நீ அரங்கத்திலேயே ஒரு வேசி மாதிரி நடந்தாய். உன்னால எப்பிடி இதுக்குப் பதிலளிக்கேலும்? உனக்கு மானம் என்கின்ற உணர்வே கிடையாது.

'கோல் செப்த்.' வாய மூடு.

'யா... சான்கெத் வில் பிறன்ன லேவண்ட.' ஓ உண்மை உயிரோட எரிக்கும்.

தேனுகாவுக்கு அவன் பேச்சை அதற்கு மேல் கேட்க முடியவில்லை. அவள் பொறுமையின் எல்லையை எப்பொழுதோ தாண்டி விட்டாள். வெடித்துக் குமுறும் எரிமலையாக அவள் தன்னைக் கட்டுப்படுத்த முடியாதவளாய் கோபமாகச் சோபாவில் இருந்து எழுந்தாள். அவனைப் பார்த்து வெளியே நோக்கிக் கையை நீட்டிய வண்ணம்,'கோ உத்.' (வெளிய போ) எனக் கத்தினாள்.

'ம் எய் வில் கோ உத். மென் எய் மோ திறேப்ப டை போர் டென்.' நான் வெளிய போகத்தான் வேணும். அப்பிடி போறத்துக்கு முதல்ல உன்ன நான் கொலை செய்ய வேணும். என்றான்.

தேனுகாவுக்கு அவன் வந்த நோக்கமும் தான் அகப்பட்டுக் கொண்ட சூழ்நிலையும் புரிந்தது. அவனிடம் இருந்து தப்பி வெளியே ஓட வேண்டும் என்பது குறியாகியது. அவள் சமாளித்து ஓட முயலும் முன்பு அவன் திடீரெனப் பாய்ந்து அவளது கழுத்தை இரு கைகளாலும் பிடித்து இறுக்கினான்.

தேனுகாவுக்கு மூச்சு முட்டியது. கண்கள் இருண்டன. குரல் தொண்டையை விட்டு வெளியே வர மறுத்தது.'நான் செத்து போகக் கூடாது... நான் செத்து போகக் கூடாது.' என்று எண்ணிய வண்ணம் கைக்கு ஏதும் தட்டுப்படுகிறதாவென்று அவள் கைகளால் தடவிப் பார்த்தாள். எதுவும் தட்டுப்படவில்லை. தேனுகா உதற உதற அவளை அலுமாரியுடன் சேர்த்து வைத்து திறாங் கழுத்தை நெரித்தான். ஒருவாறு தேனுகாவின் கையில் கனதியான கண்ணாடிக் கோளம் ஒன்று அகப்பட்டது. அவள் அதை இழுத்த வேகத்தில் அவன் தலையை நோக்கி அடித்தாள். அவன் கழுத்துப் பிடி தளர்ந்தது. மெல்ல மயங்கி நிலத்தில் வீழ்ந்தான்.
தேனுகா அவசரமாக அவனிடம் இருந்து விலகித் தூரே நின்று அவனைப் பார்த்தாள். அவன் மீது வெறுப்பாகவும் கோபமாகவும் இருந்தது. மயங்கி கிடப்பவனைக் கொலை செய்தால் தொல்லை தீர்ந்தது என ஒரு கணம் தேனுகா எண்ணினாள். பின்பு அது தப்பு என முடிவு செய்துவிட்டு முன் வீட்டிற்கு ஓடினாள். சிறையிருக்க நான் பிறக்கவில்லையென அவள் முணு முணுத்துக் கொண்டாள்.

# 17

தேனுகாவின் நிகழ்ச்சிக்காக வெள்ளமாகச் சனம் அந்தக் கோலில் அலை மோதியது. அது ஒஸ்லோவின் மத்திய பகுதியில் இருக்கும் ஒரு பெரிய அரங்கம். தேனுகாவுக்கு அதன் பரீட்சயம் மறக்க முடியாத நினைவின் கல்வெட்டு. அங்கே இன்று வந்திருந்த அனேகமானோர் சுதேசிகளே. அங்கொன்றும் இங்கொன்றுமாய் ஒரு சில சுதேசிகளுடன் ஒன்றாய் கலந்த தமிழர்களும், புரட்சி விரும்பும் தமிழர்களும் வந்திருந்தனர். அவர்களோடு ஒரு சில வேற்று நாட்டவர்களின் தலைகளும் தென்பட்டன.

தேனுகா மண்டபத்திற்கு வருவதற்காக விசேடமான கார் அனுப்பி வைத்திருந்தார்கள். அந்தக் கார் வரவும் அவளை வரவேற்பதற்காய் நிகழ்ச்சி ஒழுங்கு செய்தவர்கள் வாசலுக்கு வந்தார்கள். வந்திருந்த பத்திரிக்கைக் காரர்களும் தொலைக்காட்சி நிறுவனத்தினரும் அவளைப் பதிவு செய்ய முந்தியடித்தார்கள். தேனுகா சிரித்த வண்ணம் எல்லோருக்கும் கை காட்டிச் சென்றாள். அவமானப்பட்டது போதும் இனி ஆழ வேண்டும் என்கின்ற அவா அவள் கண்களில் தெறித்தது. அடங்கிப் போகும் வரைக்கும் ஆட்டி வைக்கும் இந்த உலகம் துணிந்துவிட்டால் அதுவே அடங்கிப் போவதை அவள் அறிந்துவிட்டாள்.

நிகழ்ச்சி நடத்துபவர்கள் தேனுகாவை அழைத்துச் சென்று மேடைக்குப் பக்கத்தில் இருந்த இளைப்பாறும் அறைக்குள் இளைப்பாற விட்டார்கள். பின்பு மேடையில் நிகழ்ச்சி தொடங்க இருப்பதைப் பற்றி ஒலி பெருக்கியில் அறிவிக்கப்பட்டது. எங்கும் கரகோசம். அது வானத்து இடியோசையைப் பூமிக்கு கொண்டு வந்ததான பிரமை உண்டு பண்ணியது. இரசிகர்கள் தேனுகா தேனுகாவென ஆரவாரம் செய்தார்கள். தேனுகாவுக்கு இப்பொழுது இது பழகிப் போய்விட்ட ஒன்று. இரசிகர்களின் ஆர்வம் அவளை மேலும் உற்சாகப்படுத்தியது.
அவளை வருமாறு அறிவிப்பாளர் குரல் கொடுத்தார். தேனுகா துள்ளி எழுந்து கொண்டாள். அரங்கம் அதிர்ந்தது. தேனுகா மேடை ஏறினாள்.

தேனுகாவுக்கு அந்த மண்டபத்தில் இருப்பதற்கு அனுமதி மறுக்கப்பட்டது ஒரு காலம். அன்று கோலை விட்டுத் தமிழர்களால் வெளியேற்றப்பட்ட நிகழ்வு அவளை புது மனுசியாகப் புடம் போட்டது. எது தமிழர்களால் கதைக்கப்படுவதில்லையோ, எதைத் தமிழர்கள் இருட்டில் மட்டும் நடக்கும் இரகசிய அனுபவிப்பு என்று நினைத்தார்களோ, அதையே அவள் பேசுபொருள் ஆக்கினாள். அவமானம் என்பது அவளால் அலைமோதும் நகைச்சுவையாக்கப்பட்டது. காயப்படுத்துவது அவள் நோக்கமில்லை. சிந்திக்கத் தூண்ட வேண்டும் என்பதே அவள் நோக்கமாகியது. நகைச்சுவையோடு சிந்திப்பது அலாதி அல்லவா? அவளுக்கு அது பிடித்திற்று. பலருக்கும் அது மகிழ்வு தந்தது.

அதுவரை தேனுகா தேனுகா எனக் கத்திய கூட்டம் தேனுகா பேசத் தொடங்கியதும் அமைதியாகியது. அதன் பின்பு அவர்களின் சிரிப்பொலி வானை முட்டியது.

சண்முகமும், கமலமும் மகள் மேடையில் தாரகையாக மிளிர்வதைப் பார்த்து இரசித்தார்கள். மாற்றங்களில் இருந்து மனிதர்கள் தப்பிவிட முடியாது என்பதை அவர்கள் புரிந்ததால் உலக வாழ்வு இப்போது அவர்களுக்கு மீண்டும் இனிக்கிறது. அவர்கள் அகராதியில் மானம், அவமானம், சரி, பிழை என்பன நாட்டிற்கேற்ப மாறுதல் பெற்றது. அல்லது அது தொட்டுக்கொள்ள மட்டும் என்பதாகிவிட்டது. அதை இழப்பவன்தான் ஞானி என்பது இறை வாக்கல்லவா? அவர்கள் அந்த ஞானத்தைப் பெற்றுக்கொண்டனர்.